கழக வெளியீடு : ௫௫௦

சங்க

# இலக்கியக் கதைக் கொத்து




திரு. வித்துவான்,

மு. இராசாக்கண்ணு அவர்கள், பி.ஓ., எல்.

தமிழ்ப் பேராசிரியர், அரசினர் கல்லூரி, கோயம்புத்தூர்.



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை - 1.

# பதிப்புரை

'சீரார் கதைகற்பார் செம்மை அறிவினராய்ப்
பேரார் புகழ் செல்வம் பெற்றுயர்வர்'

வாழ்க்கைக்கு முன்னோர் வரலாறுகள் நல்ல வழிகாட்டிகளாகும். சங்க இலக்கியங்களிற் பழந்தமிழரின் வரலாற்றுக் குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. அவற்றில் நயமிக்க பகுதிகளிற் சில கதைவடிவில் முன்னர் வெளியிடப்பெற்றன.

அவை சங்கநூற் கதைகள், சங்க இலக்கியக் கதைகள், சங்ககாலத்துக் கதைகள் என்பனவாகும். அவற்றை அழகிய கட்டடத்துடன் பரிசுக்கும் நூல்நிலையத்துக்கும் பயன்படும் வகையில் ஒரே தொகுதியாக வெளியிடுகின்றோம்.

இந்நூலையும் கழகவெளியீட்டு ஏனைய நூல்கள் போன்றே வாங்கி எம்மை ஊக்க வேண்டுகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

கழக வெளியீடு : ௲௧௫

# சங்கநூற் கதைகள்



புலிசை, மறைத்திரு. ஞானியாரடிகளின் மாணவர்
திருவாளர்

**வித்துவான், மு. இராசாக்கண்ணு அவர்கள்**

எழுதியவை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

தமிழ்மொழியிற் சங்ககால நூல்கள் தக்க உணர்ச்சிச் சிறப்புடையவை. அந்நூல்கள் வாயிலாகத் தெரிந்துகொள்ளக்கூடிய வரலாறுகள் ஏராளமாக இருக்கின்றன. மாணவர்க்கு அவை சிறப்பான உணர்ச்சி வளங்களைத் தரும்.

"சங்கநூற் கதைகள்" எனும் பெயர் தாங்கும் இந்நூலில் எட்டுத்தொகையுள் ஒன்றான "நவில்தொறும் நாவூறும் புறநானூறு" என்னும் அரிய நூலிலிருந்து பொறுக்கிய நான்கு கதைகளும், பண்டைப் பெருங்காப்பியங்களுள் ஒன்றான "சொல்லாறுதோறும் பொருளாழ்ந்து" விளங்கும் மணிமேகலை என்னும் இனிய நூலிலிருந்து ஒரு கதையும் அடங்கியுள்ளன. இக் கழகத்திலிருந்து முன்னரே வெளிவந்த செந்தமிழ்நாட்டுச் சிறுகதைகள், சங்கநூற் சிறுகதைகள் ஆகிய இருநூல்களையுந் தொடர்ந்து இந்நூல் மூன்றாவது பகுதியாக வெளியிடப்பெறுவதாகும்.

இந்நூலிற் பொதிந்துள்ள கதைகள் மாணவ மாணவிகட்கு அறிவின் ஆற்றல், அறநெறிப்பான்மை, அருந்தமிழ்ப் புலவர்தம் பெருமை, தாய்மொழிப்பற்று, தாய்நாட்டுப்பற்று, விழுமிய வீரம் முதலியவற்றை ஊட்டிப் பண்டைத்தமிழ் நூல்களில் அவர்கள் தம் கருத்தினை உணர்ச்சியுடன் செலுத்துமாறு தூண்டும் வகையிற் பெரிதுந் துணைபுரியும்.

மேலும் இதனைத் தொடர்ந்து, சங்கநூல்களிற் காணும் சிறப்பியல்புகளை விளக்கும் வரலாற்று நூல்கள் பலவற்றை வெளியிட வேண்டுமென்னும் பேரவாக்கொண்டுள்ளோம்.

யாம் விழைந்தவாறே இந் நூலைச் சீரிய முறையில் ஆக்கியளித்த வித்துவான், திரு. மு. இராசாக்கண்ணு அவர்கட்கு எமது நன்றி உரியதாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.




# உள்ளுறை

# சங்கநூற் கதைகள்

## க. தாமப்பல் கண்ணனுர்

தொண்டை நாட்டில் சிறந்த ஊர்கள் பல உண்டு. காஞ்சிபுரம் அவற்றுள் புகழ்வாய்ந்தது. பழைய காலத்தில், காஞ்சிபுரம் தலைநகரமாகவும் விளங்கியிருந்தது.

காஞ்சியை அடுத்துப் பல ஊர்கள் விளங்கின. அவற்றுள், தாமல் (அல்லது) தாமப்பல் என்பதும் ஒன்று. அவ்வூரில் அறிவு மிக்க புலவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய இயற்பெயர் கண்ணனுர். தாமப்பல் என்ற அவர் ஊருடன் அவர் பெயரையுங் கூட்டித் 'தாமப்பல் கண்ணனுர்' என்று அவரை எல்லோரும் அழைத்தனர்.

தாமப்பல் கண்ணனுர், கல்வியிற் கடலை ஒத்தவர். தமிழ் நூல்களை எல்லாம் நன்ருகப் படித்துப் பயின்றவர். அடக்கம் என்ற குணத்தில் சிறந்து விளங்கியவர். தம் கண் முதலிய ஐம்பொறிகளை அவற்றின் விருப்பப்படி விடாமல் தம் விருப்பப்படி அடக்கி அருளாளராக விளங்கி நின்ருர். எல்லா உயிர்களையும் சமமாக நோக்கி, எவ்வுயிர்க்கு எத்துன்பம் வந்தாலும் அத்துன்பம் தமக்கு வந்ததாக எண்ணித் துடிக்கும் நெஞ்சம்

பெற்றவர். முடிதரித்து உலகத்தினை ஆளும் மன்னனுயினும், குற்றம் செய்யின் அஞ்சாது எடுத்துக்கூறும் ஆண்மைக் குணத்தினர். இவருடைய அறிவின் ஆழமும், நல்லியல்புகளும் நாடெங்கும் பரவின.

அக்காலத்தில் சோழ நாட்டைச் சோழன் நலங்கிள்ளி என்பவன் ஆண்டுவந்தான். இவன் கவிபாடும் செந்தமிழ்ப் புலவன். பாண்டி மன்னனேடு பகைத்துப் போரிட்டு அவனை வென்று அடக்கியவன்.

இவ் வீரனுக்குப் பின் பிறந்தோன் மாவளத்தான் என்போன். மாவளத்தானும் தன் முன்னவனைப் போலவே ஆற்றல் நிறைந்தவன். தமிழ்ப் புலமை நிறைந்த நலங்கிள்ளி போர்க்களத்தையே அவாவினுன். ஆனுல், அவன் தம்பியாகிய மாவளத்தானே சிறந்த கல்விக் களத்திலேயே கருத்தைச் செலுத்தினுன். மேலும்மேலும் அறிவைப் பெருக்க விரும்பினுன். அதனுல், தமிழறிஞருடன் உரையாடுவதை ஓர் உயர்வாக எண்ணினுன். தமிழைப் படித்தல் அமிழ்தை உண்ணுதற்குச் சமம் என உறுதிகொண்டான். ‘தமிழமுது, தன்னை உண்டாரை வாழவைக்கும்,’ என்ருர் பாரதியார். ஆதலால், தன்னுடனிருந்து தனக்குத் தமிழுணவை ஊட்டவல்ல தமிழறிஞரை அவன் தேடினுன். கண்ணனுரைப்பற்றிக் கேள்விப் பட்டான். அவரைத் தன்னுடன் இருக்கும் வண்ணம் கேட்டுக்கொள்ள விழைந்தான். ஒருகால் புலவர் பெருமானுக்குத் தன் கருத்தை அறிவித்தான். புலவரும் அதனை அன்போடு ஏற்றுக்கொண்டு, சோழநாடு அடைந்தார். புலவரும் புரவலரும் பொருந்திய தமிழ் நேயம் உடையராயினர்.

பொழுது புலர்வதற்கு ஐந்து நாழிகை இருக்கும் அளவில் அரசரும் புலவரும் கண் விழித்தெழுவர். காலேயில் உரிய கடன்களே முடித்துக்கொள்வர். கற்றற்கிடமாய தமிழ் மன்றம் சார்வர். அங்கே அழகிய நூல் நிலேயம் விளங்கிக்கொண்டிருக்கும். அதன்கண் பல ஓலே நூற்கட்டுகள் அடுக்கடுக்காக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். இலக்கணச் சுவடிகள் ஒருபுறம்; இலக்கியச் சுவடிகள் ஒருபுறம்; அறிவியற்கலேகளே அறிவிக்கும் சுவடிகள் ஒருபுறம்; இவ்வாறு இன்னும் பலவகையாகவும் அறிவைப் பெருக்கும் நூல்கள் மிகுந்து விளங்கும். புலவர், பல சுவடிகளிலிருந்து பல கருத்துக்களேக் கூறுவார். அரசன் கேட்டு அறிந்துகொள்வான். அறியுந்தோறும், 'இவற்றை முன் தெரிந்துகொள்ளாதிருந்தேனே,' என எண்ணுவான். இப்போது இப் புலவரால் அறிந்துகொள்ள நேர்ந்தது ஒரு பெரும் பேறு என்று கருதி மகிழ்வான். கேட்டவற்றைப் பல காலும் நினேப்பான். தோன்றும் ஐயங்களே புலவர்பால் கூறுவான். ஏழைகள் செல்வர்களிடம் ஏங்கி நிற்பதுபோலக், கருத்துக்களே எதிர்பார்த்து நிற்பான். அவர் அன்போடு அவன் ஐயங்களேப் போக்குவார். இங்ஙனம் பல நாட்கள் கழியும். மன்னனுக்கும் அறிவு பெருகியது.

பொழுது போக்குக்காக ஓரொரு நாளில் அரசனும் புலவரும் வட்டாடுதல் வழக்கம். வட்டு என்பது சொக்கட்டான் போல்வதோர் ஆட்டம். கவறுடல் பல துன்பங்களேத் தருமன்றே! ஒரு நாள் இருவரும் தமிழ்ச் சொல்லாடி மகிழ்ந்த பின்னர் வட்டாட விரும்பினர். வேலேக்காரர்கள் அறை கீறப்பட்ட பொற் பலகையையும், நன்மணிகள் இழைக்கப்பெற்ற காய்

களையும் கொண்டுவந்து வைத்தனர். இருவரும் எதிர் எதிர் இருந்து ஆடினர்.

வெற்றியும் தோல்வியும் ஒருவருக்கே எப்போதும் இருக்கமாட்டா. ஒருகால் வெல்வோர் மற்றொருகால் தோல்வியும் அடைவர். சூதாட்டத்தின் இயல்பு இது. சில நாழிகைவரையில் இருவரும் சமமாக ஆடினர். போகப்போக வெற்றி மன்னனுடையதாயது; தோல்வி



' வட்டினை எடுத்துப் புலவர்மேல் எறிதல் '

புலவருடையது எனத்துணிந்து கூறும் நிலைமை உண்டாயிற்று. ஆதலின், புலவர் விளையாட்டாக ஒரு சூழ்ச்சி செய்தார். ஆடுதற்கென அமைந்த கவறு (காய்) ஒன்றினை மறைத்தார். கண்ணையும் கருத்தையும் ஆட்டத்திலேயே செலுத்தியிருந்த மன்னன் அதனைக் காணுதிருப்பானே ? சினம் எழுந்தது ; தன்

பொறுமைக் குணத்தை அறவே மறந்தான். சிறிதும் எண்ணிப்பாராது, வட்டினை எடுத்துச் சட்டெனப் புலவர்மேல் எறிந்தான்.

கவறு புலவரை வன்மையாகத் தாக்கியது. "சோழமன்னனே! மாவளத்தானே! நின் குலப் பெருமையை மறந்தனையே! வலிய பருந்துக்கு அஞ்சி, முன் 'அரசே! தஞ்சம்' என்று அடைந்தது ஒரு புறு. அதற்காகத் தன் இன்னுயிரையும் ஈயத் துணிந்து துலைபுக்கனன் சிபி என்னும் பெரியோன். அவன்வழி வந்த ஆண்டகையே! பகைவரை அழித்த வீரம் செறிந்த நலங்கிள்ளிக்குப் பின்னவனே! வில் வீரர்க்குத் தலைவனே! இரப்போர்க்கு ஈயும் வள்ளலே! நினக்குச் சினமாகாது. நின்பால் சினத்தை யான் காண்கின்றேன். ஆதலால், நின் பிறப்பில் எனக்கு ஐயம் உண்டாகின்றது." எனப் புலவர் உடனே இடித்துக் கூறினர்.

மாணவர்களே! புலவர் உள்ளத்தின் வன்மையைப் பாருங்கள்! மண்ணாளும் மன்னன் மாவளத்தான்! ஆயினும் மன்னனுக்கு அஞ்சுகின்றரா? இல்லையே! நின்பிறப்பில் எனக்கு ஐயம் உண்டாகின்றது!' என எவ்வளவு வன்மையான சொல்லைக் கூறுகின்றார். அரசனுக்கு உண்மை அறிவு வரச் செய்வதையே தம் கடமையாகப் புலவர் கருதுகின்றார். தவறு செய்யின், யாவராயினும் அவரைக் கண்டித்து உறுதியுரைகளைக் கூறுவோரே பெரியோர். அவர் தம் உயிர்க்குக் கேடு வரினும் அஞ்சாது நன்மையயும் நலத்தையும் தரும் சொற்களையே சொல்லுவார்கள்.

மன்னன் உள்ளத்தைக் கவர்ந்தோங்கிய சினம் உடனே ஆறியது. அரசன் அறிவு விளக்கம் பெற்ருன். நடந்தவற்றை எண்ணிஞன். "ஐயோ! என்ன செயல் செய்தேன்! சினம் என்னையே விழுங்கி விட்டதே! என்னையே இழந்துவிட்டேனே! என்னே என் இழிவு! கடவுளரும் அஞ்சும் தமிழ் நாவலரின் பெருமையை எண்ணுது வட்டுக்கொண்டு எறிந் தேனே!" எனப் பலவாருக எண்ணி மனம் வருந் திஞன். புலவரை நோக்கவும் அஞ்சிஞன். தலை சாய்த்து, நாணி வாய்மூடி இருந்தான்.

மன்னவன் மனம் பட்ட பாட்டினைப் புலவரும் அறிந்தார். அவர் மனம் இளகிற்று. ஆதலால் அரசனை நோக்கி, "அருமை அரசே! முதலில் விளையாட்டாகக் கவறு மறைத்தவன் யானே. அதனை 'விளையாட்டு' எனக்கருதாது, தவறிழைத்தேன் எனத் தவருக எண்ணி வட்டினை என்மேல் வீசினை. பின் யான் இடித்துக் கூறிய சுடுசொற்களுக்காக மிக்க துன்பத்தை அடைகின்றனை. நா நீட்டிப் பேசிய என் சொற்களுக் கடங்கிப் பெருந்தன்மை நிறைந்து விளங்குகின்றனை. சோழகுலத்திற்கே தம்மைப் பிழைத்தோரைப் பொறுக் கும் குணச் சிறப்புண்டு. நின் பெருமை சிறக்க! நின் வாழ்நாள் காவிரி ஆற்று மணலினும் பலவாகி இனிது வாழ்வாயாக," என்று கூறி வாழ்த்திஞர்.

நீர் கிழிய எய்த வடுப்போலச் சான்ருேர் இருவர் கலக்கமும் மாறி மறைந்தது. இருவரும் மீண்டும் தமிழ்ச்சுவையை இடைவிடாது நுகர்ந்து மகிழ்வாரா யினர்.

மாணவர்களே! சூதாட்டத்தினும் கொடியதொன்றில்லை. இதனை ஆடுவோர் யாவராயினும் அவர்தம் பெருமையை இழப்பர் என்பது உறுதி. சூதாடியதனுல், முடிவேந்தனும் தவறினன்; புலவரும் தம் உயர் நிலைமையை இழந்து முதலில் அவன் சினத்துக்கு இரையாக நேர்ந்தது. அருவருக்கும் மனக்கலக்கம் உண்டாயிற்று, ஆதலால் இக்கொடிய ஆட்டம் அனைவராலும் கடியத்தக்கதாகும்.

"சூது விரும்பேல்"—ஔவை.



# உ. கரிகாலனும் சேரமானும்

கரிகாலன் என்பவன் தலைசிறந்த சோழநாட்டு மன்னன். இவன் இளமையில் மிகுந்த அல்லலை அடைந்தான். தொல்லைகளால் துயருற்ருன். ஆனுல், முயற்சியை இழக்கவில்லை. மேலும்மேலும் முயற்சியைக் கைக்கொண்டு முன்னேற்றம் அடைந்தான். சிறையிலிட்டு பெருந்தீக்கொண்டு இவனைக் கொல்லுதற்கு இவன் பங்காளிகள் சூழ்ச்சி செய்தனர். அத்துன்பமும் இவனை நெருங்கவில்லை.

வயது நிரம்பிக் கட்டிளைஞஞன இவனுக்கு ஓர் ஆவல் உண்டாயிற்று. அஃதாவது, தண் தமிழ் நாடேயன்றி, வடநாட்டையும் தன் ஒரு குடைகீழ்க் கொண்டு வருதல் என்பது. அதற்கேற்பத் தன் படையினை இவன் ஒழுங்குபடுத்திக்கொண்டான். வில்வீரர், வாள்வீரர், புரவிவீரர், தேர்வீரர் என்னும் பல திறத்தவர் வீர ஒலி செய்யப் படை புறப்பட்டது.

படை, பாண்டிநாட்டை நோக்கிச் சென்றது. பாண்டி நாடு பணிந்தது.

பாண்டிநாட்டுக்கு மேற்கில் சேரநாடு அமைந்திருந்தது. சோழன் சேரநாட்டின்மேற் சென்ருன். அந்நாட்டினை, அப்போது அரசுபுரிந்தவன் சேரமான் பெருஞ்சேரலாதன் என்பவன். அவனும் கரிகாலனைப் போல் வீரம் நிறைந்தவன். தன் நாடு பிறருக்கு அடிமைப் படலாகாது என்று எண்ணும் இயல்பு வாய்ந்தவன்.

சோழர் முன்னணிப்படை சேரநாட்டு எல்லையை அடைந்தது. இதனைச் சேரமான் அறிந்தான். அவன் கண்ணில் நெருப்புப் பொறி பறந்தது. மீசை படபட எனத் துடித்தது. "என்ன எண்ணங்கொண்டான் இச் சோழன்! இவனினும் யான் தாழ்ந்தவனோ! தனக்கு அரசநிலை கிடைத்தால், பிறநாட்டு அரசரது தகுதியைக் கெடுக்க வேண்டுமா? இவன் நாடுதான் உரிமையோடு வாழவேண்டுமா? என் நாட்டினர் அடிமைகளாகத் தொண்டுசெய்ய வேண்டும் என்பது இவன் எண்ணம்போலும்! யான் உயிருடன் வாழும் வரை, இவன் எண்ணம் ஈடேறாது," என்று கூறினான்.

பின்பு அரசவையிலிருந்த யாவரையும் மன்னன் பார்த்தனன். அங்கிருந்த சேனைத் தலைவனை அவன் கண்கள் தேடின. அவனை விளித்து, "சேனைத் தலைவ! படைகள் அணிவகுக்கப்படட்டும். சோழர்படை நமது நாட்டுள் புகுந்து மக்களுக்குத் தொல்லையை விளைக்கு முன் நாம் முன்னேறிச் சண்டை இடுவோம். இன்று யானே தலைவனாக இருப்பேன்," என்று கூறினான்.

போர்ப்பறைகள் முழங்கின; கேடகங்கள் ஒன்றோ டொன்று பட்டுப் பேரொலி எழுந்தது. ஈட்டிகள் உரைசி எங்கும் ஒலிபரந்தது. குதிரைகள் கனைத்துக் கிளர்ச்சி உற்றன. யானைகள் பிளிறி எழுச்சியுற்றன. வீரர்கள் கடலலைபோல ஆரவாரித் தெழுந்தனர்.

சேரன், தானே தலைவனாய்ப் படையினை நடத்திக் கொண்டு வருகின்றான் என்பதைச் சோழன் அறிந் தான். 'யானும் படைத்தலைமை ஏற்பேன்,' எனத் தன் தலைமையின் கீழ்ப் படையினை நடத்தலுற்றான்.

முடிதரித்த இருவேந்தர்களேயும் தலேவர்களாகக் கொண்டன கடலே ஒத்த படைகள். வெண்ணிப்பறந்தலே என்னுமிடத்தில் எதிருற்றன. வாள்வீரர், வாளினே வீசி எதிர்ப்பட்டோரைக் கொன்றனர். எதிரிருப்போர், பகைவர் வாள்வீச்சுத் தம்மேற் படாதிருக்குமாறு தம் உடல் முழுவதுங் கேடகத்தால் மறைத்துக் கொண்டு போரிட்டனர். வில்வீரர் தம்குறி பிழையாவண்ணம் அம்பெய்தினர். ஈட்டியாளர் தம் பகைவருடலில் தம் படையை மாட்டினர். இங்ஙனம் இருதிறத்தினரும் தம் ஆற்றலேக் காட்டிப் போரிட்டனர். செந்நிறக் குருதி மண்ணில் படிந்தது. மண் தன் நிறத்தை இழந்து செந்நிறமாயிற்று. முதலில் சிற்றருவியாய் ஓடிய குருதி பின்னர்ப் பேர் ஆருய்ப் பெருகியது.

சேரமான் படை, சோழர் வன்மையை எதிர்த்து நிற்கும் ஆற்றல் அற்றுச் சிறிது பின் வாங்கத் தொடங்கியது. சேரன் "இப்போழ்து என் வீரரை, யான் இப்படியே விட்டு விடின் பின்னர் இவர்கள் ஓடுவர். ஆதலின், இப்போதே இவருக்குத் தக்க உணர்ச்சியை உண்டாக்க வேண்டும்," என்று எண்ணிஞன். முன்னர், படையின் பல இடங்களிலிருந்து ஆங்காங்குக் கட்டளேகள் பிறப்பித்துக் கொண்டிருந்தனன். இப்போது அதனே விடுத்துச் சேனேயின் முன் அணிக்கே வந்தனன்.

"சேர வீரர்களே! சேரவாரீர். மலேநாட்டு மக்களே! நாம் உயிருடன் வாழும்போதே, நம் மலே மங்கையின் மானம் எனும் அணி கவரப்படல் அழகிதோ? மானம் உயிரினும் சிறந்தது. வீரம் நம் செல்வம். செல்வத்தைச் செலவிட்டு மானத்தைக் காப்பாற்

றல் வேண்டும். உயிர் ஒரு பொருட்டன்று,'' என வீரங் கிளர்ந்தெழப் பேசினன்.

பின்வாங்கிய சேரர் நின்றனர். எதிர்ப்புணர்ச்சி கொண்டு காலை முன்னேக்கி வைத்தனர். சோழரை எதிர்த்தனர். காரணம் யாது? சேரமான் சொற்கள். வீரர் செவிவழிச் சென்றன. உள்ளத்திற் சோர்ந்து கிடந்த வீரம் எனும் பசும்பயிர்க்கு அச்சொற்கள் நல்ல நீருணவு ஆயின. வீரப்பயிர் மயக்கம் தெளிந்தது; தலைநிமிர்ந்தது. விளக்கம் உற்றது.

புத்துணர்ச்சியுடன் போரிடும் சேரருக்குச் சோழர் உடைகின்றனர். 'மலைபோல் வரும் மலைநாட்டு வீரரை அசைத்தலும் தம்மால் ஆகாது போலும்!' என அஞ்சுகின்றனர். 'தக்க காலம் இதுவே' என்றுணர் கின்ருன் சேரன். முன்னணியில் பல இடங்களில் நின்று உணர்ச்சியை உண்டாக்கும் சொற்களைக் கூறு கின்ருன். சேரன் முயற்சி அவ்வளவில் நின்றுவிட வில்லை. தானும் போர்வீரனைப்போல் படையைத் தாங்கிப் போரிடுகின்ருன். சோழ வீரர் நலிகின்றனர். எதிரேறும் வன்மையை இழக்கின்றனர். பின்வாங்கு கின்றனர்.

கரிகாலன், தன் படை பின்னடைவதை அறிந் தான். சில நாழிகைக்குள் சேரன் முழுத் தோல்வியை அடைவான் என்று இவன் முன்பு எதிர்பார்த்தான். நிலைமை வேருயிற்று. காரணம் யாது எனக் கருதினன். சேரர் படையினை ஊன்றிக் கவனித்தான். சேரமானைப் படைத் தலைப்பில் கண்டான். அவன் ஆற்றும் பெருஞ் செயலை அறிந்தான். போர் அப்போது நடக்கும் முறையிலேயே விடப்பட்டால், வெற்றி சேரனைப்

பற்றும் எனத் துணிந்தான். தான் வெற்றிபெற முயன்றான்.

"சேரர் தலைவனில்லையேல், சேரர் தோல்வியுறுதல் உறுதி. அவருக்கு உணர்ச்சி ஊற்றாக இருப்பவன் சேரமானே. அவன் வீழ்த்தப்படுவானானால் போரும் முடிவுபெறும்," என்று நினைத்துத் தானும் சேனையின் முன்னிடத்தை அடைந்தான்.

தன் கை வில்லிலிருந்து பல அம்புகளைச் சேரமானைக் குறியாக வைத்து எய்தான். சேரமானும் அவ்வம்புகளைத் தன் கேடகத்தில் தாங்கித் தானும் அம்புகளை எய்தான். இருவரும் வெற்றி தோல்வி இல்லாமல் சண்டையிட்டனர். ஒருவரை நோக்கி ஒருவர் நெருங்கினர். விற்சண்டை வேண்டாம் என விடுத்தனர். வேற் சண்டையைக் கைக்கொண்டனர். ஒருவரை ஒருவர் கொல்லுதற்கு இடம் பார்த்தார்கள். கரிகாற் பெருவளத்தான் 'எப்போது சிறிது இடைவெளி கிடைக்கும், கைக் கேடகம் சிறிது இடம் தரினும் போதும்,' என்னும் ஒரே குறிப்புடன் இருந்தான். இனிக் காலம் தாழ்க்கலாகாது,' எனச் சேரன் மார்பினையே குறியாக வைத்துத் தன் கூரிய வேற்படையை எறிந்தான். அப்படைக் குத்தினை விரைந்து கேடகத்தில் ஏற்கச் சேரமான் முற்பட்டான். ஆனால், அவன் கால்கள் இரத்தப் பசையால் சிறிது சறுக்க, ஒரு புறமாகச் சாய்ந்தனன். இதனைச் சோழன் கண்டான். தன் நிலை தவறும் ஒருவன் மேல் படை எறிதல் தக்கதன்று. இதனை உணர்ந்தவன் அரசன் கரிகாலன்! ஆனால், அவன் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. வேல், அவன் கையினின்றும் எழுந்துவிட்டது. நொடிப் பொழுதில் சேர

மானுடைய முதுகில் அது ஒரு பக்கமாகப் பாய்ந்தது. இருபுறத்து வீரரும், ' ஆ ' என்று அலறினர்.

வீரம் செறிந்த சேரமான் முதுகில் புண் உண்டாய் விட்டது ! வீரர் புறப்புண்ணைக் கண்டு வெட்கப்படுவர். மார்பில் படும் புண்ணையே செல்வம் எனப்போற்றும் சீரியோருக்கு, முதுகுப்புண் எவ்வளவு துன்பத்தை



' வேல் சேரமானின் முதுகிற் பாய்ந்தது '

உண்டாக்கும்! ஆதலால், பகைவரும் நண்பரும் மனம் வருந்தினர். ' இவன் முதுகில் நம் வேல் பட்டதே! என்னே! நம் வீரம்!' எனக் கரிகாலனும் மனம் கருகினான்,

கால் சறுக்கிச் சாய்ந்த சேரமான் முதுகில் வேற் படை பட்ட அளவில், குருதி பீறிட்டுக்கொண்டு வெளி வந்தது. ஆயினும், அவன் உயிர் போகவில்லை.

சேரமான் நடந்ததை உணர்ந்தான்; மனம் உடைந்தான். வேல் பாய்தலால் உண்டாகிய புண்ணின் வழியே வெளிவந்த செந்நீரினும், கண்ணீர் மிகப்பெருகிற்று; ஏன்? 'மானம் உயிரினும் சிறந்தது,' எனத் தன் வீரர்களுக்கு அவன் கூறவில்லையா? அவனுக்கும் அவ்வுணர்ச்சி இருக்குமன்றோ? "ஐயோ! முதுகில் பாய்ந்தவேல், என் உயிரைக் கொல்லாது என்னை இந் நிலையில் விடுத்ததே" என்று எண்ணி ஏங்கினான். 'நடந்ததைப் பற்றி வருந்துவானேன்? வேல் போக் 'காத உயிரை யான் போக்குவேன்," என்ற முடிவிற்கு வந்தான். வீரர்க்கு உயிரினும் விழுமியது வீரம் ஒன்றே.

போர்க்களத்தை விடுத்தான். ஆறிடு மணல்மேடொன்றைத் தேர்ந்துகொண்டான். அங்கே சென்றான். வடதிசை நோக்கி அமர்ந்து, உணவை ஒழித்து ஆண்டவனை எண்ணி இருந்தான். நாள் பல ஆயின. உணவின்மையால் உரம் குறைந்தது; உடல் நலிந்தது; உயிர் பிரிந்தது.

மாணவர்களே! நீங்கள், வீரத்துடன் போர்புரிந்த கரிகாலனைப் புகழ்வீர்களா? கால் தவறுதலால் நேர்ந்த புறப்புண்ணும் ஆகாது என நாணி உயிர் விடுத்த சேரமானைப் புகழ்வீர்களா? மானமும் வீரமும் வாய்ந்த இவர்கள் இருவரும் நம் மூதாதையர்கள் என எண்ணும்போது, நமக்கு இந்நிலை எவ்வளவு உருக்கந் தருகின்றது.

" மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்."

—குறள்.

# ௩. முடவரும் நாகரும்

நாம் வாழும் நிலப்பகுதிக்குத் 'தமிழகம்' என்று பெயர். தமிழகம் என்பது தமிழ்மொழி பேசப்படும் இடமாகும். இங்கே வாழ்வோர் தமிழ்மக்களாவர். முற்காலத்திருந்த—ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த—தமிழகத்தை இப்போது நாம் காண்கிறேமில்லை. அக்காலத்தில் முடிதரித்த மன்னர் மூவர் வாழ்ந்திருந்தனர்: அவர் சேர, சோழ, பாண்டியர் எனப்படுவார். இம்மூவரின் ஆட்சிக்கும் உட்பட்டு விளங்கிய இடமே தமிழகம் எனச் சிறந் திருந்தது.

ஒரு காலத்தில் சேரமன்னன் மிக்க வன்மையுடைய வனுய் விளங்குவான். அப்போது அவன் ஆட்சியின் கீழ் மற்ற மன்னர் இருவரும் அடங்கி நடப்பார்கள். அவ்வாறே, சோழன் படைத் தகுதிகளால் வலுப் பெறின், மற்றவர் அவனுக்கு அடங்கிக்கிடப்பர். பாண்டியனும் அவ்வுயர் நிலையை அடைதல் உண்டு.

அக்காலத்தில், ஐயூர் முடவனுர் என்னும் தமிழறிவு சான்ற புலவர் ஒருவர் இருந்தார். அவர் பெயரை நோக்கியே அவர் உடல் முடம் பட்டிருந்தது என அறியலாம். ஆனுல், அவர் நிறைந்த அறிவினர். அறிவுமுடம் அவருக்கு இல்லை. உடல் அழகுமட்டும் அழகாகாது. எட்டிப்பழம் பார்ப்பதற்கு அழகாக இருக் கின்றது. உண்போர்க்கோ கசந்து தோன்றும். அழ கான உருவத்தை மட்டும் ஒருவர் பெற்றிருப்பதனுல் பயனில்லை. 'கல்வி அழகே அழகு'. அவ்வழகினைப்

பெற்ற உடல் எவ்வாறு இருப்பினும் பெருமை அடையும். ஆதலின், கல்வியால் சிறந்து விளங்கிய முடவனாரை யாவரும் மதித்தனர்.

முடவனார், கொடைமடம் பட்டார்பால் சென்று இன்றமிழ்ச் செய்யுள்பாடி அவரை இன்புறுத்துவர். அவர்கள் மனமுவந்து பரிசு தருவர். தகுதி அறிந்து அஃது தரப்பட்டதாயின் அதனைப் பெற்று வாழ்த்தி வருவார்.

தோன்றிக்கோன் என்பவன் ஒரு சிற்றரசன். முடவனார் அவனை அடைந்து, தம்மால் நடக்கமுடியவில்லை என்பதைப் புலப்படுத்தி ஊர்திவேண்டும் என்று ஒருகால் கேட்டார். இப்புலவர்க்கு எது செய்யினும் எது தரினும் அது அழியாப் புகழைத் தரும் என்ற எண்ணம் உடையவன் கோன். ஆதலின், வண்டிப் பகட்டினையும் ஆனிரைகளையும் நிரம்பப் புலவர்க்குத் தந்தான்; புலவரும் வாயார வாழ்த்தி மீண்டார்.

நாட்டின் பல பாகங்களை நேரிற் காண்பதனால் அறிவு பெருகும். சுவடியில் படித்தறியும் பல பொருள்களை நேரில் காண்பது நல்லதல்லவா? பலவகையான குணங்களையுடைய மக்களையும் வேறு பிறவற்றையும் அதனால் நன்றாக அறிந்துகொள்ள முடியும். ஆதலால், நம் புலவர் தென்னாடு முழுவதையுமேனும் சுற்றிப்பார்க்க விழைந்தார்.

வண்டிமீது ஊர்ந்து சென்றார். காவிரி ஆறு பாய்வதனால் நல்ல விளைவையுடையது சோழ நாடு. இந் நாட்டினைச் சுற்றிப்பார்த்தார் புலவர். மலைவளம் சிறந்த சேர நாட்டினையும் கண்டார். பின்பு பாண்டி நாட்டைப் பார்ப்பதற்கு நெருங்கினார்.

பாண்டி நாட்டினர் பலர், வேறு நாட்டினைப் பார்க்கும் எண்ணத்துடன் ஒன்று சேர்ந்தனர். அந்நாட்டு நாகனூர் என்ற தமிழ்ப் புலவரும் அவர்களுடன் சேர்ந்தார். எல்லாரும் பாண்டிநாட் டெல்லையைத் தாண்டி வந்தனர். வந்தவர்கள், வண்டியையும் அதனுள்ளிருக்கும் புலவர்பெருமானையும் கண்டனர். அப் புலவர் பெருமானை அறிந்த சிலர், "அவர் ஐயூர் முடவனார்



என்னும்புகழ் வாய்ந்த புலவர். அவருடன் பேசிப் பின் செல்லலாம்," என்று கூறிப் புலவரை நெருங்கினர். கற்றவருடன் கலந்துபேசி மகிழ்வதே மகிழ்ச்சி!

அவர்கள் புலவரை நெருங்கும் நேரத்தில், அவரும் பகட்டினை அவிழ்த்துவிட்டு மர நிழலில் அமர்ந்தார். வந்த பாண்டி நாட்டினரும், முடவனாரும்

ஒருவரை ஒருவர் அறிமுகம் செய்துகொண்டனர். ஒருவர் புலவரை நோக்கி, "ஐயரே! தாங்கள் எங்குச் சென்று வருகின்றீர்?" என்றார்.

புலவர், "தமிழ் நாட்டினையேனும் சுற்றிப் பார்க்க என்னுள்ளம் விழைந்தது. ஆதலின், சோழநாட்டினையும் சேரநாட்டினையும் பார்த்து வருகிறேன்," என்று கூறினார்.

ஒருவர்: எங்கள் எண்ணமும் அதுவே. அந்நோக்கத்துடனேயே நாங்களும் புறப்பட்டோம். தாங்கள் கண்டவற்றையும் கேட்டவற்றையும் எங்கட்குக் கூறவேண்டும். புதுவதாக அறிதலைவிடத் தங்கள் மூலம் முதலில் அறிந்தால் அவற்றைக் காணும் போதும், கேட்கும்போதும் நாங்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியும்.

புலவர்: நன்று; உங்கள் கருத்தினை அறிந்தேன். சேர சோழ நாடுகளைக் கண்டும் யான் காணாதவனே! ஆதலின், யான் எவ்வாறு கூறமுடியும்?

ஒருவர்: இப்போதுதானே அந்நாடுகளிலிருந்து வருகின்றீர்கள்! அங்ஙனமிருக்க ஏன் இவ்வாறு கூறவேண்டும்?

புலவர்: அவ்விரு நாடுகளையும் கண்டேன். ஆங்குப் பல நிகழ்ச்சிகளையும் கேட்டேன். அப்போதெல்லாம், உங்கள் நாட்டு மன்னனாகிய மாறன் வழுதியைக் காணவேண்டும் என்னும் விருப்பமே மிகுதிப்பட்டது. 'நாடு கண்டோம்' எனக் கண்டதால் எனக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை.

ஒருவர்: அங்ஙனம், விருப்பம் உண்டாதற்குக் காரணம் யாதோ?

புலவர்: உங்கள் நாட்டினை ஆளும் மன்னது சினத்தை எண்ணும்போது நெஞ்சு 'பகீர்' என்கிறது.

ஒருவர்: தாங்கள் இன்னும் எங்கள் நாட்டெல்லையையும் மிதிக்கவில்லை. அவ்வாறிருக்க, எங்கள் மன்னன் சினமுடையான் என்று எவ்வாறு கூறுகின்றீர்கள் ?

புலவர்: உங்கள் மன்னனை யான் காணவிடினும், அவன் சினத்தைக் கண்டுளேன்.

"என்ன விந்தை! ஒரு மனிதனைக் காணுமல் அவன் சினத்தைமட்டும் தனியே எப்படிக் காண முடியும்? புலவர் ஏதோ தடுமாறுகின்ருர் போலும்!" என்று அங்கிருந்தவரிற் பலரும் நினைத்தனர். நினைத்தவற்றை வெளிப்படையாகக் கூறுதற்கும் அஞ்சினர்.

அவர்தமைப் பார்த்த புலவர் "அன்பினீர்! உங்கள் மயக்கத்தை நன்கறிவேன். சினம் ஒரு குணம்; அதனைக் குணியுடன் (குணம் பொருந்தியிருக்கும் பொருளுடன்) காணமுடியுமேயன்றித் தனித்துக் காண இயலாது என்பதுதானே உங்கள் கருத்து," என அவர்கள் மனம் அறிந்து சொல்லினுர்.

"நாம் வினவி அதனுல் அவர்க்கு மனப்புண்ணை உண்டாக்குவானேன்? என்று முதலில் எண்ணிய பாண்டிநாட்டுக் குழுவினர்க்கு ஐயம் அறவே ஒழிந்தது. மனம் மகிழ்ந்தனர். 'மேலும் புலவர் என்ன கூறுவாரோ' என்று அறிய ஆவலுற்றனர்.

புலவர்: சினமென்னும் குணத்தைக் காண முடியாது என்பது உண்மை. ஆனுல், சினம் காரணமாக நிகழ்ந்த காரியங்களைக் காணமுடியுமல்லவா?

"ஆம்," என யாவரும் கூறினர். புலவர்தம் அறிவுகண்டு அகமகிழ்ந்தனர். அறிஞர் கூட்டுறவால் உண்டாகும் மகிழ்ச்சிக்கோர் எல்லே இல்லே!

புலவர்: உங்கள் மன்னவன் மாறன் வழுதியின் சினம் செய்தவற்றைச் சொல்லுகின்றேன். எம்மால் இரு நாட்டிலும் இவையே அறியப்பட்டன. நீர் தன் நிலேகடந்து ஓடிஞல் அதனேத் தடுக்கும் அரணும் உண்டோ? நெருப்பு மிகுந்து நிற்கின் உயிர்கள் தங்குவதற்கு நிழல் இருக்குமா? காற்றுக் கடுகி வீசிஞல், அதனேப் பொறுக்கும் வல்லமை யாருக்குண்டு? அவ்வாறே, உங்கள் அரசர் வழுதிக்குச் சினம் மூளுமாயின், அதற்கு எதிரில் உய்ந்து வாழ்வார் எவரேனும் உளரோ? முடிமன்னரும் சிற்றரசரும் தத்தம் உயிரைக் கையிலேந்தி நிற்பர். "அடியேன் யான் மீளா அடிமையாக உள்ளேன்; இவை திறைப்பொருள்; ஏற்று மகிழ்க; சினம் தணிக," எனத் திறை தந்து உயிர் பெறுவோரே பலர். அங்ஙனம் செய்ய அறியாது தமக்கும் வீரமுள்ளது என மாறுபடுவோர், புற்றினின்றும் புதிதாக வெளிப்படும் ஈசல் ஒரு பகற்பொழுதிலேயே அழிவதுபோல அழிந்தொழிவர். இவையே யாம் கண்டனவும் கேட்டனவும் ஆகும். 'வழுதி' என உரக்கக் கூறுதலே போதும். அந்நாட்டரசர்கள் உடனே கைகூப்பித் தொழுது நிற்கின்றனர். இங்ஙனம், பகைவரை வணக்கும் சினம்சிறந்த மன்னனேக் காணும் ஆவலுடன் யான் புறப்பட்டு வந்தேன்.

என்று சொல்லி முடித்தார்.

முடவனர் தடைபடாது கூறிவந்தனவற்றை அங்கு இருந்தவர் விருப்பத்தோடு கேட்டு நின்றனர். புலவர் சொல்லிக்கொண்டு வந்தபோது, அவருள் ஒருவர் முகம், விளக்கம் பெற்றுத் திகழ்ந்தது. உதடுகளும் சிற்சில நேரங்களில் அசைந்தன. சில சொற்களைச் சொல்ல அவாவும் தன்மையில் அவர் இருந்தார் என்பது புலப்பட்டது. அவர் மனக்கருத்தைப் புலவர் அறிந்து கொண்டார். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழியன்றோ! முடவர் அவரைப் பார்த்து, "நீங்கள் ஏதோ உரைக்க எண்ணுகின்றீர்கள் போலும்; அதனைச் சொல்லுங்கள்," என்றார்.

அவர்: நான் சில சொல்ல ஆசைப்படுவது உண்மையே. நான் வடநாடு சென்று இப்போதுதான் மீண்டேன். இவர்கள் தமிழகம் காண விரும்புவதை அறிந்து இவர்களோடு கூடினேன்.

புலவர்: 'தேடிச் சென்ற மருந்து காலில் அகப்பட்டது,' என்பது பழமொழி. வண்டியில் மெல்லச் செல்லும் என்னல் வடநாடு வரை சென்றுவர இயலாது. ஆதலின், சென்றுவந்த உங்களைக்கண்டு மகிழ்கின்றேன். அந்நாட்டு நிலைமையை உங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம் என எண்ணுகின்றேன். முதலில், உங்கள் பெயரை அறிவிக்கலாமோ ?

அவர்: என் பெயர் நாகன். நீங்கள் வடநாட்டினைக் காணவேண்டும் என்பதில்லை; தென்னட்டில் பெரும் பகுதியைக் கண்டதே போதும்.

முடவனர்: ஏன் அவ்வாறு கூறுகின்றீர் ?

நாகனர்; வடநாட்டு அரசர் சேர, சோழரினும் தாழ் நிலையை அடைந்திருக்கின்றனர். அவர்களையும் வழுதி விடவில்லை.

முடவனர்: எவ்வாறு?

நாகனர்: வடவர், வழுதி எண்ணியபடி அடிபணியவில்லை. அவ்வளவுதான்! வழுதிக்குச் சினம் மூண்டது. மலைக்குகையில் உறங்கிக் கிடந்த புலி உணவை வேண்டித் துயிலை வெறுத்து எழுந்தது போல, வழுதி எழுந்தான். வடநாடு எக்கதிக்கு உட்பட்டிருக்கும் என்பதை யான் எடுத்துரைக்க வேண்டுவதில்லை. பிற நாடுகளில் நடந்ததை நீங்களும் அறிந்திருக்கின்றீர்கள். நான் கண்டன சில்வற்றைச் சொல்லுவேன். மீன் நெளிந்தோடும் வயலிடங்கள் மணல் மேடுகளாயின. பொழுதுபோக்குக்காக மகிழ்வுடன் வட்டாடித் தேய்ந்த இடங்களில் காட்டுக்கோழிகள் முட்டை இட்டுத் தம் இனத்தைப் பெருக்குகின்றன. மக்கள் வாழ்ந்த ஊர், விலங்குகள் இருக்கும் இடமாயின. பெரும் பெருங் கட்டிடங்கள் இடிந்துவிழ, அவற்றில் கூகை முதலிய பறவைகள் குடியிருந்து பெருங் கூச்சலிடுகின்றன. இவ்வாறு வடநாடு நலமின்றிப் பாழ்பட்டது.

முடவனர்: அப்படியா? என்னே வழுதியின் வீரம்! வடநாட்டைப் பார்க்கவில்லையே என்று ஒரு வருத்தம் இருந்தது. அதனைப் போக்கிய நீங்கள் என்றும் வாழ்க. யான் வழுதியைக் கண்டு மகிழ்வேன்.

மாணவர்களே! வழுதியின் பெருமை இப்புலவர்களின் வாய்மொழியிலிருந்து எவ்வளவு நன்றாகத் தெரிகின்றது பார்த்தீர்களா!

---

# ௪. நெடுஞ்செழியனும் இரும்பொறையும்

## 1. வளம் பெருக்கிய மன்னன்

பாண்டிநாடு, கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும் கடலையே எல்லையாக உடையது. அக் கடலொலியினும் மிக்க ஆரவாரத்துடன் மக்கள் நிறைந்து காணப்படுகின்றனர். "நம் மன்னனுக்கு இனிக் கவலை வேண்டியதில்லை. அவனுக்குப்பின் முத்தமிழ் செறிந்த இந்நாட்டினை ஆளுதற்குரிய மகன் பிறந்துவிட்டான்," என்று பாண்டிநாட்டினர் களிப்புக்கடலில் ஆழ்ந்தனர். எங்கும் மகிழ்ச்சி! எவர் முகத்திலும் மகிழ்ச்சியின் விளக்கம் விளங்கியது.

பிறந்த காலத்திலேயே யாவருக்கும் இவ்வாறு மகிழ்ச்சியை உண்டாக்கியவன் செழியன். பிற்காலத்தில் நீண்ட உருவம்; அகன்ற மார்பு; விளங்கிய முகம் முதலியவற்றுடன் இவன் தோன்றினமையால், இவனை நெடுஞ்செழியன் என்று யாவரும் அழைத்தனர்.

செழியனாகிய குழந்தை நாடோறும் புதுப்பொலிவுடன் சிறந்து வளர்ந்தனன். தாய்ப்பால் அருந்தினன். தமிழ் முப்பால் குடித்தனன். தவழத் தொடங்கினன். தமிழேடுகளைத் தேடினன். குழந்தை அன்புடன் 'அம்மா, அப்பா' என்று பல சொற்களைச் சொன்னான். ஈட்டி, வில், வாள் முதலியன இவனுக்கு விளையாட்டுப் பொருள்களாக அமைந்தன.

"செழியா! என் செல்வமே! இங்கே வா!" என அவன் தந்தை அன்புடன் அழைக்குங் காலங்களில், செழியன் திரும்பித் தந்தையைக் காண்பான். விளையாட்

டுப் பொருள்களை விட்டுவிடுவான். தளர்ந்த நடையுடன் தந்தையை அடைவான். அவன் இரு கால்களிலும் கிண்கிணி கட்டப்பட்டிருக்கும். அவை அவன் நடந்து வரும்பொழுது, 'கணகண' என்றொலிக்கும். விரிந்த தலைமயிர் முகமெங்கும் நிறைந்து கண்களை மூடிநிற்கும். ஆதலின், அதனைக் கையால் விலக்கிக் கொண்டே வருவான். கைகளில், சிறிய வளைகள் 'கலகல' என்றொலிக்கும். கண்கள் ஆண்மையுடன் பிறழும்.

இளமையிலேயே செழியன் தந்தை இவ்வுலக வாழ்வினை நீத்தான். சிலகாலம் தலைமை அமைச்சனின் சார்பில் அரசியல் நடந்துவந்தது. குழந்தை—செழியன் பதினாருண்டு நிரம்பிய குமரனானான். பின்பு, ஆட்சியைத் தான் ஏற்று அரசியலைத் திறமையாக நடத்தி வந்தான். இவனோ, அரசியல்துறை கைபோய பேரரசர் வழிவந்தவன். ஆதலின், இவன் ஆட்சி மாட்சிமையுடன் சிறந்து விளங்கியது.

இவன் அவையில் அறிவிற் சிறந்த புலவர் பலர் எழுந்தருளியிருந்தனர். அவர்கள் தமிழ்மொழிப் பயிற்சி சிறந்த சீரியோர். அவர் அறியாதன இல்லை. காலமறிந்து, இடமறிந்து, 'செய்யவேண்டுவன இவை; ஒழியவேண்டுவன இவை,' என அவர் அரசற்குக் கூறுவது வழக்கம். அமைச்சரினும், இவரை மிகவும் மதித்தனனாதலின், அரசன் அவர் கூறுகின்றவற்றைக் கேட்டு அவற்றின் நலத்தை அறிந்து, அவர் கூறுமாறே செய்ய முற்படுவான்.

குடபுலவியனார் என்பவர் ஒரு புலவர்; தமிழறிவு சாலப் பெற்றவர். தாம் பிறந்த நாட்டின் நன்மையில்

சிறந்த கருத்துடையவர். 'நாம் வாழ்ந்தால் போதுமானது. நம்மை மட்டும் நாம் கவனித்துக்கொள்வோம்,' என்ற தன்னலப்பான்மை அவரிடம் இல்லை. நாட்டு மக்கள் நன்மை பெற்ருல் மன்னனும் நலமடைவான். ஆதலின், அரசனை அணுகிப், பின் வருமாறு அவர் நன்மொழிகள் கூறினர் :

"பாண்டிய மன்னனே! நின் மரபில் தோன்றினோர் புகழினை நாட்டினர். பின், விண்ணுலகடைந்தனர்."

மாணவர்களே! புலவர் பேசுகின்ற முறையைக் கவனியுங்கள். 'புகழ் நிறைந்தவர் நின் மரபினர்' என்கின்ருர். ஆதலின், இவனும் புகழைப் பரப்ப வேண்டும் என்பதைச் சொல்லாமல் சொல்லிவிட்டார். 'நாம் புகழ்பெறுவது எப்படி?' என்று அரசன் எண்ணுவானல்லவா?

மேலும் கூறுகின்ருர் :

"நின் வாழ்நாள் நீண்டு வளர்வதாக. நீ வாழும் ஊர் மிகப் பழையதொன்று. அஃது ஆழ்ந்த கிடங்கினை உடையது. அக்கிடங்கின்கண் பலவகை மீன்கள் உயிர்வாழ்கின்றன. ஊரைச் சுற்றியுள்ள மதில் விண்வரையில் உயர்ந்திருக்கின்றது. நீ விரும்புவது யாது? விண்ணுலக இன்பமா? அல்லது இவ்வுலகம் முழுவதற்கும் தனித் தலைவனுகும் தகுதியா? அல்லது அழியாப் புகழை நிலைநிறுத்த வேண்டுமா? இம்மூன்றும் சிறந்தனவே. இவற்றை அடைய நீ விழைகின்றனையா? ஆயின், யான் கூறுவதைக் கேட்பாயாக."

அடுத்துப் புலவர் கூறும் இன் சொற்களையும் பார்ப்போம். "பல்லாண்டு வாழ்க," என்று வாழ்த்தி ஊரைப் புகழ்கின்றார். இச்சொற்கள் அரசன் அறிவிற்குத் தெளிவு தருகின்றன. புலவர் கூறுகின்றவற்றை அவன் கருத்தாகக் கேட்டுவருகின்றான். என்ன கூறுவாரோ என்றும் எதிர்பார்க்கின்றனன். புலவர் கூறுகின்றார்: "பெரியோய்! தண்ணீர் இன்றியமையாதது. இதன் பயனைப் பெறுவது உடல். உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தோர் உயிர்கொடுத்தோராவர். உணவில்லையேல் உடல் மாயும். உணவு என்பது யாது? எனின், நிலத்தொடு கூடிய நீர்; ஆதலின் நிலத்தையும் நீரையும் ஒன்று கூட்டியோர், உடம்பையும் உயிரையும் ஒன்று சேர்த்தோராவர். நிலத்தில் நெல்லை விதைத்தாலும் அது நீரின்றி முளைக்காது. ஆதலின் நீரே சிறந்தது. நீர் குடிக்கும் பொருள் என்னும் நிலையில் உணவும் ஆகின்றது. உணவுப் பொருள்களை ஆக்குதற்குத் தண்ணீர் இன்றியமையாதது. உணவுப் பொருள்களை உணவாகச் சமைத்தற்கும் நீர் வேண்டியிருக்கிறது. எல்லா வகையாலும் சிறந்த நீர்நிலையைப் பெருக்க வேண்டும். ஆதலின், நீர்நிலையைப் பெருக்குவோர் இம்மையிலும் அம்மையிலும் ஆவன பெறுவர். நம் நாட்டுக் குடிமக்கள் நீர்க்குறைவால் வருந்துகின்றனர். நீவிர் உடனே நீர் நிலையைப் பெருக்குதற்கு முற்பட வேண்டும்," என்று கூறி முடித்தார்.

புலவர் கூறியவை முற்றிலும் உண்மை என அரசன் அறிந்தான். 'நீரின்றி அமையாது உலகம்' என்ற முதுமொழிச் சிறப்பை உணர்ந்தான். அன்று

தொட்டு நாட்டில் நீரின்மை எனும் பெயரை ஒழித்து, ‘ வளம் பெருக்கிய மன்னன் ’ எனப் பெயர் பெற்ருன்.

நிலவளம் நீர்வளம் நாட்டில் சிறந்தன. புலவர் பலர் ‘ நந்நாடு’ எனப் போற்றி அங்குத் தங்கினர். குடிமக்கள் மடிமக்கள், மிடிமக்கள் எனும் தீப்பெயரில் லாதவராயினர். ‘மன்னுயிரெல்லாம் மன்னன் தன்னு யிர்’ எனும் கொள்கையை மன்னன் நெடுஞ்செழியன் உடையவன் என்று பலராலும் புகழப்பட்டான். இப் புகழ்ப் பெயர் பாண்டி நாட்டில் நிலேத்தது. மேலும் மேலும் வளர்ந்த புகழ் பாண்டி நாட்டில் இடமின்மை யால், சேர நாட்டிலும் பின் சோழ நாட்டிலும் பரவலா யிற்று.

## 2. சேரன் பொருமை

நெடுஞ்செழியன் பாண்டி நாட்டை ஆண்டு கொண்டிருந்த பொழுது, மலேநாடாகிய சேர நாட்டை இரும்பொறை என்பவன் ஆண்டு வந்தான். இவன் முழுப் பெயர், யானேக்கண்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை. அளந்தறிய முடியாத புகழினே யுடையவன். குடிமக்கள் பால் அன்பும் கண்ணேட்டமும் உடையவன். இவன் நாட்டிலுள்ள மக்கள், சோற்றைச் சமைக்கும் நெருப்பை அறிவர் ; ஞாயிற்றின் வெம்மையை அறிவர்; ஆனல், என்றும் பகைவரால் உண்டாகும் துன்பத்தை அறிந் திருக்க மாட்டார்கள். உழுகின்ற கலப்பை என்னும் படையை அறிந்திருப்பர் ; பகைவர் படைக்கலத்தை அறியார். இந்திர வில்லேயன்றி பகைவர் கொலே வில்லேக் கண்டாரில்லே. இத்தகைய உயர்வுகளால் இவன் ஆண்ட நாடு புத்தேள் உலகத்திலும் பொலிவுற் றிருந்தது.

'ஆனைக்கும் அடிசறுக்கும்' என்பதுபோல், இச் சேரமானும் ஒரு பெருங் குற்றம் செய்தனன். அது என்ன குற்றம்? பாண்டியன் நெடுஞ்செழியன் புகழ் யாண்டும் பரவிற்று என்று முன் கூறினேம் அல்லவா? அப்புகழ் மலை நாட்டிலும் இடமில்லை என்னும்படி பரந்தது. மன்னன் இரும்பொறையின் இரு செவியினூடும் அந்நல்லுரை அடைந்தது. இதுவரை அவனிடத்தில் இல்லாதிருந்த ஒரு கொடுங்குணம் அப்போது தோன்றலாயிற்று.

*"அழுக்கா(று) எனஒரு பாவி திருச்செற்றுத்*
*தீயுழி உய்த்து விடும்."*

என்பது நம் முதுமறை.

எல்லாத் தீய குணங்கட்கும் தாயகமாய் விளங்குவது, பொறாமை. இஃது ஒருவனைச் சார்ந்தால் அவன் நற்குணங்கள் ஒன்றினையும் இருக்கவொட்டாது அழித்துவிடும். வேறு செல்வச் சிறப்பு இருப்பின், அதனையும் ஒழிக்கும். அவ்வளவில், விடுத்தலைச் செய்யாது மீளாத் துன்பத்திலும் கொண்டு சேர்க்கும். இப் பொல்லாக் குணம் நல்ல அரசனாகிய இரும்பொறையைப் பற்றியது. பொறாமைத் தீ, அவனுள்ளத்தில் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிற்று. "இளஞ் சிறுவனாகிய செழியனோ சிறந்தவன்! இவனால் என் போன்ற பேரரசர் புகழ் அகழியிலன்றோ அழுந்திவிடும்! 'இளைதாக முள் மரம் கொல்க,' என்றனர் அறவோர். முள்மரம் போன்றிருக்கும் இவனை இப்பொழுதே ஒழிக்க வழிதேடல் வேண்டும்," என்று மனம் எரிந்து சொன்னான். பாண்டியனின் உயர்ந்த புகழை அழிக்க அடிப்படையான ஏற்பாடு ஒன்றினைக் கைக் கொண்டான்.

மடங்காப் பனை ஓலை ஒன்றினை எடுத்து முடங்கல் ஒன்றை எழுத்தாணியால் தீட்டினன். யாருக்கு? அக் காலத்துச் சோழ நாட்டினை ஆட்சி புரிந்தவன் இவனுக்குத் தோழன், ஆதலால் அவனுக்கு ஓலை எழுதினான். "பாண்டியனை எதிர்ப்பது என் எண்ணம். சின்னாளில் நம் புகழ் நம்மைவிட்டு நீங்காதிருக்க, இவனை எதிர்த்து அழித்தல் வேண்டும். எனக்குதவியாக நீவிர் அமைதல் போதும்," என்பதே அவன் விடுத்த வேண்டுகோள். 'போர்' என்றாலே பொலிந்து மகிழும் சோழன், "நன்று; என் அளவில் எக்குறைவுமின்றி நினக்குப் படைத்துணையாவேன்," என உடனே எழுதி அனுப்பினன்.

தமிழ்நாடு முழுவதும் ஆங்காங்கே சிற்றரசர் பலர் வாழ்ந்திருந்தனர். அவருள் புகழ் படைத்தவர் சிலராவர். அவர், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்போர்.

திதியன் போரிலடங்காச் சினத்தான். பகைவரைப் புறங்கண்டன்றி வெகுளி தணியாதவன். எழினி என்போன் சிறந்த வள்ளல். குதிரை மலை எனும் இடத்தைத் தன் ஆட்சிக் களமாகக் கொண்டவன். சிறந்த யானைப்படையை உடையவன். கந்தழிக்கடவுள்பால் நீங்காத அன்பினை உடையவன். கூவிள மலரைத் தலை மாலையாகப் புனைந்திருந்தவன்.

எருமையூரனும் சிறந்த வீரனே.

இருங்கோவேண்மான், சிறந்த கொடைக் குணமுடையவன். 'இல்லை என்று இரப்போர்க்கு இல்லை' என்று சொல்லாத உள்ளம் வாய்ந்த வள்ளல்; வேளிர் தலைவனாய்ச் சிறந்தவன். ஒருகால், இவன் காட்டுப்பக்கம்

போய்க்கொண்டிருந்தான். அருந்தவ முனிவர் ஒருவர் பெருந்தவம் செய்துகொண்டிருந்தார். அவரைக் கொல்ல ஒரு புலி முற்பட்டது. முனிவர் அப்போழ்து, மன்னனும் இவனைக் கண்டு புலியைக் கொல்லுமாறு ஏவினர்.

அவர் எண்ணத்தின் வழிநின்று உடனே புலியைக் கொன்ருன். அதனால், 'புலிகடி மால்' எனும் காரணப் பெயரையும் பெற்ருன்.

பொருநன் தேர்ப்படை உடையவன். திதியன், எழினி முதலிய இவ்வேளிர் குலத் தலைவர்களாகிய சிற்றரசர்களைப்பற்றிய நினைவு, அடுத்து இரும்பொறைக்கு வந்தது. யானைப்படை, தேர்ப்படை என்பவற்றில் வன்மை யமைந்த எழினி, பொருநன் ஆகியோருடன் மற்றவரையும் தன் பக்கல் இருத்திக்கொண்டால், வெற்றி வேற்றிடம் புகாது; தன்னகம் புகும் எனச் சேரன் எண்ணினன். ஆதலின், இந்த வேளிர்குலத் தலைவர் ஐவர்க்கும் தன் மனதில் உள்ள எண்ணத்தை எழுதி அனுப்பினன். பேரரசனுகிய இவனுடன், நாம் மாறுகொள்ளின் நம் நாட்டுக்கும் இறுதி நேரும் என்று எண்ணி, இரும்பொறையின் ஏற்பாட்டிற்கு அவர்களும் இணங்கினர்.

" சோழமன்னனது படை, வேளிர் ஐவரின் வெற்றிப்படை, நமது படை, ஆகிய இம்மூன்றுடன் நான் தாக்குவேனுனல் பாண்டியன் என்ன ஆவான் ? வீழ்வான் ! ஒழிவான் ! அவன் மாட்சிமை நீங்கும். 'பாண்டியனைச் சேரன் வென்ருன். பாண்டியனினும் சேரனே சிறந்தவன். சேரன் புகழே புகழ்! சேரன் நீடூழி வாழ்க!' என என்னைப் புலவர் பாடுவர். என்

புகழ் எங்கும் பரவும்,'' என்று இரும்பொறை மனல் கோட்டை கட்டினன். இத்தகைய எண்ணங்கள் பலவாருகப் பல்கின ; மனத்திலும் அடங்காமல் வெளி வரத் தொடங்கின.

அவையில் சேரன் அமர்ந்திருக்கிருன். அமைச்சர் பலர் அருகில் இருக்கின்றனர். படைத் தலைவர் பலரும் இடமின்றி எங்கும் நிறைந்துள்ளனர். வேளிர் ஐவரும் சோழமன்னனும் சிறக்க வீற்றிருக்கின்றனர். "அன்பினீர்! என் விருப்பத்திற்கிணங்கி ஒன்றுசேர்ந்தீர். உங்கட்கு என்றும் என் நன்றி உரியது. ஆண்டிலும் அறிவிலும் மிக இளைஞனுகிய அந் நெடுஞ்செழியன் நமக்கு நெடுந்தொலைவில் இருக்கின்ருன். ஆனல், நம் சிறையினுள் இருப்பவனே! இவன் நாட்டினையும் இனிப் புலவர் புகழ்வாரோ? புகழின் அவர் அறிவை என்னென்போம்! அவரைக் கண்டு சிரிப்போம்! நிற்க, நன்னளில் நம் படை புறப்படும்,'' என்று கூறினன். கேட்டோர் யாவரும் வீரம் கிளர்ந்து விளங்கினர்.

## 3. பாண்டியன் வஞ்சினம்

ஒற்றர் அரசருடைய ஏவலாளருள் ஒரு சாரார். இவர் தூதரினும் சிறந்தோர். தூதர் நேரில் அறிய முடியாதவற்றை ஒற்றர் மறைந்திருந்து அறியும் அறிவுறப் பெற்றவர். இவ்வொற்றர் பலரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் பெற்றிருந்தான். இவர்கள் பாண்டிய நாட்டிலும், மற்ற நாட்டிலும் மறைந்திருந்து ஆங்காங்கு நடப்பவற்றை அவ்வப்போதே அரசனுக்கு அறிவித்து வரும் வழக்கமுடையார். இவர்களால்,

தன் நாட்டு மக்களின் மனக் குறைவையும் நிறைவையும் அறியும் வாய்ப்பும் அரசனுக்குக் கிட்டிற்று. குறைவுகளை அறிந்தவுடனே, அவற்றைப் போக்கி, மக்கட்கு வேண்டும் நலன்களைச் செய்வான். பிறநாட்டில் மறைந்தறியும் ஒற்றர் பிறநாட்டரசர், தம் நாட்டு மன்னனுக்கு இடையூறு விளைவிக்க எவற்றைக் கைக்கொள்ளுகிறார்கள் என்பதை அறிவர். உடனே அம் மன்னருக்கு அறிவிப்பர். இதனால், அரசனும், தன் பகைவரை எதிர்ப்பதற்குப் படை வலியுடன் இருப்பான்.

ஆண்டிலும் அறிவிலும் இளைய செழியனை அடக்கல் மிக எளிது என்று கூறினான் சேரநாட்டு மன்னன் என்று முன்சொன்னோம். செழியனின் ஒற்றர், இச் சொற்களைத் தம் அரசனுக்கு அறிவித்தனர். அறிவும் ஆற்றலும் அமைந்த அரசன், எவ்வாறு இவ்விழி சொற்களைப் பொறுத்துக்கொண்டு இருப்பான்! 'தன்னை அடக்க வேண்டும் எனச் சேரன் எண்ணுவானேன்? அவ்வரசனுக்கு யான் ஏதும் இடையூறு இழைக்க வில்லையே! என் நாட்டு மக்கள் நலமுடையவராகத் திகழ வேண்டும் என்று அவர்களுக்கு ஆவன செய்தலை யான் மேற்கொண்டால், இவனுக்கு என்ன? இவன் ஏன் இவ்வாறு இழிசொல் கூறவேண்டும்? நன்று! இந்நாட்டினைப் புகழ்ந்து கூறும் சொற்கள் இவன் செவிக்குக் காய்ச்சிய செப்புக்குழம்பாயிற்றோ? மிக நன்று! பல படை மிக உடையோம் எனத் தருக்கினன் போலும்! சிறு சொல் சொன்ன இவ்வேந்தனின் படையை முறியடிப்பேன், முரசத்துடன் இவனைச் சிறை செய்வேன். இங்ஙனம் யான் செய்ய வில்லையேல், 'எம் வேந்தன் கொடியன்' என்று அழுத

கண்ணீருடன் குடிமக்கள் பழி தூற்றும் கொடுங்கோலே யான் உடையவனுகுக! என் நில எல்லே புலவரால் பாடப்படாது நீங்குக!" என வஞ்சினம் புகன்ருன்.

மாணவர்களே! செழியன் கூறும் வஞ்சினச் சொற் களேக் கருதுங்கள். 'என்னே இழிசொல் கூறியவரை வெல்வேன். இன்றேல் கொடுங்கோலனுகுக!' என் கின்றனன். அரசர்கள் குடிகளின் நன்மையில் எத் தகைய கருத்துக்களேச் செலுத்தினர் என்பது அவன் வார்த்தைகளால் நன்ருகப் புலப்படுகின்றது.

பாண்டியனின் படைத்தலேவன், மன்னன் வெகு ளியை உணர்ந்தான். அரசன் கூறிய சூளுரையின் சிறப்பினே அறிந்தான். வாய் புதைத்து எழுந்து நின் ருன். "நம் பகைஞர் காற்றில் பறக்கும் பஞ்சினும் நொய்யர். அவரை அழித்தல் நமக்குப் பெரியதொரு செயலன்று," என்று இயம்பினுன். செய்தி கூறிய ஒற்றன், "பகைவர் கூட்டத்தை அழிப்பவனே! பண்பு சிறந்த பாண்டியனே! யான், மேலும் கூறவேண்டி யவை சிலவுள," என்றனன். 'சொல்லுக' எனச் சொல்லுவான்போல், மன்னன் நோக்கினுன்.

> "நுண்ணிய மென்பார் அளக்குங்கோல் காணுங்கால்
> கண்ணல்ல தில்லே பிற."

என்பது தமிழ்மறை. ஆதலின், அரசன் குறிப்பினே ஒற்றனும் அறிந்து கொண்டான்.

ஒற்றன், "தலேவரீர்! சேரன் தனித்துப் போர் செய்ய முற்படவில்லே. சோழனேயும் வேளிர் தலேவர் களேயும் தனக்குப்படைத் துணேயாகக் கொண்டுள்ளான். ஆதலின், அக் கூட்டுப்படையால் எவ்வாறேனும் வெற்றி அடையலாம் என்று அவன் எண்ணு



நெடுஞ்செழியன் வஞ்சினங் கூறுதல்

கின்ருன்," என நிலைமையினை நன்ருக எடுத்துக் காட்டினன்.

நெடுஞ்செழியனின் சினம் ஓங்கி வளர்ந்தது. ஒழுக்கம் விழுப்பம் தருவது. ஒழுக்கம் இழக்கலாகாது. ஒழுக்கத்திற்குக் கேடுவரின், ஒழுக்கம் மிக்கோர் அதனை ஆற்ருர். பாண்டியன் ஒழுக்கம் நிறைந்தவன். சேரன் முதலியோர் ஒழுங்கற்ற முறையில் போரிட முற்படுகின் றனர். ஆதலால், நேர்மையான வஞ்சினத்தில், பாண்டியன் அழுந்தினன். கண் அனலைக் கக்கப், படைத்தலைவனைப் பார்த்தான். "படைத் தலைவரீர்! நம் சேனை சேரநாட்டை நோக்கிச் செல்லட்டும். அவரும் புறப்பட்டு நம்மை நோக்கி வருகின்றனர்; காலம் தாழ்த்தல் வீண். ஏற்பாடு செய்தற்குக் காலம் இல்லையாயினும் உள்ள வீரருடன் புறப்படுக. ஆள் வலியையே கருதிக் கொண்டிருக்க வேண்டா; அறத் தின் வலிவு நமக்குண்டு. அறக்கடவுள் நம்முடன் இருக்கும். நாம் வாகை சூடுவோம். வெற்றி நமதே. அச்சமில்லை," என்று உணர்ச்சியுடன் உரைத்தான்.

## 4. அறத்தின் வெற்றி

தலையாலங்காடு என்று இப்போது வழங்கும் இடம், முற்காலத்து தலையாலங்கானம் எனப் பெயர்பெற்றிருந் தது. இவ்விடத்தை இருசாரார் படைகளும் அடைந் தன.

நெடுஞ்செழியன் கால்களில் வீரக்கழல்கள் ஒலிக் கின்றன. அவன் குலத்து அடையாள மாலையாகிய வேப்பமாலை அவன் மார்பில் விளங்குகின்றது. கை யில், வில் ஒளி விடுகின்றது. தேரின்கண், தேர்க்

கொடுஞ்சியைப் பிடித்துக்கொண்டு வீரம் பொலிய நிற்கின்ருன். தம் மன்னன் நிற்கும் நிலையினைக் கண்ட வீரர், தம் மனம் உருக, உயிரினைத் துரும்பென மதித்து, அஞ்சா நெஞ்சினராய் அம்புகளையும் பிற ஆயுதங்களையும் பகைவர்மேல் எறிந்து போர் செய்கின்றனர்.

வீரர்தம் நன்முயற்சியைக் கண்ட மன்னன் மனம் குளிர்ந்தான்; தானும் போரில் கலந்துகொள்ள விழைந்தான். 'வில் வேண்டா' என வெறுத்தொதுக்கினுன். வேற்படையும் வேண்டியதில்லை என்றனன். கைகளைத் தட்டி மற்போர்புரியும் எண்ணத்தினனாய்ப் போர் முகப்பை அடைந்தான். அரசனும் போரில் கலந்துகொண்டான் என்பதை மள்ளர் அறிந்தனர். அப்போது அவர்கள் உணர்ச்சி எவ்வாறிருக்கும்? சொல்லும் தரத்ததோ? ஒவ்வொருவனும், தானே மன்னனுக்கு வெற்றிதரத் தக்கவன் என்று எண்ணிக் கொண்டனன். பகைவர் உலைந்து நிலைகுலைந்து அழப் போரிட்டனர்.

பாண்டியன் மல்லனாய் நின்ருன். சிங்கக் குருளை போல் திரிந்தான். வலிமிக்க தன் இரு கைகளாலும் பல வீரரை அகப்படப் பிடித்து மண்ணிடை மோதி விண்ணுலகிற்கு விருந்தென அனுப்பினுன். தன்னல் மன்னர் கொல்லப்படுகின்றனர் என மகிழ்ந்தானு? இல்லை. அன்றி, இவ்வளவு வீரரைக் கொன்றேம் எனத் தன்னை வியந்தானு? இல்லை. பின் எவ்வாறு தான் மன்னன் மனம் இருந்தது? இவ்விரு வகையிலும் படாது 'வெற்றி' என்னும் குறிக்கோள் ஒன்றில் மட்டும் அமைந்துநின்றது. முழு வெற்றியில் கருத்

தூன்றுவோர் இடை இடையே தோன்றும் சில நிகழ்ச்சிகளில் தம் மனத்தை நிறுத்தமாட்டார்.

வேளிர் சேனை, சின்னபின்னமாயிற்று. சோழ நாட்டு வீரர் சோர்வுற்றனர். சேரல் நிலையினை எவ்வா றியம்புவது! சோழருக்கும் வேளிருக்கும் நேர்ந்த கதியே சேரருக்கும் விதியாயிற்று. 'இனி நம்மால் பாண்டியருடன் போரிடமுடியாது' என்று எண்ணிய பாண்டியனின் பகைவர், பின்வாங்கினர். பாண்டியன் சேனை அவர்களைத் துரத்தி, உருக்குலைத்துத் துன்புறுத் திற்று. வேளிர் சாய்ந்தனர். சோழன் யாண்டு சென்றனன் என அறியமுடியாது போயிற்று. மாந்த ரஞ்சேரல்மட்டும் வீரர் சிலருடன் போர்புரிந்து கொண் டிருந்தான். இப்போருக்கு முதற்காரணம் அவனே.

பாண்டியன், யானைக்கண்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையையும் அவனைச் சூழ்ந்து நின்ற வீரர் களையும் கண்டனன். தனது படையுடன் அங்குச் சென்றான். சில நாழிகையில், மெய்க்காவலர் வரை யாவரும் அழியச், சேரல் தனித்தவனானான். ஆற்றல் அழிந்து நின்ற அம்மன்னனைச் செழியன் விழைந் திருப்பின் அக்களத்திலேயே கொன்றிருப்பான். ஆனால், அவனைக் கொல்லும் விருப்பம் செழியனுக்கு உண்டாகவில்லை. ஏன்? அவனும் தமிழ்நாட்டு மன் னன். கண்ணைக் குத்திற்றென்று விரலை வெட்டுவா ருண்டோ? சேரன் அழுக்காற்றினால் போரிட வந்தான். கொல்ல வந்த ஒன்றைக் கொல்லுதல் முறையேயாயி னும், நம் பாண்டியனுக்குக் கொலை எண்ணம் வர வில்லை. அவன், மாந்தரஞ்சேரலை உயிருடன் கட்டித் தன்னுடன் கொண்டு சென்றனன்.

புலவரால் பாராட்டப்பட்ட சிறப்புடைய மன்னன் கதி யாதாயிற்று? இச்சேரல் தாழ்ந்த நிலைமையிலிருந்தவனும் அல்லன். கருணை நிறைந்தவன். ‘விளங்கில்’ எனும் ஊரில் வாழ்ந்தோர்க்கு வேற்றுப்பகைவரால் துன்பம் நேர்ந்தபோது, இவன் அப் பகைவரை ஒழித்து நலம் விளைத்தான். கபிலர் என்ற சிறப்புடைய புலவரின் நண்பன். புறநானூறு முதலிய சங்கநூல்களுள் ஒன்றாகிய ‘ஐங்குறு நூறு’ என்னும் அரிய நூலினைத் தொகுத்த அருஞ்செயலானும் இவ்வரசனே. கூடலூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார் ஆகிய புலவர்கள் இவனை வாழ்த்தியுள்ளனர். இங்ஙனம் பலவகையாலும் உயர்ந்த மன்னன் மற்றொரு நாட்டு மன்னனால் கட்டப்பட்டான்! சிறை செய்யப்பட்டான்.

சேரலுக்கு இத்துன்பம் ஏன் வந்தது? பிறர் துன்புறுத்தவில்லை; தானே அதனை உண்டாக்கிக்கொண்டனன். அழுக்காறு என்னும் இழிகுணம் எங்கு இருக்கின்றதோ, அங்குள்ள பெருமை முதலிய நற்குணங்கள் நீங்கிவிடும் என்பதற்கு, இதனினும் வேறு சான்று வேண்டுமோ? படை வன்மையால் செழியன் வென்றான் என்பதினும், அழுக்காறு என்ற தீக்குணம் சேரலைத் தோல்வியுறச் செய்தது என்பது பொருந்தும்.

“அழுக்கா றுடையார்க்(கு) அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.”

என்பது நம் அருந்தமிழின் மாயா வாய்மொழி.

---

# ரு. கற்புடைய மங்கை

## 1. தலைவன் பிரிவு

காவிரிப்பூம்பட்டினம், சோழர் தலைநகரமாய்த் திகழ்ந்தது. கடலின் துறைமுகமாகவும் சிறப்புற்று விளங்கியது. அப் பட்டினத்தில் சாதுவன் என்போன் ஒருவன் வாழ்ந்து வந்தனன்; செல்வம் மிகப் பெற்றவன்; 'பொருள் தனைப் போற்றிவாழ்,' எனும் உயர் மொழியைக்கடைப்பிடித்து அவன் மூதாதையர் ஈட்டிய பொருளுக்கோ எல்லை இல்லை. ஆயினும், அதனை எவ்வழியில் செலவிடுவது நல்லது என்பது சாதுவனுக்குத் தெரியவில்லை. அவனுக்கு நல்லறிவு இல்லை. அவன் தவறான வழியிலேயே பொருளைச் செலவிட்டுவந்தான்.

சாதுவனுடைய இல்லக் கிழத்தியின் பெயர் ஆதிரை. அவள் திருமகளுக்கு நிகரான அழகுடையவள். கற்பென்னும் செல்வத்தைப் போற்றிப் பொலிந்தவள். 'கொழுநனினும் உயர்ந்த கடவுள் இல்லை; கொழுநனே கடவுள்,' என்னும் உறுதியான எண்ணம் படைத்தவள். மங்கையற்கு அரசியாகத் திகழ்ந்தவள். இத்தகைய நன்மனைவியைப் பிரிந்து சாதுவன் வாழத் தொடங்கினான்.

சாதுவன் எங்குச் சென்றான்? காவிரிப்பூம் பட்டினத்தின் கணிகை ஒருத்தி இருந்தாள். தேனினை உறிஞ்சிப் பின் வெறும் பூவினை விட்டு நீங்கும் வண்டு. அதனை ஒத்தவள் இவள். ஆதிரையின் அருமையான குணங்களுக்கெல்லாம் நேர் மாறான இழிகுணங்களே உருவமாக உள்ளவள். இவளைப் புகலிடமாகக்கொண்டு புகுந்தனன் சாதுவன்.

ஆதிரையைப் பிரிந்து வாழ்தல் என்ற அளவி லேயே சாதுவனது தீச்செயல் நின்று விடவில்லை; மிகக் கொடிய செயல்களுள் ஒன்றாகிய சூதாடுதலையும் மேற்கொண்டான். சாதுவனது நிதிக் கொட்டில் மிக விரைவில் வெறிதாயிற்று.

சாதுவன் எச்செயலுமின்றிச் சாதுவானான். இவ னிடம் பொருளில்லாமையால், கணிகை கடுஞ்சொல் கூறி வெளியில் துரத்திவிட்டனள். கவரும் நண்பர் களும் கைவிட்டனர். சாதுவன் வேறு வழி இன்றி வீட்டை நோக்கி நடந்தான்.

## 2. நடத்தையின் பயன்

பெருமை குலைந்த சாதுவன், தன் உரிமைவீடு அடைந்தான். பேரன்புடன் தலைக்கற்பில் சிறந்திருந்த தன் இல்லக் கிழத்தியைக் கண்டான். நெருப்பில் இடினும் பொன் தன் நிறம் மாறாது நன்னிறங்கொண்டு சிறக்கும். அவ்வாறே, தனக்கு உண்டான துன்பமா கிய பெரு நெருப்பில் ஆதிரை பொன்போல் ஒளிர்ந்து நின்றனள். அவள் மனமாற்றம் ஒரு சிறிதுமின்றித் தன்னை வரவேற்று நிற்றல் கண்டு, சாதுவன் மனம் துண்ணென்றது. தான் செய்த பிழைகளை அவன் நெஞ்சம் உற்றுணர்ந்து நீராய்க் கரைந்தது; கண்ணீர் இரு விழிகளிலிருந்தும் அருவி போலப் பெருகி வழிந்தது.

ஆதிரையோ அறிவிற் சிறந்தவள். கொழுநன் அடையுந்துயர் கண்டு அவள் நெஞ்சம் பொறுக்கமுடிய வில்லை. கணவன் திருவடிகளில் வீழ்ந்து, 'நடந்து போனதை நினைந்து இனி வருந்தவேண்டாம்,' என்று உருக்கமாக வேண்டிக் கொண்டாள்.

நாள் பல கழிந்தன. தனது பெரும் பொற் குவியல் தீயவழியில் மாய்ந்ததை எண்ணிச் சாதுவன் மிக வருந்தினன். 'என் செய்வது' என்ற கவலை மட்டும் அவனுக்குத் தோன்றவில்லை. ஏன்? பெரும் பொருளை இழந்தமையால் பேர் அறிஞனானன். அவனுள்ளத்தில் முன்னிருந்த மடமைக் குணம் இட மின்றி ஒழிந்தது. பகுத்தறிவு சிறந்து விளங்கிற்று; 'தீயவை இவை நல்லவை இவை,' என்று உணரும் அறிவு வரப்பெற்றான். யாது நேரினும் இனித் தீய வழியில் தன் அறிவு தொழிற்படாது என்னும் உறுதி அவனுக்கு வந்தது. பொருளுக்கு என் செய்வான்?

அறம் இன்பம் என இரண்டையும் தருவது பொருள். பொருளில்லாதபோது இல்வாழ்வான், தான் செய்யவேண்டியவற்றை எவ்வாறு செய்வான்? ஆதலின், பொருளீட்டலைப் பற்றிச் சாதுவனுக்குப் பல எண்ணங்கள் தோன்றின.

தமிழ்நாட்டு இளைஞர் தம் மூதாதையர் ஈட்டிய பொருளில் கருத்தினைச் செலுத்தமாட்டார். 'வினையே ஆடவர்க்கு உயிர்' என்பது அவர்கள் கொள்கை; தம் முயற்சியினால் பொருள் ஈட்டிச் செலவு செய்தலையே விரும்புவர். அவ்வாறு ஈட்டப்படுவதே அறம் செய்வ தற்கு ஏற்றது. ஆகவே, இனியாவது பொருளீட்ட வேண்டும் என்று எண்ணங் கொண்டான்.

வணிகர்கள், கலங்களில் ஏறி, வாணிபம் செய்வ தற்காகப் பல இடங்கள் செல்லுதலுண்டு. அவ்வாறு செல்வோர் கூட்டங் கூட்டமாகச் செல்வர். காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து அத்தகைய கூட்டம் ஒன்று, புறப்படுதற்கு ஏற்பாடுகள் செய்தது. சாதுவன், அக்

கூட்டத்தாருடன் செல்ல ஆவல் கொண்டனன். தன் கருத்தை ஒருவாறு மனைவிக்குத் தெரிவித்துப் பிரிந்தான்.

இந்நாளில், கப்பலில் எல்லா நலங்களும் அமைந்திருக்கின்றன. நீராவியின் வன்மையால் ஓடுதலின், அஞ்சவேண்டியதுமில்லை. கடல் கடப்போர்க்கு எவ்வகையான தொல்லையும் நேராது. காற்றின் உதவியையும் தேடமாட்டார். முற்காலத்தில் கப்பல்கள் இவ்வாறு அமையவில்லை. பாய்மரம் விரித்துக் கட்டப்பட்டிருக்கும். காற்று வீசும்பொழுது அதன் உதவியினுல் நாவாய் செல்லும். உயிருடன் எண்ணிய இடத்தை அடைதல் மிகக் குறைவே.

கப்பலில் சாதுவன் ஏறியிருந்தான். கப்பல் தலைவன் கடற் கடவுளைத் தொழுது, கப்பலைச் செலுத்தினுன். அசைந்தசைந்து கப்பல் நடுக்கடலை அடைந்தது. சாதுவன் நீலநிறம் பெற்றுத் திகழும் கடலை ஆழ்ந்த நினைவுடன் காண்கின்ருன். காணக் காண விரிந்து பரந்து எங்கும் நிறைந்து நிற்கும் கடவுளை எண்ணும் வாய்ப்பும் சாதுவனுக்குக் கிட்டியது. ''என்னே! இக் கடலினை முற்ற உணர்ந்தார் யார்? இதன் கண் நிறைந்து ஒளிரும் அருமணிகளையும் பிற அளவிறந்த செல்வங்களையும் அறிந்தார் எவர்? எத்துணை மக்கள் இக் கடலில் அடங்கித் தம் உயிரை ஒப்புவித்தனரோ? இவ்வாறே, தம் இயல்பு முழுவதும் பிறரால் அறியமுடியாத நிலைமையிலிருப்பவன் எம்பிரான் ஒருவன் அன்ரே? கடவுளாகிய குணக்கடலின் குணச்சிறப்புக்களை அறிந்தார் யார்? அவரது பேரின் பத்தில் அடங்கிக் கிடப்போர் தொகையை அளவிட்டு

உரைக்கவும் ஆகுமோ?'' எனக் கடலையும் கடவுளை யும் ஒன்றுகூட்டி உணர்ந்தான். சீரிய கடவுளின் இணையடிகளில் தன்கருத்தைச் செலுத்தாது, தீய நெறிகளில் தன் காலத்தைக் கழித்ததையும் எண்ணி வருந்தினன்.

ஒருநாள், ஞாயிறு மறைந்தது. மாலையும் மாய்ந் தது. எங்கும் இருள் நிறைந்தது. செம்பொன் தகட்டை யொத்து வெண்ணிலா விளங்கியது. நற் காற்று மெல்லென வீசியது. கடல் அமைதி நிறைந்து விளங்கிற்று. சில நாழிகைகள் ஆயின. நள்ளிரவு வெள்ளென, வெண்ணிலவில் மூழ்கியிருந்த வானம் கருநிறம் பெற்றது. மேகங்கள் எங்கிருந்தோ வந்து ஒருங்கு குழுமின. இளங்காற்று, கொடுங்காற்ருயிற்று. மகிழ்ச்சியுடன் அலைமேல் அமர்ந்து கடல்மீன்களைக் கவர்ந்து உண்டு மகிழ்ந்த பறவைக் கூட்டம் விரை வில் மறைந்தது.

கடற் பழக்கம் உடையோர் புயற்காற்று வீசும் என்று சொன்னுர்கள். அலைகள் மலைகள்போல் எழத் தொடங்கின. மண் மலைகளையே கண்டு பழகிய சாது வன் கண்கள் விண்வரை முட்டும் நீர் மலைகளையும் கண் டன. கப்பல் ஒரு தலைக் கொருதலை உயரும்; சாயும். உள்ளிருப்போரை வெளியில் தள்ளிவிடுமோ என்ற ஐயமும் உண்டாகும். வாய்திறந்து விழுங்க வருவன போலப் பேரலைகள் கப்பலை நோக்கி வந்தன.

காற்றின் கடுமை உச்ச நிலையை அடைந்தது. கப்பல் மிக அலைந்தது. கப்பலின் கட்டு அசைந்தது. கப்பல் ஆடுவதனல் பலகைகள் வலிவிழந்தன. பாய் மரம் ஒடிந்தது. இனிப் பிழைக்க முடியாது எனக்

கப்பல் தலைவனும் கருதினான். ஆதலின், யாவரையும் நோக்கி, அவரவரும் தத்தம் வழிபடு கடவுளை வணங்கிக்கொள்ளுமாறு கூறினான். பேரலை ஒன்று! கலத்தின் முற்பாகம் நீருள் அமிழ்ந்தெழுந்தது. நீரின் கனத்தோடு கப்பல் அலையவே, பலகைகள் தனித் தனியே பிரிந்தன.



கலத்துள்ளிருந்தோர் நீர்மேலாயினர். ஒவ்வொருவருக்கும் அவரவர் உயிர் உயர்ந்தது. அதனைக் காப்பாற்ற எத்தகைய முயற்சியையும் கைக்கொள்வர். நீருள் அமிழ்வோன் வைக்கோல் துரும்பினையும் பற்றுவான் என்பர். அவ்வாறே, கடலில் தள்ளப்பட்டோர், கைப்பட்ட தொன்றைப் பிடித்துக்கொண்டு உயிருக்காக நீந்தினர். சிலர், எந்த எண்ணமும் மனத்தில் வரும்முன் மாண்டனர்.

## 3. சாதுவன் துயர்

மறுநாள் பொழுது புலர்ந்தது. ஞாயிறின் இளங் கதிர்கள் தலை நீட்டுகின்றன. மரங்களில் இரா முழுவதும் வாயை மூடி இருந்த பறவைக் கூட்டம் இப்போது வாய் திறந்து கூவுகின்றது. காற்று தண்ணென வீசுகின்றது. கடல் அமைதியுற்று விளங்குகின்றது. முன்னாள் இரவு, கொலைக்களத்தை ஒத்திருந்தது கடல். இந்நாட் காலையிலோ ஒன்றும் அறியார் போன்று ஓய்ந்திருக்கின்றது. கடற்பறவைகள் இங்கும் அங்கும் பறந்துகொண்டிருக்கின்றன.

கடற்கரையில் அவிழ்ந்த உடையுடன் இறந்தவனைப்போல் சாதுவன் கிடந்தான். அவனருகில், அவன் உயிர் பிழைப்பதற்குக் காரணமாயிருந்த மரத்துண்டு இருந்தது. சாதுவன் உடலெல்லாம் கடற்பாசி சுற்றிக்கொண்டிருந்தது. தலைமயிர் மணலில் புதையுண்டு கிடந்தது. வாய் மிக அழுத்தமாக மூடிக்கொண்டிருந்தது. மரச்சோலைகளில் காற்று வீசுதலாலுண்டாகும் ஒலி, சாதுவனை உறக்கத்தில் மேலும் ஆழ்த்தியது

கதிரவன் வெளிப்படுகின்றான்; கதிர் சூடேறுகின்றது; உடலின் எங்கும்படுகின்றது; சூடு உணர்ச்சியை உண்டாக்குகின்றது. சோர்வு சிறிது அகல, கண் விழிக்கின்றான்.

கப்பலில் மக்களோடு முன்னாளிருந்தவன் சாதுவன். இப்போது அவன் கண்முன் மக்கள் யாரும் இல்லை. இதற்குமுன் பார்க்காத இடத்தினைக் காண்கின்றான். மணற் கரையில் அலைகளால் தான் ஒதுக்கப்பட்டிருத்தலை ஒருவாறு அறிகின்றான். கண்கள்,

நன்ருகத் திறந்து பார்க்கமுடியாத நிலையில் முன்னிருந்தன. இப்போது கூர்ந்து பார்க்கும் வன்மையைக் கண்கள் பெறுகின்றன. கடற் சங்குகள் அழகாக இட்ட கோலம் அவனுக்குக் காட்சியளிக்கின்றது. அலைகள் ஒதுக்கிய முத்துச் சிப்பிகளும் பவழங்களும் நிரை நிரையாகக் கிடக்கின்றன. சில்லை, உழுவல் முதலிய கடற்பறவைகள் பந்தி பந்தியாகக் குந்திக்கொண்டிருக்கின்றன.

இவற்றையெல்லாம் கண்ட சாதுவனுக்கு நல்லுணர்வு தோன்றுகின்றது. "அந்தோ! நான் உயிர் பிழைத்தது எதற்கு? உயிர் வாழும் மக்கள் யாரும் இங்கில்லையே! மக்கள் வாழாத இத்தீவில் நைந்து உயிரை விடவோ? என்னுடன் கலத்தில் வந்தோர் யாருக்கும், கடல், உயிர் வழங்கவில்லை போலும்! அவர்கள் நல்லவர்கள் போலும்! அவர்களை அலைத்துப் பட்டினிபோட்டுக் கொல்லக் கடலுக்கும் எண்ணம் இல்லை. தீச்செயலையே செய்து உழன்ற கொடுமையாளனுகிய என்னைப் பசியானது பற்றித் தீய்த்துக் கொல்லட்டும் என்பது இதன் கருத்தோ!" என்று புலம்பி மனமுடைந்தான்.

துன்பம் உச்ச நிலையை அடைகின்றது. ஆதிரையைப்பற்றிய எண்ணங்கள் பல எழுந்தன. "ஆதிரை! ஆதிரை!! அன்பிற்குரிய ஆதிரை!! குற்றம் பொறுத்த குணமணியே! உன்னை முன்னும் பிரிந்தேன்! இன்றும் பிரிந்தேன்! இப்பிரிவு பெரும் பிரிவாய்விடுமோ? யான் நின் வாழ்வைப் பாழ்படுத்தினேனே! என்னைக் கொழுநனுக அடைந்தமையாலன்ரே இவ்வாறு துயருறுகின்ருய்! நின் பெருமையை இப்போதன்ரே முழுதும் உணர்கின்றேன்! நின்னுடன் இனியேனும் இல்

லறத்தைச் சீர்பெற நடத்தி மகிழலாம் என எண்ணி யிருந்தேனே! ஆனால், தீவினை என்னைத் தடுக்கின்றது. ஐயோ! இனி, ஆகும் என் நிலைமையை எண்ணும்போதே நெஞ்சம் பகீர் என்கிறது. மக்கள் வாழாத இந் நிலப் பகுதியில் எறியப்பட்டேன். இனி, உணர்வற்று, என்உயிர் இவ்வுடலைவிட்டு அகலுவது உறுதி. கற்புடைய நின் மனம் நோக உன்னைவிட்டு நீங்கிக் காலம் கழித்தேன். அதனால் உண்டாகிய தீவினையே என்னை இக் கொடுமையாகிய சாதலுக்கு உட்படுத்துகின்றது போலும்! ஆதிரை, உனக்கு நான் பழி இழைத்தவனானேன். என்னை நீ மன்னிக்க வேண்டும். இன்றேல் செல்லும் உலகத்து நற்கதியில்லை,'' என்று வாய்விட்டு அலறி அலறிச் செயலழிந்தான்.

## 4. கற்பின் வெற்றி

சாதுவனைப்போலவே உயிர் உய்ந்தோர் சிலர். அவர் நல்வினை வயத்தால் காவிரிப்பூம்பட்டினத்துக் கரையில் ஒதுக்கப்பட்டனர். கப்பலில் சென்றார் இக் கதியில் வந்தனரே என்று யாவரும் கடற்கரையில் கூடினர்.

சென்றோர் அனைவரும் காணப்படவில்லை. சிலரே சேர்ந்தனர். உயிர் பிழைத்து வந்தோர் பட்டினத்தார்க்கு நடந்தவற்றைக் கூறினர். சாதுவனை அறியாதார் அப்பட்டினத்தில் இல்லை. ஆதலின், அவனைப் பற்றி வினாக்கள் பல கேட்டனர். சாதுவன் மலைநாட்டில் ஒதுக்கப்பட்டமையை அவர் அறியார். ஆதலின் 'அவனைக் கடல் கொண்டது,' என்றுகூறி வருந்தினர். சாதுவன் இறந்தான் எனக்கேட்டு 'ஐயோ' என யாவரும் வருந்தினர்.

"ஆதிரையிடம் சென்று இதனை எவ்வாறு கூறுவது? அந் நங்கை எவ்வாறு வருந்துவளோ ? இக் கடுஞ் சொற்களையோ யாம் சென்று கூறல் வேண்டும்,' என்று யாவரும் கருதினர்.

"சாதுவன் கடலில் கலம் உடைய இறந்தான்," என்பதைக் கற்பரசியாகிய ஆதிரை அறிந்ததுதான் நேரம்! 'ஆ!' என்று அலறி அடியற்ற மரம்போல் நிலமிசை வீழ்ந்தாள். உடல், 'கிடுகிடு' என நடுங்கத் தொடங்கியது. உயிர் ஓய்ந்த பிணமே போலாயினள். சிறிது நேரம் கழிந்தது. உணர்வு சிறிது தோன்றக், கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது.

"காவிரிப்பூம்பட்டினத்து உற்றூர்களே! உடன் பிறந்த உயர்ந்தோர்களே ! என் கொழுநர் மாய்ந்தார்! என்னுயிர் அவரே; யான் அவர் உடல் போன்றவள். உயிரின்றி உடல் இயங்குமோ ! அன்புகூர்ந்து நீங்கள் ஈமத்தில் எனக்கு எரி வளர்த்து உதவவேண்டும். அதன்கண் இந்த உடற்சுமையை நான் உடனே கழித்துவிட வேண்டும்," என்று அங்கு நின்ற அனைவரையும் கைகுவித்து வேண்டிக் கொண்டாள்.

பட்டினத்து மக்கள் வேறு செயலில்லாதவ ராயினர். ஆதிரைக்கென்று ஈமத்தில் எரி வளர்க்கப் பட்டது. அவள் புதிய ஆடை உடுத்துச் சாந்தம் உடலில் அப்பிக் கூந்தலில் மாலை சூடித் தீயினை வலம் வந்தாள், "என் கணவனுயிர் வினைவழி எங்குச் சென்றதோ ; அங்கு என்னுயிரும் செல்க," என்று கூறினள். என்றும் மறவாத சாதுவன் நினைவோடு அவள் நெருப்பில் வீழ்ந்தனள்.

என்ன விந்தை! ஆதிரை ஈமத்தேறி இனிதிருந்தனள். நெருப்பு அவளைச் சுடவில்லை! உடுத்திருந்த கூறை எரியால் பற்றப்படவில்லை! பூசிய சாந்தம் சிறிதும் கருகவில்லை! சூடிய நறுமலர் புத்தொளி பெற்றுத் திகழ்ந்தது! தீ தண்ணெனக் குளிர்ந்து நின்றது! "ஐயோ, நான் என்ன செய்வேன்! கணவனாலும் முன்னர் ஒதுக்கப்பட்டேன்! இன்று தீயும் என்னைக் கொல்லவில்லையே! தீயும் கொல்லாத் தீவினை செய்தவளோ யான்! எரியும் நெருப்புமா என்னை வெறுக்கவேண்டும்!" என்று ஆதிரைக்கு வருத்தமே மேலிடுவதாயிற்று.

அப்போது அனைவரும் வியக்க, வான் நிழல் ஒன்று தோன்றி, "ஆதிரை! கேள். நின் கணவனை யான் இறக்கவில்லை! நின் கற்பு அவனைக் காத்தது! கடலில் ஒருமரம் ஒன்று பற்றி நீந்திக் கரை சேர்ந்திருக்கின்றனன்! இன்று நாகர் எனும் ஒரு சாரார் வாழும் தீவில் இருக்கின்றான்! அங்கே நெடுநாள் தங்கியிருக்க மாட்டான்! சந்திரதத்தன் என்பவனது கலத்தில் விரைவில் வந்து சேர்வான்! நீ நின் துன்பம் நீங்கி நலமுற வாழ்வாய்," என்று கூறியது.

ஆதிரை அழுதுயர் நீங்கினாள். நன்னீர்ப் பொய்கையிலிருந்து நீராடி வருவார்போன்று நெருப்பினின்றும் வெளிவந்தாள். மனக் கவலையை விடுத்து மனையகம் புகுந்து 'என் உயிர்த்தலைவன் விரைந்து வருக' என்னும் நினைவோடு அமைந்திருந்தனள். கற்புடைப் பெண்டிர் அனைவரும் இவள் மாட்சிமை கண்டு வியந்தனர்.

## 5. தாய்மொழி அன்பு

சாதுவன் கிடந்த தீவில் அவனை அந்நாட்டு மக்கள் கண்டனர்; அவர்கள் நாகர் எனப்படுவோராவர். அவர்களுக்குப் பாம்பின் இலச்சினை உண்டு. அதனால் அவர்களுக்கு 'நாகர்' என்னும் பெயர் உண்டாயிற்று. உடையின்றி வாழும் இயல்பினராதலால் அவர்களுக்கு 'நக்கர்' என்றும் ஒருபெயர் உண்டு. என்ன கொடுமை! அவர்கள் உயிருடன் மக்களைக் கொன்றுண்பது வழக்கமாயிருந்தது. வேறு பல கொடிய வழங்கங்களும் அவரிடம் இருந்தன.

இவருள் சாரணர் என்பார் ஒருவகையினர். நக்கர்களுக்கு அரசனேபோல் தலைவனாய் விளங்கியவன் குருமகன் என்பான். இக் குருமகனுக்குச் சாரணர் ஒற்றர் தொழில்புரிந்தனர். இச் சாரணர் கடலருகிற் கிடந்த சாதுவனைக் கண்டனர். கலம் உடைந்தமையால் அவன் கரை சார்ந்தவன் என ஊகித்தனர். அவன் துன்பத்தை நீக்க ஒரே வழி கருதினர். கொன்று தின்றலே அவர்கள் கருதிய சுருக்கமான வழி! கொன்றவுடன் சாதுவன் துன்பம் ஒழியும்! தின்றவுடன் இவர்கள் பசி நீங்கும்!

நாகருடைய தீக்குணங்களை எவ்வாறெடுத்துச் சொல்வது! 'ஊனைத் தின்று ஊனைப் பெருக்காமை முன்னினிதே' என்றனர் அறிஞர். 'ஊன் ஊண் துறமின்' என்றார் முடிதுறந்த இளங்கோ. புலாலுண்ணுதலே ஏனை எல்லாப் பொருந்தாச் செயல்களுக்கும் வாயில்; மக்களைக் கொன்று தின்னலினுங் கேடு பயக்கும் தீவினை யாதுளது?

'உணவு இவன் நமக்கு,' என எண்ணிய நாகர் சாதுவனைச் சுற்றிக் கொண்டனர்; துயிலினின்றும் எழுப்பினர். எழுப்புகின்றவர் நோக்கம் தன்னைக் கொல்லுதல் என்பதை அவர் முகத்தாலும் செயலாலும் சாதுவன் அறிந்தான். நமன் பல உருவங்களில் வந்ததைப் போன்ற சாரணர்களைக் கண்டதும், சாதுவனுக்கு உள்ளம் எவ்வாறிருக்கும்? இன்னும் அவன் துன்பத்துக்கு வேறு என்னவேண்டும்? திடுக்கிட்டு நெஞ்சு புண்ணாகப் பின், 'ஏன் என்னைக் கொல்லுதற்குச் சூழ்கின்றீர்?' என்று அவர்களை வினவினான்.

என்ன வியப்பு! சாதுவன் அவ்வாறு கேட்டவுடன் சாரணர்கள் தமது கொலைமுகம் மாறி வியப்பெய்தினர். அவர்கள் கையிலிருந்த கொலைக் கருவிகள் அவர்களை அறியாமலே நழுவின.

இத்தகைய மாறுதல் அவர்களிடம் தோன்றியதேன்? சாதுவன் சில சொற்களைச் சொன்னான். அச்சொற்களே அம் மாறுதலுக்குக் காரணம்! ஆம், அதுவே! எவ்வாறு? சாதுவன் நாகருடைய தாய்மொழியில் பேசினன். சாதுவன் அவர் மொழியை அறிந்திருந்தானாதலின், அம் மொழியில் கேட்க நேர்ந்தது. அதுவே சாரணர்களுக்கு வியப்பை விளைத்துச் சாதுவனுக்கு அவன் உயிரைத் தந்தது!

இவ்வுண்மையை மாணவர்களாகிய நீங்கள் நன்றாக அறிந்து கொள்ளவேண்டும். நாகர், மனிதரைக் கொன்றுண்ணும் கொடியோர்; அவர்கள் தம் தாய்மொழியில் வைத்திருக்கும் அன்பினை உன்னுங்கள். நாகரிகமற்று விலங்கினை ஒத்துவாழும் இவர்

களுக்கே தாய்மொழியில் அழுந்தி நிற்கும் பற்று இத் தகைத்து என்றால், நாகரிகம் மிகுந்து மனிதர்களாக வாழும் நமக்கு நமது தாய்மொழியில் எவ்வளவு பற்று இருக்கவேண்டும்! தாய்மொழிப் பற்றில்லாதவன் மக்கள் இனத்தில் சேர்த்தெண்ணும் தகுதி உடையவ னல்லன். நீங்கள் நும் தாய்மொழியில் உண்மை அன்புடையவர்களாக விளங்குகின்றீர்கள் அல்லவா?

நாகர் கொலைப்படையைக் கீழ் வீழ்த்தினர். சுற்றினும் நிற்றலைவிட்டு விலகி ஒருபுடை ஒதுங்கி நின்றனர். கைகூப்பி வணங்கினர். "பெருந்திற லோய்! எம் குருமகன்பால் வரல் வேண்டும். ஈதெம் வேண்டுகோள்," என்று கூறி மீண்டும் தலைவணங் கினர். அவர்கள் வழிகாட்டி முன் செல்லப் பின் சாதுவன் தொடரலுற்றான்.

சிறிதுதூரம் நடந்தவுடன் சாதுவனுக்கு ஒரு காட்சி தோன்றியது. அக் காட்சியின் சிறப்பே சிறப்பு! அதற்கு உவமையாகக் கூற இவ் வுலகத்தில் வேறொன்றும் இல்லை. வெள்ளிய எலும்புகள் மலை போல் குவிந்திருக்கின்றன. இம்மலையை இருக் கையாகக் கொண்டு அதன்மீது அவர்தம் குருமகன் என்போன் உட்கார்ந்திருந்தனன். அவன் உடல் முழுவதும் மயிர் அடர்ந்து வளர்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. அவன் பார்வையில் கரடியாகவே காணப்பட்டான். அவனருகில் அவன் இல்லக்கிழத்தி இருந்தனள். அத் தோற்றம் ஆண் கரடியும் பெண் கரடியும் ஒருங்கே உட்கார்ந்திருப்பதை ஒத்திருந்தது. அவர்களுக்கு அருகில் கட்குடங்கள் பல வரிசையாக அடுக்கப்பட்டிருந்தன. சுடப்பட்ட ஊன் துண்டுகளும்

மலைபோல் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. புலால் நாற்றமும் கள் நாற்றமும் கலந்து சாதுவனுக்கு விளைத்த துன்பத்துக்கோ ஓர் அளவில்லை.



சாதுவன் குருமகன்முன் நின்றான். குருமகன், அவன் தமது தாய்மொழியை அறிந்திருக்கின்றான் என்பது தெரிந்து, அவன் அங்குவர நேர்ந்தது எவ்வாறு என்று வினவினான். அலைகடல் உழந்

தோன் தனக்கு நேர்ந்தவற்றை நவின்றான். தமது நாகர் மொழியில் அவன் மிகச் சுவையோடு பேசுதலறிந்து, குருமகனுக்குக் கண்களில் அருள் சுரந்தது. சாதுவன்பால் மிக்க அன்புடையவனாய், "இவன் கடல் கலக்க வருந்தியவன்! உணவும் இன்றி இருக்கின்றான். இவனுக்குப் புலாலையும் கள்ளையும் நிரம்பக் கொடுங்கள். பின் ஒரு மங்கையையும் மணம் செய்து வையுங்கள்," என்று கட்டளையிட்டான்.

குருமகனைக் கண்டதுமே திடுக்கிட்ட சாதுவன், இப்போது அவன் கூறிய சொற்களைக் கேட்டுப் பின்னும் அச்சம் அடைந்தான். 'இனியேனும் நல்லறச் செயலில் ஈடுபடல் வேண்டும்,' என்ற துணிவுடனிருந்த சாதுவனுக்குக் குருமகனுடைய குறுஞ்சொற்கள் பெருந்துன்பம் உண்டாக்கின. எதிர்த்து ஏதேனும் சொல்லுவானானால் அவன் உயிருக்கே தொல்லை நேரினும் நேரும். வாய்மூடி இருப்பின், கள்ளைக் குடித்துப் புலால் உண்ணவேண்டும். தன் கற்பரசி தன்னையே எண்ணி மனம் நொந்து பட்டினத்திருக்க, இங்கு ஓர் இளையாளுடன் கூடவேண்டும். இக் கொடுஞ்செயல்களை யெல்லாம் செய்தோ ஒருவன் உயிர் வாழவேண்டும்? அன்றி 'இவற்றில் ஈடுபடேன்' எனக் கூறி மறுத்து, இறப்பதா? கொடுஞ்செயல்கள் செய்து சிலநாள் உயிர் வாழ்தலினும், 'செய்யேன்,' என மறுத்து உயிர்விடுதல் உயர்ந்தது' என்ற முடிவுக்கு வந்தனன்.

குருவே! நீவிர் என்பால் வைத்த அன்பால் சில கூறினீர்; மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். கள் குடித்தல் முதலிய கொடுஞ்செயல்களுக்கு யான் உடன்படேன்.

உயிர் உடலுடன் வாழுநாள் எந்நாள். அந்நாள் காறும் இத்தகைய கொடுஞ்செயல்களுக்கு யான் உடன் படேன்,'' என்று ஒரே துணிவாகக் கூறினன்.

குருமகனுக்குச் சிறிது சினக் குறிப்போடு வியப்பும் தோன்றியது. சாதுவன் அவ்வாறு கூறுதற்குரிய காரணம் யாதாயிருக்கலாம் என்று அறிய அவன் ஆவலுற்றான். ஆதலால் அக் குருமகன், "கள்ளையும் புலாலையும் தவிர மக்களுக்கு வேறு உண்டி உண்டோ! பெண்டிரில்லையேல் மக்கள் இன்பம் அடைவது எவ்வாறு ?" என்று கேட்டனன்.

சாதுவன், "அன்பினீர் ! கள்ளையும் கொலையையும் அறிஞர் அறவே நீக்கினர்.

> 'உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு.'

என்பது திருமறை. நாம் இறத்தல் தூங்குவதை ஒத்தது. மீண்டும் பிறத்தல், தூங்கி விழித்தலுக்கு நேர். உறங்கி விழிப்பதைப்போன்று இறந்து பிறக்கின்றோம். ஆதலின், பிறப்பும் இறப்பும் சுழன்று சுழன்று வந்து கொண்டே இருக்கின்றன.

பிறந்தார் நல்லறம் செய்வாராயின், வீட்டுலகம் எய்துவர்; தீச் செயல் செய்யின் நரகத்தை அடைவர். ஒவ்வொருவனும் இறத்தல் உறுதி. இறக்குமுன் நல்லறம் செய்தல் வேண்டும். அதுதான் நல்லுலகுக்குக் கொண்டுபோகும். தீச்செயல் நரகத்தில் சேர்க்கும். கள் குடித்தல், புலாலுண்ணல் முதலியவை தீச்செயல்கள். இவற்றைச் செய்வோர் நரகத்தை அடைந்து வருந்துவர். ஆதலின், இதைச் செய்தலாகாது!'' என்றான்.

சாதுவன் சொற்கள் குருமகன் உள்ளத்தில் அமைதியை உண்டுபண்ணவில்லை. அவை அவன் இயற்கை வெகுளியைக் கிளர்ந்தெழச் செய்தன. ஆகலின், மிக்க சினத்தினனாய் இடி இடி எனப் பெருஞ் சிரிப்புச் சிரித்தான். சிரித்துப், "பெருந்துயருழந்தோய்! உடம்பை விட்டு நீங்கும் உயிர் உருவம் கொண்டு வேறிடம் புகும் என எமக் குரைத்தாய். உயிர் எவ்வாறு சென்று புகும்? அவ் வழியைச் செவ்வையாக எடுத்துரைப்பாயாக," என்றனன்.

குருமகன் கண்கள் வெகுளியால் செந்நிறம் அடைந்தன; சாதுவன் கண்டனன். "குருமகனே! வெகுண்டு உரையாடாதே; நீ சினத்துடனிருந்தால் யான் கூறுகின்ற உண்மைகளை அறியமாட்டாய். வெகுளியை விட்டுக் கேள், நின் வினாவிற்கு விடை கூறுகின்றேன். உயிரோடு வாழும் நாம், நம் உடல் சிறு துன்பத்தை அடைந்தாலும் அதனை உடனே அறிகின்றோம். பிணம், தீயில் இட்டுச் சுடப்படுங் காலத்தும் ஒன்றினையும் உணர்கின்றிலது. உணர்ச்சியைத் தரும் ஏதோ ஒன்று பிணத்தில் இல்லை என்பது உறுதியாக அறியப்படுகின்றது. அப்பொருள் யாது? அதுவே உயிர் என்பதாம்.

"உயிரிருந்த காலத்தில், உற்றதை உணர்ந்தது உடல். அஃதில்லாக் காலத்தில் பிணமாகிக் கிடக்கின்றது. ஒரு வீட்டில் குடி இருப்போர், அதிலிருந்து நீங்கினால், வேறிடத்தில் குடியிருந்தே தீர்வர். அவ்வாறே ஓர் உடம்பிலிருந்து உயிர் நீங்கியது என்றால், அது, வேறோர் உடலில் குடிவாழும் என்பது சொல்லாமலே அமையும்.

"இவ் வுண்மையை உறுதிப்படுத்த வேறென்றும் கூறுகின்றேன். நாம் நனவை இழந்து உறங்குகின்றோம். அக்காலத்தில் கனாக் காண்கின்றோம். கனவு காணுங்கால், உயிர் உடம்பை ஓரிடத்தில் இட்டுப் பல கல் தூரம் சென்று பலவற்றைச் செய்துவருதலைக் காண்கின்றோம். இதனினும் சிறந்த சான்றும் ஒன்று உண்டோ? ஆதலின், செய்த வினைக்கேற்ப உயிர் உடலை அடைகின்றது. இதில் எள்ளளவும் ஐயம் கொள்ளவேண்டாம். இக் காரணத்தினாலேதான் அறிஞர்கள், கள் முதலியவற்றை வெறுத் தொதுக்கினர்."

சாதுவன் சொற்கள் வெள்ளிடையில் கொட்டிய பால்போல் வீணாகவில்லை. நற்பயன் அளித்தன. நாகன் தவறுள்ளத்தைத் திருத்தின. மேடும் பள்ளமுமாய அவன் உள்ளம் ஒழுங்காயிற்று. அவனுக்கு உண்மை அறிவு உண்டாயிற்று. ஆதலின், அவன் பால் மிகுந்து நின்ற சினம் உடனே அவிந்தது. உண்மை உணர்வு மிகமிகச் சாதுவனிடம் நன்மதிப்பும் மிகுந்தது. தன் என்பிருக்கையிலிருந்து இறங்கிக், கைகளைத் தலைமேல் கூப்பிய வண்ணமாகச் சாதுவன் அருகிற்சென்று, அடியற்ற நெடுமரம்போல் அவன் கால்களில் வீழ்ந்து வணங்கினான். எழுந்து நின்று வாய்மூடி, அடக்கத்துடன் கீழ்வருமாறு புகன்றான்:

"அறிஞர் ஏறே! பிறந்தநாள் தொடங்கிக் கள்ளையும் ஊனையுமே கைக்கொண்டிருக்கின்றேன். இவற்றை விட்டால், என் உயிரை ஓம்புதலாற்றேன். இன்று என் பிழைகளை உணர்ந்தேன். இன்று தொடங்கி,

யான் என் குணம் குறிகளை மாற்றி அமைத்துக் கொள்வேன். ஆதலின், யாங்கள் பின்பற்றுதற்குரிய அறங்களை மேலும் எடுத்துரைத்தல் வேண்டும்.''

சாதுவன் அகம் மகிழ்ந்து, ''நாகர் தலைவரே; நன்று சொன்னீர். நீடூழி வாழ்வீராக! திருந்திய இவ்வறிவு என்றும் நிலைக்க! உம்மால் செய்யத்தக்க நல்லறம் கூறுவேன்.

'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்.'

என்பது தமிழ் முதுமொழி. ஒவ்வொருவனும் தன்னாலியன்ற அறத்தை எப்போதும் எங்கும் செய்தல் வேண்டும், என்பது கருத்து. என்னை யொத்துக் கலம் உடைந்தோ, கலம் கவிழ்ந்தோ, கரை சேருவோரைக் காப்பாற்றல் வேண்டும். அவரைக் கொன்று உண்ணல் மிக்க மறச்செயல். எல்லா மக்களிடத்தும் அன்புடையவராக இருத்தல்வேண்டும். இங்ஙனமே விலங்குகள் முதலிய எல்லா உயிர்கள்மாட்டும் அருள் நிறைந்து விளங்குதலொன்றே நீங்கள் செய்தற்குரியது,'' என்றான்.

குருமகன் கண்கள் மகிழ்வால் பொலிந்தன. ''எங்களிடத்தில் ஆண்டவன் அருள்வைத்தே உம்மை எம் பக்கல் அனுப்பியுள்ளான். எமக்கு ஆகும் பேரறம் உரைத்த உமக்கு, யாம் செய்யத்தகும் கைம்மாறு யாதிருக்கின்றது? நீவிர் கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டினீர். ஆயினும் யான் கூறும் ஒன்றினை மறுது ஏற்கவேண்டும். முன்னெல்லாம் கலம் கவிழ்ந்த மக்களை உண்டோம். அவர்தம் பொருள்கள் இங்கிருக்கின்றன. அன்றி, எம்மிடமும் விரைமரம், மென்

துகில், விழுநிதி உள்ளன. இவற்றையும் கைக் கொள்ள வேண்டும்,'' என்றுரைத்தனன். அவன் அன்பிற் கட்டுண்ட சாதுவன், வேண்டாம் என்று மறுக்கும் ஆற்றல் அற்றவனானான்.

## 6. ஆதிரை மகிழ்ச்சி

'சந்திரதத்தன் வங்கத்தில் சாதுவன் வருவன்,' என ஆதிரைக்கு வானிழல் வாயிலாக ஆண்டவன் முன் அருளினன். அவ்வணிகனின் கப்பல், நாகர் நாட்டுப் பக்கம் வந்தடைந்தது. முன்போல் மக்களைக் கொல்லும் வழக்கம் நாகரிடையில் இல்லை. ஆதலின், சந்திரதத்தன் கரை சார்ந்தனன். சாதுவன் இருத் தலை அறிந்தான். நாகர் தலைவனால் சிறப்பிக்கப்பட்ட வணிகன், சாதுவனையும் தன் கலத்தில் ஏற்றிக் கொண்டான்.

நாகரும், அவர் தலைவனும் சில ஆண்டுகள் சாது வனுடன் வாழ்ந்து திருத்தமுற்ற வாழ்க்கையினராயி னர். ஆதலின், அவனைப் பிரிதற்கு வருந்தினர். சாதுவனும், அவ்வாறே மனம் கசிந்தான். மனை யாட்டியின் நினைவு ஒருபுறம் இழுத்தது; தனக்கு எக்குறையும் உண்டாகாவண்ணம் காப்பாற்றிவந்த நாகர் தலைவன் அன்பும் மற்றொருபுறம் இழுத்தது; ஆதலின், ஊட்டிக்கொண்டிருந்த கன்றுக்கும் பிறந்த கன்றுக்கும் வருந்தும் ஒரு பசுவை ஒத்தான் சாதுவன்; கலம் கடல்நோக்கி நகரத் தொடங்கியது. நாகரது வாழ்த்தொலியும் அவர் பெருமூச்சும் கலந்து ஒலித்தன.

பட்டினத்தை நோக்கி விரைந்து வந்தது கலம். கரை சார்ந்ததும், சாதுவன் வந்துள்ளதை மக்கள்

அறிந்தனர். வாணிப நெறியில் பொருளீட்டாவிடினும் அறநெறியில் நின்றமையால் அறக்கடவுள் மகிழ்ந்தளித்த பெரும் பொருளுடன் சாதுவன் வந்தமை தெரிந்து, யாவரும் மகிழ்ந்தனர்.

உறவினரும் நண்பரும் சூழச் சாதுவன் வீடு நோக்கிச் சென்றான். கண்டனன் ஆதிரையை இல்லில்! அவள் கண்ணீர் ஊற்றையும் உள்ளத் துடிப்பினையும் கண்டனனா? இல்லை. ஏன்? அவன் நிலையும் அவ்வாறே இருந்தது. உள்ளம் படபடத்தது. பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? இருவரும் பேரன்பிற் சிறந்து, நெடுங்காலம் இனிது வாழ்ந்து வந்தனர்.

---

## பயிற்சிகளும் வினாக்களும்

I. கீழ்வரும் தலைப்புகளில் தனித்தனி 25 வரிகளுக்கு மேற்படாமல் கட்டுரை வரைக.

1. தாமப்பல் கண்ணனாரும் மாவளத்தானும்.
2. கரிகாலனும் சேரமானும்.
3. முடவருக்கும் நாகருக்கும் நடைபெற்ற உரையாடல்.
4. வழுதியின் பெருமை.
5. நெடுஞ்செழியனுக்கு, குடபுலவியனார் அறவுரை.
6. அழுக்காற்றால் அழிந்த இரும்பொறை.
7. நாகரும் சாதுவனும்.

II. கீழ்வரும் வினாக்களுக்கு 10 வரிகளுக்கு மேற்படாமல் விடையளிக்க.

1. "சூது—கொடியது?" இதை மேற்கோளுடன் விளக்கு.
2. கவறு வீசிய மாவளத்தானைப் புலவர் எங்ஙனம் இடித்துக் கூறினார்?
3. முதலில் பின்னடைந்த சேரர்படை பின் எவ்வாறு முன்னேறியது?
4. எவன் வீரத்தைப் புகழவேண்டும்? கரிகாலன் வீரத்தையா? சேரமான் வீரத்தையா?—ஏன்?
5. மாறன்வழுதி சினம் படைத்தவன் என்பதை ஐயூர் முடவனார் எங்ஙனம் விளக்கினார்?
6. நாகனார் கண்ட வடநாட்டு நிலை யாது?
7. குடபுலவியனார் யார்? அவரால் பாண்டிநாடு எவ்வாறு வளமடைந்தது?
8. நெடுஞ்செழியனை எதிர்க்கத் தன்னுடன் இரும்பொறை எவரெவரைச் சேர்த்துக்கொண்டான்?
9. நாகரிடமிருந்து சாதுவன் எவ்வாறு தப்பினான்?
10. ஆதிரையின் கற்புநிலை எங்ஙனம் தெரிகிறது?

---

# அருஞ்சொற் பொருள்விளக்கம்

[எண் பக்கத்தைக் குறிக்கும்]

1. ஐம்பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. அருளாளராக - அருள் என்ற குணம் நிறைந்தவராக.

2. அவாவினன் - விரும்பினன். உரையாடல் - பேசுதல்.

3. விழைந்தான் - ஆசையுற்றான். புரவலன் - அரசன். பொழுது புலரும் காலம்-காலை நேரம். சார்வர் - அடைவர்.

4. கவறாடல் - சூதாடல்.

5. கவறு - சூதாடற்குதவியாகக் கொள்ளும் காய். சட்டென - வேகமாக.

6. ஈய - கொடுத்ததற்காக. துலை - துலாக்கோல். பின்னவன் - தம்பி. இரப்போர் - யாசிப்போர். இடித்து - அறிவு வரும் வண்ணம்.

8. கலக்கம் - துன்பம். நுகர்ந்து - அநுபவித்து. கடியத்தக்கது - ஒதுக்கத்தக்கது.

9. அல்லல், தொல்லை - துன்பம். பணிந்தது - அடங்கியது.

10. ஈடேறாது - முற்றுப் பெறாது. அரசவை - அரசசபை.

11. உரைசி - தாக்கி. எதிருற்றன - எதிர்ப்பட்டன.

12. குருதி - இரத்தம். ஆற்றல் - வன்மை, பலம். அணி - சேனைகளின் வரிசை, ஆபரணம். கவரப்படல் - கைக் கொள்ளப்படல். பொருட்டன்று - பொருளன்று.

13. நலிகின்றனர் - வருந்துகின்றனர்.

14. பற்றும் - சேரும். ஊற்றாக - தோன்றுமிடமாக.

15. பசை - ஒட்டுந்தன்மை. அலறினர் - வருந்திக் கூறினர்.

16. சீரியோர் - உயர்ந்தோர். வேல் - இங்கு அம்பைக் குறிக்கிறது. கருகினன் - வருந்தினன். மனம் உடைந்தான் - கவலையுற்றான். செந்நீர் - இரத்தம். விழுமியது - சிறந்தது.

17. உரம் - வன்மை. மூதாதையர் - பல ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தோர். உருக்கம் - மன நெகிழ்ச்சி.

18. வலுப்பெறின் - பலம் பெற்றால்.

19. அறிவு முடம் - அறியாமை. மதித்தனர் - உயர்வாக எண்ணினர். கொடை மடம் - கேட்போர் எதைக் கேட்டாலும் இல்லை என்னாது கொடுக்கும் உயர்ந்த குணம். புலப்படுத்தி-கூறி. ஊர்தி-வாகனம். வண்டிப்பகடு-எருது. ஆனிரை-பசுக்கூட்டம்.

21. அறிமுகம் - அறிதல்.

23. விந்தை - ஆச்சரியம்.

24. குழுவினர் - கூட்டத்தினர். கூட்டுறவு - சேர்க்கை. கடுகி - வேகமாக.

25. வணக்கும் - வணங்கும்படி செய்யும்.

27. வடவர் - வடநாட்டிலுள்ளவர்.

29. கவலை - வருத்தம். செறிந்த - நிறைந்த. பொலிவு - விளக்கம். அருந்தினன் - குடித்தான். தமிழ் முப்பால் - திருக்குறள் எனும் அரிய நூல்; அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று மூன்று பகுதியாயுள்ளது.

30. குழந்தை-கனிந்த. மாட்சிமையுடன்-பெருமையுடன்.

31. சால - மிகுதியாக.

32. கிடங்கு. அகழி.

34. மடிமக்கள் - சோம்பல் எனும் தீய குணத்தினர். மிடி மக்கள் - வறுமையை உடையோர். கண்ணோட்டம்-கருணை. ஞாயிறு - சூரியன்.

35. புத்தேளுலகம் - தேவருலகம். முதுமறை-பழமையாகிய வேதம்; திருக்குறள்.

36. அறவோர் - அறம் நிரம்பிய திருவள்ளுவர். முடங்கல் - கடிதம். தீட்டினன்-எழுதினான்.

37. புறங்காணல் - தோல்வியடையச் செய்தல். வெகுளி - கோபம்.

39. பல்கின - மிகுந்தன.

41. திகழவேண்டும் - விளங்க வேண்டும். தருக்கினன் - கர்வம் கொண்டனன்.

43. சூளுரை - வஞ்சினம். நொய்யர்-வன்மை இல்லாதவர். இயம்பினன் - கூறினான். தமிழ் மறை - தமிழ் வேதம்; திருக்குறள்.

44. இழுக்கலாகாது - குற்றம் அடைதல் ஆகாது. வாகை - வெற்றி பெற்றோர் அணியும் மாலை.

45. ஒளிவிடுகின்றது - பிரகாசிக்கின்றது. கொடுஞ்சி-தாமரை அரும்புபோன்று செய்து தேர் முன் வைக்கப்பட்டிருப்பது. மதித்து-எண்ணி. போர்முகப்பு-போர் நடக்கும் முன்னிடம். மள்ளர் - வீரர்.

46. உலைந்து-துன்புற்று. மல்லனும் - மற்போர் புரிபவனும். சிங்கக் குருளை - சிங்கக்குட்டி.

48. சான்று - சாட்சி. மாயா வாய்மொழி - எக்காலத்திலும் அழியாத உண்மை நிறைந்த மொழி.

49. திருமகள் - இலக்குமி. பொலிந்தவள் - விளங்கியவள்.

50. கணிகை - பொதுமகள். நிதிக்கொட்டில் - பொருள் நிறைந்த அறை; (பொக்கிஷசாலை). இல்லக்கிழத்தி மனைவி.

51. துண்ணென்றது - அஞ்சியது. மடமை - அறியாமை.

52. பொருளீட்டல் - பொருளைச் சம்பாதித்தல்.

53. நாவாய் - கப்பல்; கலம். ஒளிரும் - விளங்கும்.

54. இணையடி - இரண்டு திருவடிகள். மாய்ந்தது - நீங்கியது. குழுமின - கூடின.

57. கதிரவன் - சூரியன்.

58. சில்லை, உழுவல் - கடற்பறவைகள். உழன்ற-வருந்திய.

59. இழைத்தவன் - செய்தவன்.

61. ஈமம் - சுடுகாடு. சாந்தம் - சந்தனம். கூந்தல் - தலைமயிர். கூறை - சேலை.

62. வான்நிழல் - அசரீரி.

64. நழுவின - கீழ்வீழ்ந்தன.

65. உன்னுங்கள் - எண்ணுங்கள்.

66. தொடரலுற்றான் - தொடர்ந்து சென்றான்.

67. இருக்கை - சிம்மாசனம். நவின்றான் - கூறினான்.

68. குறுஞ்சொற்கள் - இழிந்த வார்த்தைகள்.

69. சுழன்று சுழன்று - மீண்டும் மீண்டும்.

73. மறச்செயல் - பாவச் செயல்.

74. விரை மரம் - சந்தன மரம். மென்றுகில் - மென்மையாகிய துணி. விழுநிதி - சிறந்த செல்வம். கசிந்தான் - துன்புற்றான்.

---

# மேற்கோள் விளக்கம்

[எண் பக்கத்தைக் குறிக்கும்]

35. 'அழுக்காறு ...... விடும்': அழுக்காறு (பொறாமை) என்று சொல்லப்படுகின்ற மிகக் கொடிய பாவ குணமானது, தன்னை உடையவனது செல்வத்தை இவ்வுலகத்தில் கெடுத்துவிடும்; மறுமைக்கண் நரகத்தில் செலுத்திவிடும்.

36. 'இளைதாக முள் மரம் கொல்க': முள்ளுடைய மரத்தை வளரவிடாது அதன் இளமைக்காலத்திலேயே நீக்கல்வேண்டும்.

43. 'நுண்ணிய ......... பிற': நுண்ணறிவு பெற்றிருக்கின்றோம் என்று எண்ணுகின்றவர், பிறரை அளக்குங்கோல் எது என்று ஆராயின் பிறருடைய கண்களே ஆகும்.

48. 'அழுக்காறு... என்பது': பொறாமைக் குணம் உடையார்க்கு வேறு பகைவர் வேண்டாம்; அத்தீய குணம் ஒன்றே போதுமானது. ஏன் எனில் பகைவரால் அவருக்குத் துன்பம் நேராதொழியினும் இக்குணமே அவருக்குக் கேடு தருமாதலால்.

69. 'உறங்கு.........பிறப்பு': சாதல் உறங்குவதை ஒத்தது; பிறப்பு உறங்கி மீண்டும் விழித்தலுக்குச் சமமாகும்.

73. 'ஒல்லும் .........செயல்': அறச்செயலை முடிந்தவாற்றான், நீங்காது எப்போதும் அஃது செய்து மிடத்தா னெல்லாம் செய்க.



கழக வெளியீடு: ௩௨௮

# சங்க இலக்கியக் கதைகள்



புலிசை

மறைத்திரு. ஞானியாரடிகளின் மாணவர்

திரு. வித்துவான்

மு. இராசாக்கண்ணு அவர்கள்

எழுதியவை.



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

சங்க இலக்கியக் கதைகள் எனப் பெயரிய இந்நூல் சிறப்பாகச் சங்கநூற் கதைகள் எனும் சுவடியினையும் பொதுவாக, செந்தமிழ் நாட்டுச் சிறுகதைகள், சங்கநூற் சிறுகதைகள் எனும் கழக வெளியீடுகளையும் தொடர்ந்தெழுதப் பெற்றதாகும்.

இதன்கண், அஞ்சா நெஞ்சினராய தமிழ்ப் புலவர் நக்கீரர், புல்லொழுக்கற்ற அம்மையார் ஔவையார், சோழமன்ன னுயிர்காத்த மூடமோசியார், அன்பு சிறந்த கழாத்தலையார், நகைச்சுவை மலிந்த ஊன்போதி பசுந்தலையார், உலகமறிந்த நட்புரிமை பூண்ட பிசிராந்தையார் ஆகியவர்களின் வரலாறுகள் மாணவர்கள் கற்றறிந்து சுவைத்து மறவாது உள்ளத்துள் பொதிந்துகொள்ளும் நெறியில் எழுதப்பட்டிருக்கின்றன.

இவை காலும் தலையும் இல்லாத வீண்கதைகள் அல்ல. பண்டை நாளில் வாழ்ந்த நம் முன்னோரின் வாழ்க்கை வரலாறுகளைச் செவ்வி தின் எடுத்துரைக்கும் உயரிய நிகழ்ச்சிகளாகும். பல புறநானூற்றுச் செய்யுள்களையே அடிப்படையாகக்கொண்டு இவை எழுதப்பட்டிருக்கின்றன.

புறநானூறு முதலிய சங்க இலக்கியங்கள் எவ்வாறு படிப் போருக்கு இனிமை பயக்கும் பண்புடை நூல்களாகும் என்பதை மாணவர்கள் நன்றாக அறிதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும். அன்றியும், அவர்கள் சங்க நூல்களைப் படிக்கும் தகுதியையும் இவை ஓரளவில் உண்டாக்குகின்றன. எவ்வாறெனில், புறநானூற்றுச் செய்யுள்கள் பல இந்நூலின் இடை இடையே உரைநடை வடிவில் எளிமையாக்கி வைக்கப்பட்டிருக்கின்றன.

யாம் விரும்பியவாறு இக்கதைகளை எழுதித்தந்த திரு. வித்துவான் மு. இராசாக்கண்ணு அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

# சங்க

# இலக்கியக் கதைகள்



## க. நக்கீரர்

### 1. இளமையும் புலமையும்

பாண்டிய நாடு பல வளமும் சிறந்தது. அதன் தலைநகரமாக விளங்கியது மதுரை. மதுரை பாண்டிய அரசர்க்கே அன்றிப் புலவருக்கும் இருப்பிடம் ஆயிற்று. தமிழோசை இனிய ஓசை. இனிய தமிழோசை எங்கும் நிறைந்தமையால் இனிய நகரம் எனும் பெயரை மதுரை ஏற்றது. அந் நகரத்தில் பாடும் புலவரும் அவரை நாடும் செல்வரும் எங்கும் விளங்கினர்.

இம் மதுரையில் **கணக்காயனார்** என்றொருவர் இருந்தார். இவர் நிறைந்த தமிழ்ப்புலமை உடையவர். தமிழ்க்கடலில் எப்போதும் குளித்துக் கொண்டிருப்பவர். தமிழ்நூல்கள் பலவற்றை நன்றாகப் பயின்ற உயர்வால் கணக்காயனார் என்று அழைக்கப்பட்டார். 'கணக்கு'

என்பது இலக்கண இலக்கிய நூல்களைக் குறிக்கும்.

மதுரையில் சொக்கநாதக் கடவுள் அங்கயற் கண்ணி அம்மையுடன் கோயில்கொண் டிருக் கின்றான். ஆண்டவனை வணங்குவதில் தவற மாட்டார் நம் புலவர் கணக்காயனார். அப்பெரு மான் அருளால் இவருக்கு ஒரு மகவு பிறந்தது. அக் குழந்தை இளமைக் காலத்திலேயே நல்ல சொற்களைக் கூறிற்று. அதனால் அக் குழந் தையை நக்கீரன்* என்று அழைத்தார்கள்.

"தந்தை மகற்காற்றும் நன்றி, அவையத்து முந்தி இருப்பச் செயல்" என்பது திருக்குறள். தந்தை எனப்படுவான் தன் மகனுக்குப் பொரு ளீட்டி வைக்கவேண்டியதில்லை. இக்காலத்தில் பலர் பொருளே உயர்ந்தது எனப் பொருளை மிகுதியும் சேர்த்து வைக்கின்றனர். பொருள் இருக்கும்; அழியும். ஆனால், என்றும் அழியாத பொருள் ஒன்றுண்டு. அதுவே கல்வி எனப் படுவது. கல்வியே கருந்தனம். இவ்வுண்மைகளை எல்லாம் உணர்ந்த அறிஞர் கணக்காயனார். ஆதலினால், தம் மகனாகிய நக்கீரனுக்குக் கல்விச் செல்வத்தைத் தேடி வைத்தார். 'தந்தையே தன் னுவாத்தி' என்பர் பெரியோர். கீரரின்

* ந - சிறந்த; கீரன் - சொற்களைச் சொல்லுபவன்.

தந்தை சிறந்த தமிழறிஞர். ஆதலின், தம் மக னுக்கும் தமிழறிவை நிரம்பத் தந்தார்.

நக்கீரர், தந்தை வழி நின்றார். முறையாகச் சிறு நூல்களைக் கற்றார். உயர்ந்த இலக்கிய நூல் களையும் பயின்றார். இலக்கண நுண்பொருள்களை உணர்ந்தார். இயற்கை இன்பத்தைக் கண்டார். பெருநாவலர் கவிகளில் காணப்படும் உயிர் நிலை யில் கருத்தை ஊன்றினார். தம்மை மறந்து தாமும் அருந்தமிழ்ச் செய்யுள்களைப் பாடினார்.

'மகனறிவு தந்தை அறிவு,' 'மகனுரைக் கும் தந்தை நலத்தை'— என்பன உயர்ந்த பொன்மொழிகள். தமிழறிஞர் பலரும் நக்கீர ரின் இனிய செய்யுட்களைக் கண்டனர் ; உவகை பூத்தனர் ; 'தந்தையை யொத்த மதிநலம் வாய்ந்தான் இவன்' எனப் போற்றினர் ; புகழ்ந் தனர்.

மதுரையில், அக்காலத்தில் சங்கம் ஒன்று இருந்தது. சங்கம் எனினும் கூட்டம் எனினும் ஒன்றே. தமிழ்ப் புலவர்கள் அங்கே கூடுவர். அவர்கள் இனிய செய்யுள்களைப் பாடுவர் ; அருஞ்செய்யுட்கு உரை கூறி மகிழ்வர். அரச னும் அவர்களைப் பெரிதும் மதித்து வந்தனன். அவர்களுடன் சிவபெருமான், முருகன் முதலா னோரும் புலவராய் எழுந்தருளி யிருந்தார்கள் என்றால், அவர்கள் பெருமை எத்தகைத்து?

தமிழாராய்ந்துகொண்டிருந்த புலவர்கள் நக்கீரரின் பெருமையை உணர்ந்தனர். அவரை அழைத்துத் தம்முள் ஒருவராகச் சேர்த்துக் கொண்டனர்.

அக்காலத்தில் நக்கீரருடன் புலவர் நாற்பத்தொன்பதின்மர் இருந்தனர். அவர்கள் தம்முள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வழக்கம். தலைவரைத் தேரும் காலம் வந்தது. அப்போது, நக்கீரரது தமிழறிவின் பெருமையை யாவரும் உணர்ந்திருந்தனர். ஆதலின், வேறுபாடு இல்லாத உள்ளத்தினை உடைய அவர்கள் தகுதி யறிந்து தலைமைப் பெருமையை நக்கீரருக்கே தந்தனர். நக்கீரர், சங்கப் புலவராயிருந்தார். இப்பொழுது சங்கத் தலைவராயினர்.

## 2. உரை கண்ட உயர்வு

பாண்டி நாட்டில் மழைவளம் குறைந்தது. பஞ்சம் தஞ்சம் புகுந்தது. மக்களும் மாக்களும் வாடினர். அரசன் துயருற்றான். செழித்துள்ள நாடு நோக்கி யாவரும் சென்றனர். புலவரும் அவ்வாறு பல நாடுகளுக்குச் செல்லவேண்டியவரானர். ஆகவே, சங்கத்துப் புலவரும் வேறிடம் புகுந்தனர்.

பன்னிரண்டு ஆண்டுகள் கடந்தன. மழை, மீண்டும் பெய்தது. பசும்பயிர் தலைக் காட்டிற்று. தடங்கள் தண்ணீர் நிறைந்து விளங்கின. நாடு குளிர்ந்தது. சென்ற மக்கள் மீண்டும் வந்து குடி புகுந்தனர். அரசன், நூல் வல்ல புலவர்களைக் கொண்டு வருமாறு அமைச்சருக்குக் கட்டளை இட்டான். இலக்கிய அறிவு மிகுந்தவரும் இலக்கண வல்லுநரும் வந்தனர். தமிழ் இலக்கணத்தில் எழுத்ததிகாரம் என்பது, எழுத்தின் இலக்கணத்தைக் கூறுவது. சொல்லதிகாரம் என்பது எழுத்தினலாகிய சொல்லின் அமைதியைச் சொல்லுவது. பொருளதிகாரம் என்பது சொற் பொருளைப் பலவகையால் விளக்குவது. முதலிரண்டு இலக்கணங்களாகிய எழுத்தும் சொல்லும் அறிந்தவர்களையே அமைச்சர் வருவித்தனர். "பொருளிலக்கணம் அறிந்தாரைக் காண்கிலேம்" என்று கூறினர்.

என்னே மன்னன் துன்பம்! நாட்டை இழந்தாலும் அங்ஙனம் வருந்தமாட்டான். "என்ன செய்வேன்! என் தமிழன்னை பொருளிலக்கணம் இல்லாதிருப்பாளோ? என் அன்னையின் உயர் பொருளாகிய உயிர்ப்பொருள் அல்லவா பொருளிலக்கணம்! மதுரையில் எழுந்தருளும் இறைவா! தமிழ்த் தலைவா! யாது செய்வேன்? நீயே இக்குறையைப் போக்க

வேண்டும்,'' என்று மனம் கசிந்தான். மதுரைச் சொக்கநாதர் திருக்கோயிலுட் புகுந்து அப் பெருமானை வணங்கினான்.

இறைவன் பெருமையை என்னென்பது! அரசனின் துன்பம் ஒழுங்கானதே என்று இறைவன் கருதினான்; தானே பொருளிலக்கணத்தை எழுதத் தொடங்கினான். 'அன்பின்' என்று தொடங்கி அறுபது சிறிய செய்யுட்களை எழுதினான். ஒவ்வொரு செய்யுளும் சூத்திரம் என்று சொல்லப்படும். அதற்குக் களவியல் என்று பெயர். மூன்று செப்புத் தகட்டில் அறுபது செய்யுட்களையும் (நூற்பா-சூத்திரம்) எழுதித் தன் இருக்கையின் முன் வைத்தார்.

செப்பிதழ்கள் குருக்கள் கையில் அகப்பட்டன. உண்மை உணர்ந்த அவர், அவற்றை அரசன்பாற் சேர்ப்பித்தார். மன்னன் மனம் எவ்வாறு மகிழ்ந்திருக்கும்! மகிழ்ச்சி சொல்லின் எல்லையைத் தாண்டியது! தன் அரசிருக்கையினின்று எழுந்தான். ஏடுகளுடன் நக்கீரர் தலைமையிற் கூடி இருந்த சங்கப்புலவர் கூட்டத்தை நோக்கி விரைந்து சென்றனன். சென்று அவர்கள் கையில் தந்து, "அறிஞரீர்! இவை எம்பிரான் அருளியவை; உரை வகுத்தல் வேண்டும்'' என்றனன். மாணவர்களே! அரசனின் தமிழ் 'அன்பைக் கவனியுங்கள்!

இவ்வாறு அரசரும் தம் கருத்தை வைத்தாலன்றோ மொழிகள் சிறக்கும்! உயர்வடையும்.

மன்னன் தந்த செப்பிதழ்களி லுள்ளவற்றை யாவரும் எழுதிக்கொண்டனர். ஒவ்வொருவரும் உரை எழுதினர். யாருரையைக் கொள்ளுவது? எவருரையைத் தள்ளுவது?

இந்தச்சிக்கலை எவர்மூலம் தீர்த்துக்கொள்ளலாம்? புலவர்கள், தங்களுக்கு ஒரு காரணிகன் வேண்டும் எனக் கருதினர். காரணிகன் என்போன் நடுநிலைமை மேற்கொண்டு தீர்ப்பு வழங்குவோன். இவர்களிலும்சிறந்தார் வேறொருவர் இல்லை. அவ்வாறிருக்கக் காரணிகனை எங்குத் தேடுவது? அரசனும் மனம் வருந்தினான். புலவர்களுக்கு 'யான் காரணிகனை எங்குச் சென்று தேடுவேன்?' என்றான். அடுத்து, ஓர் எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. 'களவியல் தந்தவன் கடவுள். அவனே காரணிகனையும் தருவன். அவனை வேண்டுவோம்' என்று எண்ணிக் கோவில் புகுந்து வரம் கிடந்தான்.

இடை யாமத்தில், மன்னன் கனவில் நனவே போலப் பின் வருமாறு எம்பிரான் உரைத்தனன்: " அரசனே! மனம் வருந்தற்க. இவ்வூரில் உப்பூரிகுடி கிழான் என்றொருவன் உளன். அவன் மகன் உருத்திரசன்மன், ஐந்து

வயதினன்; ஊமைப்பிள்ளை. அவனைக் கொண்டு வந்து சங்கப் பலகையின்மேல் இருத்தி உரைப் பொருளை உரைப்பீர்களாக. இவன் உண்மை யான உரையைக் கேட்டபோழ்து மெய்ம்மயிர் பொடித்துக் கண்ணீர் ஒழுக இருப்பன். அவ்வா றிருக்கும் நிலைமை பெற்ற உரையை நல்லுரை எனக் கொள்க.'' அரசனும் மகிழ்ந்தான்.

மறுநாள், எம்பிரான் சொன்னவாறே, உருத்திரசன்மனைப் பலகையில் ஏற்றினர். யாவ ரும் உரை கூறியபோதெல்லாம் உருத்திரசன் மன் வாளா இருந்தனன். மருத னிளநாகனுர் என்பவர் உரை கூறியபோது ஓரோரிடத்தில் மெய்ம்மயிர் பொடிக்க இருந்தனன். நக்கீரனுர், அடுத்துத் தாம் எழுதிய உரையைப் படித்தார். ஒவ்வொரு சொல்லையும் உணர்ச்சி மிகக் கேட்ட னன் உருத்திரசன்மன். ஆதலின், நக்கீரர் உரையே மெய்யுரை என்று போற்றப்பட்டது.

அதுகாறும் நக்கீரர் பல செய்யுட்களைப்பாடி இயற்புலவர் என்ற பெருஞ்சிறப்பைப் பெற் றிருந்தார். இப்பொழுது உரை எழுதி உயர்வு அடைந்தார். கடவுளும் அவர் உரையில் ஈடுபட் டார். உரையாசிரியர் என்ற உயர்வும் வந்தது. நக்கீரரின் சிறப்பே சிறப்பு! கல்வியின் பெரு மையே பெருமை!!

## 3. கொண்டானை அடக்கல்

மதுரையில் ஒருபுறம் வடமொழிப் புலவரும் வந்து சேர்ந்தனர். அவரிடத்தில் வடமொழியைப் பலர் கற்றனர். அவருள் ஒருவர் கொண்டான் என்னும் பெயருடையவர். இவர் வேட்கோவர் குலத்துப் பிறந்தவர். இவருக்கு வடமொழியைக் கற்கவேண்டும் என்ற ஆவலுண்டாயிற்று. ஆதலின் அம்மொழியைக் கற்ருர். படித்த அவருக்கு அம்மொழியில் அளவிறந்த அன்பு உண்டாகத் தொடங்கியது. எத்தகைய அன்பு ? தம் தாய்மொழியின் பெருமையையும் மறக்கும் அளவில் அவர் வடமொழியிடத்தில் அன்பு செலுத்தினுர். தம் அன்பை வெளிப்படுத்த ஆசைகொண்டார்.

பறை ஒன்றைக் கழுத்தில் கட்டிக்கொண்டார். இரண்டு தடிக் குச்சிகளைக் கையில் எடுத்துக்கொண்டார். யார் ? கொண்டான் என்ற குயப் புலவர். அடுத்து என்ன செய்தார் ? சாலை வழி வந்தார்; கைத்தடிகொண்டு பறையைஅடித்தார். 'டும், டும்' என்ற ஒலி எங்கும் பரவிற்று. வழியே செல்வோர், "கொண்டான் ஏன் பறை அடிக்கின்ருர் ; கேட்போம்," என எண்ணி நின்றனர். அக்கூட்டத்தைப்பார்த்து, அவர் '**ஆரியம் நன்று ; தமிழ்தீது**' என்று கத்தினுர்.

"என்ன இது! கொண்டானுக்குப் புத்தி மாறிவிட்டதோ? அறிவு அழிந்து விட்டதோ? தமிழ், தாய்மொழி என்பதை மறந்தாரே! ஒழுங் கற்ற முறையில் பேசுகின்றாரே!" என்றெல்லாம் பலர் வருந்தினர். சங்கப் புலவர்பால் இதனை உரைப்போம் எனச் சிலர் விரைந்தோடினர்.

தமிழ்ச் சங்கத்தில், நக்கீரர் தலைவராக அமர்ந்திருக்கின்றார். புலவர் பலர் நூல்களை ஆராய்ந்துகொண்டிருந்தனர். அவ்வமயத்தில் கொண்டானும் தமிழ்ச்சங்கம் இருக்கும் சாலையை அடைகின்றார். அவருடைய கொடுஞ் சொற்களைச் சொல்லுவோம் என்று முன்னோடி வந்தவர், சங்க மண்டபத்தினுள் புகுந்தனர். கொண்டான் கூறுவதை வாய் புதைத்துக் கை கட்டி நின்று கூறினர்.

புலவர் யாவரும் கேட்டனர். சினம் சிறி தும் கொண்டிலர். குணம் என்ற குன்றேறி நின் றவர் அப் பெருந்தகையினர். குடிப்பிறப்பின் பெருமையை வெகுளி ஒழிக்கும் என்றுணர்ந்த மாண்பினர் அவர். ஆதலின் அவர் அடங்கி நின்றனர். தலைவராக இருந்த புலவராகிய நக் கீரரின் திருமுகத்தை நோக்கினர்.

அவாவும், அச்சமும் அறவே அழிய நின்ற வர் அருந்தமிழ்க் கவிஞர்; ஆதலின் ஒன்றினை யும் உரைக்கவில்லை. இதற்குள் கொண்டான்

சங்கத்தின் முன்னர் வந்து நின்றுகொண்டார். ஒலி மிகுதியாக உண்டாகும்படி பறையைக் கொட்டினுர். "தமிழ் தீது! ஆரியம் நன்று" என்று முழக்கினுர். இவ்வளவிலேயே இதனை விடுத்தல் தக்கதன்று என்று புலவர் கருதித் தம் இருக்கையினின்றும் எழுந்தார். மற்றவர் யாவரும் எழுந்தனர். நக்கீரர் வெளிப்புறத்தை நோக்கி நடக்கலுற்ருர். யாவரும் பின்வந்தனர்.

வாயிற்படியில் நின்று, கொண்டானைக் கூவினுர். "என்ன தொண்டு ஆற்றுகின்றீர்?" என்ருர் புலவர் தலைவர். "யாமறிந்த மொழிகளில் ஆரிய மொழியாகிய வடமொழியே உயர்ந்தது எனக் கண்டோம். ஆதலின் அதனை யாவருக்கும் அறிவிக்கின்ருேம்" எனத் தருக்கி உரைத்தார் பறைகொட்டும் புலவர். "நீவிர் பறை சாற்றுவது ஒன்று; இப்போது கூறுவது ஒன்று; வேறுபாடு ஏன்?" என்ருர் தலைவர். "எவ்வாறு சொல்லும்!" என்ருர் குயப்புலவர். "தமிழ் தீமை நிறைந்தது. ஆரியமே சிறந்தது, எனும் பொருள்படச் சொல்லிக்கொண்டு வருகின்றீர். அவ்வாறு சொல்லாமல் வடமொழியை மட்டும் புகழ்கின்றேம் என்கிறீரே?" என்ருர் நக்கீரனுர்.

கொண்டான் சிறிது தலையைத் தூக்கினுர். கால்களை நன்கு ஊன்றிக்கொண்டார். மார்பினை

அகற்றிக்கொண்டார். சிறிது சிரித்துக்கொண்டார். "நன்று; யாம் கூறுவோம். வடமொழியின் பெருமையை யாம் உணர்ந்தோம். அதனுடன் சமமாகவும் நிற்கும் பெருமை தமிழ் மொழிக்கில்லை என உறுதியாகக் கூறுவோம். ஆதலாலே, இவ்வாறு கூறுகின்றோம்," என்று வருவதை அறியாத கொடுஞ்சொற்களைக் கூறினார்.

நக்கீரர், கொண்டான்பால் அன்பு வைத்தார். தமிழ்மகன் என்பதை அவர் நன்கறிவார். ஆயினும் அவர் அறியாமைக்கு வருந்தினார். நன்மொழி கூறித் திருத்த முயன்றார். "ஐய! கோவே! வேட்கோவர் தலைவரே! வடமொழி என்பதன் பொருள் அறிவீரோ?" என்றார். "ஆம்; நன்றாக அறிவேன். வடக்கிலிருந்து வந்தமொழி என்பது அதன் பொருள்," என்றார் அவர்.

நக் : நன்று! நும் நாட்டு மொழி யாது?

கொண் : தமிழ்!

நக் : வடமொழியை முதலில் கற்றீரா? அல்லது தமிழை முதலில் அறிந்தீரா?

கொண் : தமிழையே அறிந்தேன்; அதனால் தமிழையே உயர்ந்தது என்று யான் எண்ண வேண்டுமா?

நக் : நன்று சொன்னீர்! நும்மைப் பெற்றமை யாலேயே நும் தாய்க்குப் பெருமை கொடு என்றுரைத்தால் நீவிர் ஏற்றுக்கொள்வீரா மறுப்பீரா ?

கொண் : இவற்றையெல்லாம் யாம் கேட்டுக் கொண்டிருக்கமாட்டோம். ஆரியம் நன்று தமிழ் தீது.

என்று மேலும் சொல்லியவண்ணம், பறை அடிக்கத்தொடங்கினர்.

'இன்சொல் இனிப் பயன் தராது" என்று அறிந்தார் கீரர். கொண்டானைத் திருத்தாது விடவும் அவருக்கு மனமில்லை. ஆதலால் வன்சொல் கூறியேனும் திருத்த விரும்பினர். "ஆரியத்தில் அழுந்திய புலவரே! தாய்மொழியைக் குறைகூறும் ஒருவரே! கேளும். இதுவரை நீர் வாழச் சிலவற்றைக் கூறினேம். நீரோ ஏற்றுக்கொள்ளவில்லை. என் செய்வது! நும் வினைப்பயனை யார் அறிவர்? ..." என்று கூறிக்கொண்டிருந்தார். அவர் சொல்லி முடிப்பதன் முன், "நும் வார்த்தையைக் கேட்டுக்கொண்டிருக்க எனக்கு விருப்பம் இல்லை. நீர் விரும்புவதைச் செய்யும்," என்றுரைத்து, கொண்டான் பறைகொட்டினர்.

சுடுசொல்லும் பயன் தந்திலது. 'கொட்டினல் தேள், கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சி'

என்பது பழமொழி. ஆதலின், கொண்டானை உணரவைக்கவேண்டும் என்று நக்கீரர் எண்ணினர். "ஏ, கொண்டானே! இதுவரை பலவழியாலும் நல்லவற்றைச் சொன்னேன். வீணே நம் தமிழன்னையைக் குறை கூறினீர்! வடமொழியை உயர்த்தினீர். அதுபற்றி எமக்குக் கவலை இல்லை. தமிழாகிய நம் தாய் மொழியைக் குற்றம் சொன்னீர். ஆதலால் எம்மொழி நும்மால் பாராட்டப்பட்டதோ அம் மொழியாலேயே நும்மைக் கொல்லுவோம்," என்றுரைத்து,

*"முரணில் பொதியில் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணியல்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்
ஆனந்தம் சேர்கசுவா கா" [கொண்டான்

என்ற செய்யுளைக் கூறினர்.

வீரத்துடன் விழித்துக் கொண்டிருந்த கொண்டான் கண்கள் தாமே மூடின! பறை அடிக்க எழுந்த கைகள் அயர்ந்து வீழ்ந்தன; நிமிர்ந்த அவருடலைத் தாங்கிக்கொண்டிருந்த கால்கள் தள்ளாடின; பறை ஒருபுறம் ஆக, அடிக்குங்கோல்கள் மறுபுறம் ஆக, கால் துவள உடல் வளைய, உயிர் அற்றுக் கீழே வீழ்ந்தார்.

* முரண் - மாறுபாடு; பொதியில் - பொதியமலை; முதற்புத்தேள் - அகத்தியர்; ஆனந்தம் சேர்க - இறக்க.

"ஆரியம் நன்று; தமிழ் தீது" என்ற ஒலியும் அடங்கிற்று.

கூட்டமாகக் கூடி நின்ற பலரும் இதனைக் கண்டார்கள். "கொண்டானுயிரைத் தென்னவன் (யமன்) கொண்டான்; இனி ஒன்றும் சொல்லமாட்டான்," என்றனர் சிலர்; "தவருன வழிச்செல்வோர் இவ்வாறுதான் ஆவர்," என்றனர் சிலர். இங்கு இவரிறந்ததை அவர் உறவின்முறையார்க்குக் கூறுவதற்காகச் சிலர் ஓடினர்.

கொண்டானின் அன்னையும், அப்பனும், மற்றவரும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு ஓடி வந்தனர். "ஐயோ, இறந்தாயோ! நம் தாய்மொழியைக் குறை கூருதே என்ருேமே! கேட்டாயில்லையே! நாங்களன்ருே இப்போது வருந்துகின்ருேம்," என்று வாய் விட்டலறினர். புலவர் குழாத்தை (கூட்டத்தை) நோக்கி ஓடினர். நக்கீரருடைய காலில் விழுந்து, எவ்வாறேனும் தம்மவனை உயிர் பிழைத் தெழுமாறு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டனர்.

நக்கீரர், "நன்று! வருந்தாதீர் எமக்கு அவரிடத்தில் எவ்வகை வருத்தமும் இல்லை. நன்றி யறியாது இருக்கின்ருரே எனத்தான் வருந்துகின்ருேம். இனியேனும் திருத்தமுற்ற

அறிவுடன் இருக்கச் செய்க. அவ்வளவே யாம் விரும்புவது,” என்று கூறி,

*“ஆரியம்நன் று தமிழ்தீ(து)என உரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனு ராணையாற்
செந்தமிழே தீக்கசுவா கா”

எனும் பாவினைப் பாடினர்.

கீழே கிடந்த தலை நிமிர்ந்தது. துவண்ட உடல் அசைந்தது. வளைந்த கால்கள் நிமிர்ந்தன. மூடின கண்கள் திறந்தன. ஒட்டிய இதழ்கள் அசைந்தன. விறைத்த கைகள் புரண்டன. வீழ்ந்து கிடந்தவர் எழுந்திருந்தார்; இருந்தவர் எழுந்து நின்றார்; பறையைக் கண்டார். தொலைவில் கிடந்த குறுந்தடிகளைக் கையில்கொண்டு பறையை அடித்து, “ஆரிய...” என்று பழைய பல்லவியைப் பாடத் தொடங்கினர்.

இதுவரை உயிர்பிழைத்தெழும் அவரைக் கண்டுகொண்டிருந்தனர் அவர் உறவினர். மீண்டும் பழைய செயலையே செய்ய முற்படுதலை இப்போது அறிந்தனர். இச் செயலே முன்னர் அவர் உயிரைப் போக்கியது. அதனை அவர் அறியவில்லை. ஆதலின் அவர் உறவினர் விரைந்து அவரிருக்கும் இடத்திற்கு ஓடினர்; அழுத்தமாக அவர் வாயினை மூடினர்; “அச் சொற்களைச் சொல்லாதே!” என்றனர்.

*காலக்கோட்படல்—எமனால் கொள்ளப்படல், இறத்தல்.

கொண்டான், 'ஏன்?' என்றார் ; விழிக்கின்றார். நக்கீரருடன் தான் பேசிக்கொண்டிருந்தது அவர் நினைவுக்கு வந்தது. பின் என்ன நடந்தது என்பதையே அறியாதிருந்தார். உறவினர்களைக் காணவே, ஏதோ நடந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கின்றார்.

"ஏன் என்று கேட்கிறாய்? உன்னையே நீ எண்ணிப் பார். நின்றிருந்த நீ, ஏன் கீழே



கிடந்தாய்? ஒன்றும் தெரியவில்லையா? உன் முன் நிற்கும் இத் தமிழ்க் கடவுளைக் காண்பாயாக. இவரே உனக்கு உயிர் கொடுத்தவர். இவர் திருவடிகளை முதலில் வணங்கு; பறையை

அப்புறப்படுத்து ; குறுந்தடிகளை வேற்றிடத்தில் வீசு ; வீண் சொற்களை இனியேனும் சொல்லாதே," என்றனர் உறவோர்.

கொண்டான் யாவற்றையும் அறிந்தார். தான் செய்தது தவறு என உணர்ந்தார். தம்மைக் கொன்றவர் மீண்டும் உயிர் தந்தார் என்பதை அறிந்த காலத்தில், அவருக்கு நக்கீரர் பால் அன்பு வளரலாயிற்று ! கண்கள் நீரைப் பெருக்கின ; உடலினை மண்மேல் கிடத்தினர் ; தலைமேல் கைகளைக் கூப்பினர் ; "அன்புக் கிருப்பிடமே ! அடியேன் செய்த பிழையை மன்னிக்க வேண்டும்," என்று கூறி, வாய் பொத்தி அடக்கமாக எழுந்து நின்றார்.

பறையினைத் தொட்டுப் பார்த்தார். கையிலிருந்த அடிக்கும் தடிகளால் பறையை ஓங்கி அடித்தார். கேட்போர் காது செவிடுபடும்படி, "ஆரியம் தீது ! தமிழ் நன்று !" என்று கூறினர். நக்கீரர் உடனே, 'வேண்டா' எனக் கை அசைத்தார். "கொண்டானே ! எம் அன்பைக் கொண்டோனே ! வேண்டா. அவ்வாறும் கூறுதே. அம்மொழியும் வாழட்டும். நம்மொழியும் வாழ்க. பிறரைக் குறை கூறுவது நமக்கு அடாத செயலாகும். தாய்மொழியில் நின் அன்பு குறைவின்றி இருந்தாற் போதுமானது," என்று சொல்லிச் சங்கத்தை அடைந்தார்.

மாணவர்களே ! புலவரின் வன்மையைக் கண்டீர்களா ! கொல்லும் வன்மையும் பிழைக்க வைக்கும் வன்மையும் அறிவுடையோர்க் குண் டென்பது புலப்படுகின்றதன்றோ ?

## 4. குற்றம் குற்றமே !

நக்கீரர் காலத்திருந்த பாண்டியமன்னன் *சண்பகமாறன்* எனப்படுவான். சொக்கநாதக் கடவுளுக்குச் சண்பகமாலை அணிந்து வந்தமை யால் இப்பெயர் பெற்றான். இவன் வேனில் காலத்தில் மலர்ச்சோலை சென்று உலாவுவது வழக்கம். அக்காலத்துப் பெருங்கோப்பெண்டும் (பட்டமகிஷி) உடனிருப்பள். ஒருநாள் நறு மணம் வீசிற்று. நறுமணம் வந்தது எவ்வாறு என மன்னன் எண்ணினான். சுற்றிலும் அத் தகைய மணத்திற்குக் காரணமாக மலர் ஒன்றும் இல்லை. அவன் பட்டத்தரசி மட்டும் தலைமயிரை ஆற்றிக்கொண்டிருந்தாள். இந்தக் கூந்தலிலி ருந்துதான் மணம் வந்ததோ என்று ஐயுற்றான். ஆனால், அவள் மலர் ஒன்றும் சூடிக்கொண்டி ருக்கவில்லை. ஆகவே, கூந்தலுக்கே இயற்கை யாக மணம் இருக்கவேண்டும் என ஊகித்தான். அதன் உண்மையை அறிய ஆவல்கொண்டான்.

மறுநாள், 'தன் மனத்தில் உள்ளதைக் கூறு வோர், இப்பொற்கிழியைக் கொண்டு போகலாம்' என்று சொல்லி, ஒரு பொற்கிழியைத் தூக்குவித்

தான். ஆயிரம்பொன் அடங்கிய முடிச்சு இங்கே பொற்கிழி எனப்பட்டது. பல புலவரும் பல செய்யுள்களை எழுதி மன்னனுக்குக் காட்டினர். மன்னன் கருத்தினுக்கு யாதும் ஒத்துவரவில்லை.

சொக்கநாதரை வணங்கித் திருக்கோயில் தொண்டு செய்து வாழ்ந்தவன் தருமி என்பவன். அவன் மணம் ஆகாதவன். மணம் செய்து கொள்ளவேண்டும் எனும் விழைவு உள்ளவன். ஆதலின், அங்கயற்கண்ணி பங்கரை அடைந்தான்.

“எங்கும் நிறைந்த எம் தலைவரே! உமக்குப் பாண்டியனுள்ளம் தெரியாதா? அவன் கருத்தறிந்து ஒரு செய்யுளை எழுதித்தரல் வேண்டுகின்றேன். அவ்வாறு செய்யின், நான், கிழியிலுள்ள ஆயிரம் பொன்னையும் அடைந்து மணம் செய்து கொள்ள முடியும்,” என்று கூறி வணங்கினன்.

இல்லறவழி நிற்கத் தருமி விழைவதை இறைவனும் விரும்பினன். ஆதலின், “கொங்குதேர் வாழ்க்கை” என்ற தொடக்கமுடைய செய்யுளை எழுதிக்கொடுத்தனன். கொண்ட தருமி, அரசனை அடைந்து காட்டினன். கருத்தொத்து இருத்தலைக் கண்ட மாறன் மகிழ்ந்து, ‘கிழியைக் கொண்டு போக,’ என்று உத்தரவு இட்டான்.

பூரித்ததொண்டன் கிழியை எடுக்க நெருங்குகின்றான். “நில் நில்; கிழியைத் தொடாதே!

நின் செய்யுள் குற்றமுடையது. சொற்குற்றம் ஒன்றுமில்லை ; பொருட்குற்றம் இருக்கின்றது,'' என்று சொல்லித் தடுத்தார் கீரர்.

தருமி பொருமினான். 'கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லையே !' என வருந்தினான். 'ஆண்டவன்பாற் சென்று கூறுவேன்' என்று கோயிலை அடைந்தான். "சுந்தர ! ஆலமுண்ட கந்தர ! வேத மந்திர ! என்ன ஒழுங்கு ! கீரனும் கவியில் குற்றம் காட்டினான். பொருட்குற்றம் உண்டு என்று கிழியைத் தர மறுத்தான். நும் பெருமைதான் என்ன ? இதுவோ எனக்கு அருள் புரியும் வழி ?'' என்று சொல்லி வருந்தினன்.

பிறர் உடன் வர, சொக்கநாதனே, புலவர் போல் தோற்றம் கொண்டு சங்கத்தைச் சார்ந்தான். புலவர்கள் முன்னர் நின்றான், "என் கவிக்குக் குற்றம் கூறினார் யார் ?'' என்று வினவினன். 'யான் கூறினேன் !' என்றார் கீரர்.

புலவர் :—என்ன குற்றம்?

கீரர் :—கூந்தலுக்குச் செயற்கை மணம் உண்டு; இயற்கை மணம் இல்லை. நும் செய்யுள் இயற்கை மணம் உண்டு என்கின்றது. ஆதலின் பொருளால் குற்றப்பட்டது.

புலவர்:-உயர்ந்த பெண்கள் கூந்தலுக்குஇயற்கை மணம் உண்டென்பதை அறியீரோ ?

கீரர் :—இல்லை. இயற்கை மணம் கூந்தலுக்கு இல்லை.

புலவர் :—தெய்வப் பெண்கள்கூந்தலுக்காவது இயற்கை மணம் உண்டோ ?

கீரர் :—இல்லை.

புலவர் :—நீர் வழிபடும் பரமனருகில் எழுந்தருளி இருக்கும் ஞானப்பூங்கோதை அம்மையின் கூந்தலுக்கும் இயற்கை மணம் இன்ருே ?

கீரர் :—அதுவும் அவ்வாறே.

வந்த புலவராகிய ஆண்டவன் தன் நுதல் விழியினைச் சிறிது திறந்து காட்டினன். "நின் உடம்பெல்லாம் கண்களாயினும் நின் செய்யுள் குற்றமுடையதே. குற்றங் குற்றமே!" என்ருர் கீரர். சிவன்விழி கான்ற அனல் அவரைத் துன்புறுத்த அவர் அருகிருந்த பொற்ருமரை வாவியில் விழுந்து வருந்திஞர். இறைவன் மறைந்தனன்.

சங்கப்புலவர் கீரரின் துன்பத்தைக் காண வருந்தினர். பெருமானை வணங்கி வேண்டினர். கற்ருருக்கு ஆவன புரியும் இறைவன் மனம் அன்பு நிறைந்தது. ஆதலின், தாமே முற்பட்டுக் கீரனைக் கரையேற்றிஞர். கீரர் உடம்பெல்லாம் வெந்து வெப்புப்புண் உண்டாய்

விட்டது. ஆண்டவன், "நக்கீரா! கைலைக்கு வா; நின்னுடற் புண்ணைப் போக்குவோம்," என்று கூறி மறைந்தார்.

## 5. முருகாற்றுப் படை மொழிதல்

முதற்கடவுள் நெற்றிக்கண்கொடிய அனலை வெளியிட்டது என்று முன் சொன்னோமல்லவா? அச்சூடு தாங்காமல் நக்கீரர் பொற்றாமரை வாவியில் புகுந்தார். சிவபெருமான் கரையேற்றக் கரை சேர்ந்தார். ஆனால் வெப்புநோய் புலவரை வாட்டத் தொடங்கியது. இந்நோயை நீக்குதற்காகவே 'கைலை வா' எனக் கடவுள் கட்டளை இட்டார்.

கைலை செல்ல வேண்டும் எனின், மதுரையை விட்டுப் பிரிதல் வேண்டும். தமிழ்ச் சங்கத்தை விட்டு நீங்கவேண்டும். தமிழ்ப் புலவர்களினின்றும் பிரிதல் வேண்டும். என்றும் வணங்கி வந்த சொக்கநாதர் திருவடிகளைப் பின்னர்க் காணல் இயலாது. காணும் கடவுளாய்த் தமிழ்க்கு உறையுளாய் எழுந்தருளியிருந்த பாண்டிமன்னன் தொடர்பும் இல்லாது நீங்கும். இவ்வாறெல்லாம் பல எண்ணிப் புலவர் வருந்தினார். ஆண்டவன் கட்டளையை எவர் மீறுவர்?

தம் பிரிவை யாவரிடமும் சொல்லிக் கொண்டார் புலவர். எல்லோரும் மனம் கசிந்தனர். மன்னன் அழுதுகொண்டு நின்றான்.

மக்களைப்பற்றிக் கூறுவானேன்? நக்கீரர் கண்கள், இரண்டு அருவிகளாக நீரைச் சொரிந்தன.

பாண்டி நாட்டெல்லையை நீங்கினார். கைலையைக் காணும் எண்ணத்துடன் வடக்கு நோக்கி நடந்தார். புலவருள்ளம் உலகத்துயரை எண்ணவில்லை. "என்று இனிக் கைலை காண்போம்? என்று கைலை நாதன் அருள் கிடைக்கும்?" என்றே எண்ணிக்கொண்டு சென்றார்.

ஒரு மலைச்சாரல் அவர் கண் முன்னர்த் தோன்றியது. அங்கு அடைந்த புலவர், ஒரு பெரிய ஆலமரத்தினைக் கண்டார். அதன் நிழலில் ஒரு பெருந் தடாகம் இருந்தது. நீரினையும் நிழலினையும் கண்ட புலவர்க்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. கடவுளை வழிபடுவதற்குத் தக்க இடம் என அதனை எண்ணி, இறைவனை எண்ணும் உள்ளத்தோடு அமர்ந்தார்.

அங்கிருந்த ஆலமரத்திலும் அதன் கீழிருந்த குளத்திலும் ஒரு புதுமை உண்டு. ஆலமரத்திலிருந்து விழும் இலை மண்மேல் வீழ்ந்தால் பறவையாகிப் பறந்து செல்லும். தடத்து நீரில் விழுந்தால் மீனாகி நீந்திச் செல்லும். கீரர், இறை எண்ணத்துடன் இருந்தபோது ஓர் இலை நீரிலும் நிலத்திலும் விழுந்தது. நீரில் விழுந்த பகுதி மீனாயிற்று. நிலத்தில் விழுந்த பகுதி பறவை ஆயிற்று.

இரண்டும் அவர் உள்ளத்தை இழுக்கத் தொடங்கின. இதனைக் கண்டு வியந்தார் கீரர். தம் கடவுள் வழிபாட்டைச் சிறிது மறந்தார்.

அச்சம் விளைக்கும் பூதம் ஒன்று தோன்றியது. புலவரைத் தூக்கிச் சென்றது. ஒரு மலைக்குகையில் வைத்து மறைந்தது. அவ்விடத்தில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மர் இருந்தனர். அவர்களும் நக்கீரரைப்போலவே கடவுள் வழிபாட்டில் தவறியவர்கள். அவ்வாறு தவறியவர் ஆயிரவரைக் கொன்று உண்ணும் நோன்பினை அப்பூதம் கைக்கொண்டிருந்தது. நக்கீரருடன் அத்தொகை நிறைந்தது. ஆதலின் எல்லோரையும் கொன்று உண்ணும் எண்ணத்துடன் பூதம் வெளியிற் சென்றது.

"நக்கீரர் வந்தமையாலே தாங்களும் சாவ நேர்ந்தது," என்றுசொல்லி மற்றவர் வருந்தினர். நக்கீரர், தனக்கென வாழாது பிறர்நலத்தையே பெரிதும் மதிக்கும்பெரியார். ஆதலால், மற்றவர்களை வாழ வைக்க விரும்பினர். தமிழ் நாட்டுத் தனிப்பெருங் கடவுளாகிய முருகனை எண்ணினர். ஐந்து பூதங்களிடை வருந்தும் உயிரைக்காக்கும் வன்மையுடையவன் அவன்; ஆதலால், இச் சிறிய பூதத்தினிடமிருந்த மற்றவரையும் காத்தல் எளிது என்ற முடிவுக்கு

வந்தார். திருமுருகாற்றுப்படை என்ற அரிய நூலை மொழிந்தார்.

முருகன் தோன்றினான். செவ்வேளின் வேல் மலையைப் பிளந்தது. பூதம் ஒழிந்தது. யாவரும் உய்ந்தனர். வெப்பு நோயால் புலவருடல் வருந்துகின்றதே எனத் தாயொத்த முருகன் வருந்தினான். 'கைலைக்கு வருக' என்ற சிவபெருமான் கட்டளையை அறிந்தான். "தென் கைலை வடகைலை என வேறு பிரித்துப் பெருமான் கூறவில்லை. ஆதலின், தென்கைலை ஆகிய திருக்காளத்திக்குச் செல்லுக," என்று முருகன் அன்புடன் கூறினான்.

அவன் விருப்பப்படியே கீரர் காளத்தி சார்ந்தார்; இறைவனை வழிபட்டார். வெப்புநோயாகிய உடல்நோய் ஒழிந்தது. உயிர் நோயும் அகன்றது. இறை நலம் உற்றார். இன்பவாழ்வில் திளைத்தார். என்றும் மாறாப் புகழைப் பெற்றார்.

## 6. முடிவு

கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று இவர் போற்றப்படுகின்றார். இவரின் சிறப்பியல்புகளைக் காணுங்கள். தந்தைக்குத் தக்கமகனாய் விளங்கினார். தந்தை தன் கடமைகளாகிய கல்வி கற்பித்தல் முதலியவற்றைச் செய்தும், எத்துணை மக்கள் சீரிய ஒழுக்கம் இல்லாது போகின்றனர்.

தந்தைவழி நின்று நற்பெயர் பெற்ற கீரரின் சிறப்பைச் சிந்தித்து நீங்களும் அவரைப்போல் உயர்ந்த நோக்கத்துடன் வாழுதல் வேண்டும்.

நீங்காத உழைப்பை மிகுதியாகக் கொண்டவர் கீரர். அதனாலன்றோ உருத்திரசன்மன் இவருரையே உயர்ந்தது எனக் கொண்டான். அவர் புலவர் பலரிடையிலும் சிறந்து விளங்கினாரென்றால், நீங்களும் எவ்வாறு சிறக்க வேண்டும் என்பதை எண்ணிப்பாருங்கள் !

தம் மொழியாகிய தாய்மொழியைக் குறை கூறுவதை இவர் ஏற்கவில்லை. நயமாக இவர் சொல்லும்பொழுது கடுஞ் சொல்லையே கொண்டான் கூறுகின்றார். சொல்லால் பயனில்லை என்று அறிந்த பின்னரே அவர் இறக்கப் பாடுகின்றார். கடைசிவரையிலும் பொறுமையுடனும் அடக்கத்துடனும் இருக்கும் புலவர் பெருமையைக் காணுங்கள் !

‘நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே’ என்ற இவர் மனத்துணிவு, நமக்கெல்லாம் அச்சத்தை உண்டாக்குகின்றது அன்றோ? கடவுள் என்று அறிந்தும், தாம் முன்னர்க் கூறியதை மறுத்து வேறு ஒன்றும் சொல்லவில்லை. ‘குற்றம் குற்றமே’ என்று மொழிகின்றார். இவ்வாறு துணிபு நிறைந்த மனம் நமக்கு ஒருவாறு வேண்டியதே.

தமக்கென ஒன்றையும் பெரியோர் கருதார். பிறருக்கே வாழ்நாளை ஆக்குவார் அறிஞர். ஆதலால், மற்றவர் துன்புறுகின்றாரே என்று முருகனைஎண்ணலானார்; ஆற்றுப்படைமொழிந்தார்; ஆண்டவன் அடிகளை அடைந்தார். இவர் நம்மால் எக்காலத்தும் மறக்கத்தக்கவரல்லர்.

---

# உ. தமிழ் மூதாட்டியார்

## 1. அதியமானுடன் நட்பு

வடக்கில் வேங்கட மலையையும் தெற்கே குமரியையும் எல்லையாக உடையது நம் தமிழ் நாடு. இதன்கண் ஒருபகுதி சேர நாடு. அந்நாட்டில் ஔவையார் என்ற அம்மையார் பல நூறு ஆண்டுகளுக்கு முன் பிறந்திருந்தார்.

அக்காலத்தில் ஆண்களும் பெண்களும் ஒருசேரப் படித்திருந்தனர். இருசாராரும் சிறந்த அறிஞர்களாக விளங்கினர். குறவர்குடி மறவர் குடி முதலிய குடிகளிலெல்லாம் கல்வி சிறந்த பெண்பாற் புலவர்கள் வாழ்ந்தார்கள். குறமகள் இளஎயினி என்பவர் மறவர் குடியினர். குயவர் மரபில்பிறந்தவர் வெண்ணிக் குயத்தியார். ஆதிமந்தியார் அரசகுலத்தினர். ஆகவே, எக்குடியிலும், நல்லறிவு பெற்றுப் பாடும் வன்மையும் கொண்ட பெண்கள் வாழ்ந்தனர். அவ்வாறே

ஔவையார் என்ற அம்மையாரும் தமிழ் கற்றுப் புலமை எய்தினர். ஆடலைக் குறிக்கும் தமிழ், நாடகத் தமிழாகும். பாடலைக் குறிப்பது இசைத் தமிழ் எனப்படும். இந்த இரண்டிற்கும் இன்றி யமையாது இருப்பது இயற்றமிழ் ஆகும். இம் முத்தமிழினையும் அம்மையார் அழகுறக் கற்ருர்.

நம் அம்மையார் விறல் (சாமர்த்தியம்) தோன்ற ஆடியும் பாடியும் விளங்கினர்; ஆதலால் விறலி என்று அழைக்கப்பட்டார் என்பர் சிலர்; இவர் முடியரசர்களையும் சிற்றரசர் களையும் பாடிப் பரிசில் பெறுவர்.

சேரநாட்டின் ஒரு பகுதியாக விளங்குவது தகடூர். தகடூரையும் அதனைச் சார்ந்த இடங் களையும் தகடூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்டவன், அதியமான் நெடுமானஞ்சி என்ப வன். இவன் நாட்டில் குதிரைமலை சிறந்து விளங்கியது. இவன் சிறந்த வள்ளல். போரி லும் சிறந்த வீரன். மழவர்கள் எனும் ஒரு வகை வீரர்களுக்குத் தலைவன். சேர அரசனுக்கு உறவினன். பனைமாலையை அடையாள மாலை யாகச் சூடுபவன். இவன் முன்னோர் விண்ணுலகி லிருந்து கரும்பைக் கொண்டுவந்தனர் என்று கூறப்படுகிறது. இம் மன்னன் தாய்மொழி யாம் தமிழில் மிக்க விருப்பமுடையவன். இவன் சிறப்புக்களை எல்லாம் ஔவையார் அறிந்தார்.

இவனைக் காணவிரும்பிய மூதாட்டியார் தகடூரை அடைந்தார்.

அம்மையை எதிர்கொண்டனன் அரசன். தக்க இடத்தில் இருக்குமாறு செய்தனன். புலமை நிறைந்த அம்மையுடன் கலந்து உரையாடி மன்னன் மகிழ்ந்தான். பின், "நும் நாட்டில் சண்டை இடும் வீரர் இருக்கிறாரோ?" என்று அதியமான் வினவினன். அதற்கு அம்மையார் 'அடிக்கும் கோலுக்கும் அஞ்சாது பாம்பு எதிர் மண்டும். அவ்வாறு, பகைவர் அம்புக்குச் சிறிதும் அஞ்சாது முன்னேறிப் போர் செய்யும் வீரர் இருக்கின்றனர். அவரே அன்றி எம் தலைவனும் இருக்கின்றான். அவனியல்பினைக் கூறுவேன். மன்றங்களிலே கட்டப்பட்டிருக்கும் முழவு, காற்றடிக்கும்போது ஓசையை உண்டாக்கும். அவ்வொலியைப்பகைவர் போர் முரசு ஒலி என்று தவறாக எண்ணி உடனே போருக்கு எழும் இயல்புடையவன்," என்று கூறினார்.

இவ்வாறு இருவரும் உரையாடி மகிழ்ந்தனர். நாள் பல கடந்தன. பன்னாள் பழக்கத்தால் அதியமானின் வீரச் சிறப்பை அம்மையார் அறிந்தார். தாம் அறிந்தவாறே அரசனைப் புகழ்ந்தார். பகைவர்களை அறிவுறுத்துபவராக, "பகைவர்களே! நான் கூறுவதை எண்ணுங்கள். எளிமையாக வென்றுவிடலாம் என்ற எண்ணத்

துடன் என் தலைவனாகிய அதியமானுடன் போர்க்களம் புகாதீர்கள். என் தலைவன் வன்மையைக் கூறுகின்றேன். ஒரு நாளைக்கு எட்டுத் தேர்களைச் செய்யும் ஆற்றல் ஒரு தச்சனுக்குண்டு. அத்தகையவன் ஒரு மாதம் முழுவதும் உழைத்துத் தேர்க்கால் ஒன்றைச் செய்தான். ஆகவே, 240 தேர்களைச் செய்துமுடிக்கும் காலத்தில் ஒரு சக்கரத்தின் ஒரு சிறுபகுதி ஆகிய தேர்க்காலினைச் செய்தான் என்றால், அத்தேர்க்காலின் வன்மையைப்பற்றிக் கூறல் வேண்டுமா? அவ்வாறே ஒரு தலைவனாகிய அதியமான் இருக்கின்றான்," என்றார்.

மற்றொரு முறை, "காந்தள், குளவி முதலிய மலர்கள் கமழும் இடம் மலைச்சாரல். அங்குள்ள குகைகளில் புலிகள் வாழ்கின்றன. அப்புலிகள் வெகுண்டால் எதிர் நிற்கும் மான்கூட்டம் உண்டோ? அலரவன் இல்லா இராக்காலத்தில் இருள் நிறைந்து நிற்கின்றது. ஞாயிறு எழுந்தால் இவ்விருட்கூட்டம் எதிர் நிற்குமோ? வண்டியில் பண்டம் நிரம்பிக் கிடக்கின்றது. அதனால், பார் அச்சுமரத்தோடு தாக்குகின்றது. இந்த நிலைமையில், சுமையைச் சிறிதும் மதியாது சாலையில் நிறைந்துள்ள மணல் பரக்கவும் இடையில் அகப்படும் கற்கள் பிளக்கவும் பகடுகள் செல்லுகின்றன; இப் பகடுகளால் போதற்கரிய

துறையுமுண்டோ ? இல்லை. அவ்வாறே, அதிய மானே ! நீ போர்க்களம் புகுந்தால் நின்னோடு நிற்கும் ஆற்றல் வாய்ந்த அரசர் யாரும் இல்லை," என்று அதியமானின் உண்மை வீரத்தை எடுத்தியம்பினார்.

தம்மைப் புகழ்ந்து பாடும் புலவருக்குத் தக்க பரிசைத் தருதல் அதியமானின் வழக்கம். அம்மையாரின் அரும்புகழ்ச் செய்யுள்களைக் கேட்டான். வழக்கம்போல் அவருக்குப் பரிசு அளிக்கவேண்டியது முறை. அங்ஙனம் பரிசு அளித்தால் 'இச் செந்நாப் புலவர் நம்மைவிட்டு நீங்கி விடுவார்' என்று அதியமான் அஞ்சினான். அவரைத் தன் பக்கத்திலேயே எப்பொழுதும் இருக்கும் வண்ணம் செய்யவேண்டும் என்பது அஞ்சியின் நோக்கம் ; அவருடைய இன்சுவைச் செய்யுள்கள் ஈடும் எடுப்பும் அற்றன. அவற்றைக் கேட்டுக்கொண்டிருத்தல் அமிழ்தத்தை ஒக்கும் ஆதலால், அரசன் எவ்வாற்றானும் ஔவை யாரைத் தகடூரிலேயே இருத்திக்கொள்ள விரும்பிப் பரிசில் கொடுக்காது இருந்தான்.

பரிசில், அவன் அடுத்த நாள் தருவன் ; அதற்கடுத்த நாள் தருவன் என்று ஔவையார் எதிர்பார்த்தார். பகல் வந்தது; இரவு வந்தது ; மீண்டும் பகல் வந்து கழிந்தது ; அவ்வாறே இரவும், ஆனால் பரிசில் வந்தபாடில்லை. இனித்

தங்குதல் நன்றன்று என்று ஔவையார் கருதினார். இக்கருத்தை அதியமானிடத்தில் கூற அவர் விரும்பவில்லை. ஆதலின் வாயில் காப்போனை நெருங்கிப் பின் வருமாறு கூறினார்.

"வாயில் காப்பவனே! வருகின்ற சிறந்த புலவர்களுக்கெல்லாம் வேண்டும் பரிசைத்தரும் அதியமானின் வாயில் காப்பாளனே! நும் தலைவனாகிய அஞ்சி தன் தரம் அறியாதவனோ? அன்றி, எம் தரம் அறியாதவனோ? பரிசில் தராமல் என் காலம் நீட்டித்தான்? உலகத்தில் தமிழை அறிந்த அறிவினையும் புகழையும் உடையோர் பலர், இவனைப்போல் இருக்கின்றார்கள். எம் யாழைக் கைக்கொண்டோம். மற்றைய இசைக் கருவிகளையும் ஒன்று சேர்த்துக் கொண்டோம். இனி, தச்சுத் தொழிலில் சிறந்தவர், காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் எல்லாம் அவர் தொழிலுக்குப் பயன்படும். அவ்வாறே, தமிழறிவு சான்ற யாங்கள் எங்குச் சென்றாலும் வரவேற்கப்படுவோம்," என்றியம்பிச் சென்றார்.

வாயிலோன் விரைந்து அரசனைச் சார்ந்து இந் நிகழ்ச்சியை உரைத்தனன். அஞ்சி, அஞ்சினன். புலவர்தம் சொல் கூரிய அம்பினும் வன்மை உடையது. அவர் உள்ளம் வருந்தின் அது பெருந் துன்பத்தைப் பயந்தே தீரும்.

'குணம் என்னும் குன்று ஏறி நின்றவர்' ஔவை யார். ஆதலின் அவர் மனம் வருந்தலாகாது. இவற்றை உணர்ந்தவன் அஞ்சி; ஆதலின் முன் சென்று அம்மையாரைக் கண்டு வணங்கினன். பரிசில் நீட்டித்தற்குரிய காரணத்தைக் கூறி னன். அம்மையின் அகம் மலர்ந்தது. அஞ்சி யின் உண்மை அன்பை அறிந்து கண்ணீர் சொரிந்தார். அவ் வுணர்ச்சி மேலீட்டால் பின் வருமாறு கூறினர்.

'ஒருநாள் அல்ல; பலநாள் அல்ல; எத்துணை நாள் அடுத்தடுத்துச் சென்றாலும், 'முன்னர் இவருக்குப் பரிசு தந்துள்ளோம்; இப்போதும் தரவேண்டியதில்லை' என்று அஞ்சி எண்ண மாட்டான். முதல் முதலில் கண்ட காலத்தில் அவன் அன்பு இருந்தபடியே எப் போதும் இருக்கின்றது. அவ்வன்பு என்றும் மாறுவது இல்லை. பரிசு அளிப்பதிலும் அவன் தவறமாட்டான். காலம் நீட்டித்தாலும் பரிசில் தருவதில் ஐயமில்லை. யானையின் கொம்பில் வைக்கப்பட்ட கவளம் யானையால் உண்ணப் படும். அவ்வாறே பரிசில் தவறின்றி நம்மைச் சாரும். ஆதலின், நெஞ்சமே! வருந்தவேண்டா. அஞ்சி, நன்றாக வாழ்வானாக!"

புலவர், தகடூரில் பல்லாண்டு வாழ்ந்தார். பெருமலையில் அரியதோர் நெல்லிக்கனியை

அஞ்சி அடைந்தான். அதனை உண்டோர் நீண்டநாள் வாழ்வர். பெற்ற கனியைத் தானுண்டு நீண்ட காலம்வாழ அரசன் விரும்ப வில்லை. ஔவையார் நீண்ட ஆயுளுடன் இருக்கவேண்டும் என எண்ணினான்; ஆதலி னால், அக்கனியை அவருக்குக் கொடுத்து உண் ணச்செய்தான். உண்மையை அறிந்த அம்மை யார், சிவபெருமானைப்போல் என்றும் அஞ்சி வாழவேண்டும் என்று வாழ்த்தினார்.

## 2. தொண்டைமான் செருக்கடக்கல்

தகடூரில் அதியமான் ஆட்சிபுரிந்த காலத் தில் காஞ்சி நகரத்தைத் தொண்டைமான் என்ப வன் ஆண்டான். தொண்டைமான், அஞ்சியை வெல்லவேண்டும் என்று எண்ணினான். அதற் காக ஒரு படையைத் திரட்டி ஆயுதங்களை யெல் லாம் ஒழுங்காகச் செய்தான். இந் நிகழ்ச்சியை அதியமான் எவ்வாறோ அறிந்தான். 'தொண்டை மானோடு போர்செய்ய நேர்ந்தால் தோல்வி ஐயமின்றித் தொண்டைமானுடையதே. ஆனால் வீணில் வீரர் பலர் இறக்க நேரும். ஆகவே, போர் நடவாது தடுக்கவேண்டும், அதற்கு வழி என் வலியைத் தொண்டைமானுக்குச் சீராக அறிவித்தல்வேண்டும்; அவ்வாறு செய்யின் அவன் தன் எண்ணத்தை மாற்றினும் மாற்றிக்

கொள்ளலாம். அங்ஙனம் சென்று கூறி அவன் மனத்ததாகிய தீய எண்ணத்தை மாற்றுவோர் யார்? யாரை அனுப்பினால் இச்செயலைச் சீர் பெறச் செய்வார்?' என்று நினைத்தான்.

இத்தகைய காலங்களில் அரசன் ஏவலால் செல்வோர் தூதுவர் எனப்படுவார். அவர் இரண்டு வகைப்படுவார். ஒரு வகையார் தங்கள் அறிவால் பேசுவோர்; மற்றொருசாரார், அரசன் சொல்லியனுப்பியதைச் சொல்லுவோர். இவர், முன்னவரின் தாழ்ந்தவர்.

தூதருக்குச் சிறந்த குணங்கள் மூன்று. அவை, அன்பு, அறிவுடைமை, ஆராய்ந்த சொல்வன்மை என்பவை. தன் அரசன் மாட்டு அன்புடையவராய்இருக்கவேண்டும். வேற்றரசர் பால் சொல்லுங்கால் ஆர்ராய்ந்துசொல்லும் வன்மையைப்பெற்றிருக்கவேண்டும். தம்அரசனுக்கு ஆவன அறியும் அறிவையும் பெற்றிருத்தல் வேண்டும். தாம் கூறும் சொற்களால், தம் உயிருக்கு வேற்றரசன் தீங்கு செய்தாலும் அஞ்சலாகாது. அஞ்சாமல் தம் தலைவனுக்கு உறுதி பயக்கும் சொற்களைக் கூறுபவனே தூதுவனாதற்குரிய முழுத் தகுதியை உடையவனாவான். இத்தகுதிகள் உடையவரைத் தொண்டைமானிடம் அனுப்பல் வேண்டும். அப்போதுதான் அஞ்சியின் எண்ணம் நிறைவேறும். ஆகவே, இங்

நுனம் சிறந்தார் யார் என அவன் எண்ணினுன். தன் அமைச்சர் பலரினும் இக்குணங்களை ஒருங்கே பெற்று விளங்குபவர் ஔவையாரே என்று துணிந்தான். ஆதலால் தொண்டை மானிடம் தூது சென்று அவனைத் திருத்த வேண்டும் என்று அவரை வேண்டினன்.

ஔவையார் காஞ்சிபுரத்தை அடைந்தார். தமிழறிஞராகிய அம்மையைத் தொண்டைமான் எதிர்கொண்டனன். தன் பகைவன் எனத் தான் கருதும் அதியமானிடமிருந்து அம்மையார் வருகின்ருர் என்பதைக் காஞ்சி மன்னன் அறிந் தவனே. இருந்தும் அவர்களை அன்போடு எதிர்கொள்கின்றனன். காரணம் என்ன? அவனுக்குத் தமிழ்ப் புலவர்பால் இருந்த நன் மதிப்பும் அன்பும் தூதுவரிடத்துக் காட்ட வேண்டும் நல்லெண்ணமும் காரணங்களாகும்.

தன் நகரடைந்த தமிழ்ப் புலவருக்குத் தன் படைக்கலப் பெருமையை அறிவிக்கவேண்டும் எனத் தொண்டைமான் எண்ணினுன். ஔவை யார் அறிந்தால் அதனை அஞ்சிக்கும் அறிவிப் பார் என்பது அவன் கருத்து. ஆதலின், தன் அரண்மனையைக் காட்டுகின்றவனைப்போல அம் மையை அழைத்துச் சென்று படைக்கலம் வைக் கப்பட்டிருக்கும் இடத்தை அடைந்து அதனை அம்மையாருக்குக் காட்டினுன். அங்கே பல

வகைப் படைகளும் பள பளவென ஒளிவிட்டு விளங்கின. அவை நெய் பூசப்பட்டிருந்தன. மயிற்பீலி அணியப்பட்டிருந்தன. மாலைகள்



சூட்டப்பட்டிருந்தன. இவற்றைக் கண்டவுடன் தொண்டைமானின் போர்த்திறத்தைப் புலவர் நன்ருக உணர்ந்தார். தொண்டைமானின் எண்

ணத்தைக் கண்டித்து நல்லறிவு விளக்கம் உண்டாக்க அதுவே தக்கநேரம் அல்லவா? ஆகவே, அவனை நோக்கி, "காஞ்சி மன்னனே! நின் படைக்கலக் கொட்டிலைக் காண்கின்றேன்; மாலையும் பீலியும் அணியப்பட்டு நெய் பூசப்பட்டு நாடோறும்தேய்க்கப்படுவதால்ஒளியுடன் இவை விளங்குகின்றன. ஆ! இவற்றின் ஒளியின் பெருமையை என்னென்பது!" என்று சொல்லிக் கொண்டே வந்தார். அக்காலத்தில், தொண்டைமான் கண்கள் மகிழ்வால் பூத்தன. அவன் முகம் அலர்ந்த செந்தாமரை போன்றிருந்தது. அவன் கண்கள், அவன் அதியமானின் படைக் கலக் கொட்டிலை அறிய ஆவல் கொண்டவன் என்பதைக் காண்பித்தன. கண்களே எவற்றையும் எடுத்துக்கூறும் ஆற்றலுடையன. ஔவையார் தம் பேச்சைத் தொடர்ந்து, "அதியமான் அஞ்சியின் படைக்கலக்கொட்டிலில் படைகளே இல்லை..." என்றனர். அப்படியாயின், வெற்றி முற்றும் தம்மைச் சாரும் என்ற எண்ணம் தொண்டைமானுக்கு எழுகின்றது. இந்த நற் செய்தியைத் தனக்கு அறிவித்த அம்மைக்குத் தன் செய்ந்நன்றியை அறிவிக்க முற்படும் காலத் தில், தொடர்ந்து ஔவையார், "அஞ்சியின் ஆயுதங்கள் யாவும் கொல்லனிடத் திருக்கின்றன. அவை போரில் பகைஞரைக் குத்தியும் கொன்

றும் தன் நுனியும் கங்கும் முறிந்து கிடக்கின் றன", என்றுரைத்து முடித்தார்.

தொண்டைமானுக்குப் பெரிய ஐயம் உண் டாயிற்று. அவன் அஞ்சியும் போருக்கு முற்படு கின்றான் என்று முடிவிற்கு வந்தான். அன்றி யும், போரிடைப் பட்டுத் தேர்ந்த சிறப்பு அஞ்சி யின் படைக்கலங்களுக்கேஉண்டெனின், அவன் நாட்டு வீரர்களைப்பற்றிக் கூறுவானேன்? அவர் களுக்குத் தலைவனாகிய அஞ்சி போரில் தலைமை தாங்கி நடத்தும் பெருமையும் கூறாமலே அறியக் கிடக்கின்றது. 'நாம் வெல்வோம்' என்ற அறி யாமையால் எழுந்த எண்ணம் அழிந்தது. மேலும் அம்மையுடன் உரையாடலால் அமைந்த மனமுடையவனானான்.

"இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது"

எனும் பொய்யாமொழிக்கு இலக்கியமாகத் தமிழ் மூதாட்டியார் விளங்கினார்.

## 3. முடிவுரை

திறமை நிறைந்த அதியமானுக்கும், காரிக் கும் போர் மூண்டது. காரி என்பவன் திரு முடிக்காரி எனப்படுவன். இவன் திருக்கோவ லூரை ஆண்ட சிற்றரசன். இருவருக்கும் போர் நடந்த களத்தை ஔவையார் அடைந்தார்.

திருமுடிக்காரிக்கும், அவன் படை வீரருக்கும் அஞ்சியின் போர் செய்யும் திறனை ஔவையார் எடுத்துக் கூறினார். அவர்கள் அந்நல்லறிவைக் கேட்டு ஒருவரோடொருவர் அமைதிசெய்து கொண்டிருக்கலாம். அவ்வாறு செய்யாமல், மேலும் போர் செய்தனர். தோல்வியுற்று அழிந்தனர். வெற்றி அஞ்சிக்கு ஆயிற்று.

திருமுடிக்காரி இழந்த தன் கோவலூரை அடைவதற்கு உதவிசெய்யும்படி சேரமன்னனை வேண்டிக்கொண்டனன். சேர நாட்டை அக் காலத்தில் ஆண்டவன் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை என்பவன். இச் சேரல், கொல்லி மலையை ஆண்ட வல்வில் ஓரிஎன்பவனை வெல்ல வேண்டும் என்று காலம் கருதி இருந்தான். ஆகவே, முதற்கண் ஓரியை வென்று, பின் அஞ்சியை அடக்கலாம் என்று சேரன் கூறினன். சிதைந்த தன் படையுடன், திருமுடிக்காரி சேரனைச் சேர்ந்தான். இருவர் படைகளும் ஓரியை எதிர்த்தன. அஞ்சியைத் தனக்குத் துணையாக ஓரி அழைத்தான். ஓரியுடன் கூடிப் பகைவரைத் தொலைத்துவிட்டால், தனக்கிடையூறு இல்லாதொழியும் என்றெண்ணி அஞ்சியும் ஓரியுடன் கலந்தான்.

போர் நடந்தது; ஓரி தோற்றனன்; அஞ்சி, தகடூரினுள் சென்றிருந்தான். பகைவர் படை

முற்றுகை இட்டது. இனியும் உள்ளிருத்தல் தக்கதன்று என்று எண்ணி வெளிவந்துபோரிட்டான். பகைவர் படைக்கலங்கள் மார்பு முதலிய இடங்களில்பாய்ந்து பலபுண்களை உண்டாக்கின. உடனிருந்த ஔவையார், மேலும் போரிட்டுப் புகழ் அடையுமாறு வலியுறுத்தினர்! அந்தோ! சேரல் விடுத்த வேல் அஞ்சியின் மார்பில்பாய்ந்தது, உயிர் ஓய்ந்தது ; உடல் சாய்ந்தது.

இக் காட்சியைக் கண்டார் மூதாட்டியார். மனம் கசிந்தார் ; உள்ளம் உடைந்தார் ; வாய் விட்டலறினர்.

"அஞ்சி மாய்ந்தனனே! கிடைத்தவற்றைப் பிறர்க்களிப்பான்; அவருண்பதைக் கண்டு தான் மகிழ்வான். தனித்தென்றும் உண்ணமாட்டான். பிறர்க்கெனவே வாழ்பவன் இவன். மணம் நிறைந்து நிற்கும் தன் கையால் வறியார்க்குப் பொருளை வாரி வழங்குவான். இவை எல்லாம் கழிந்தனவே ! இன்று இவன் மார்பில் வேல் தைத்தது; ஆதலின் இறந்தனன். இனிப் பாணருக்கு ஒன்று கொடுப்போர் யார் ? இவன் சுற்றத்தாரது துன்பத்தைப்போக்குவோர் எவர்? நுண்ணிய ஆராய்ச்சியாளருடைய அறிவினை மதித்து அவருக்கு ஆவன செய்வோரும் உளரோ? காட்டில் மலர்ந்தமலர் சூடப்படாது ஒழியும். அவ்வாறே, உயிர்களுக்குத் தருதல்

என்ற கொடைக்குண முடையோர் இல்லாது இனி உலகம் வருந்தும்'' என்று புலம்பினர்.

அதியமானின் மகன், பொகுட்டெழினி, அஞ்சிக்குப்பின் முடி சூடினன். அவன், வென்றிச் சிறப்பு, இன்பச் சிறப்பு முதலியவற்றைத் தமிழ்ப்பாட்டியார் புகழ்ந்து பாடினர். அரசியல் அறிவை அவனுக்கு நன்ருக விளக்கி அறிவுறுத்தினர். இவ்வாறு சில ஆண்டுகள் அவனுடன் தங்கி இருந்தார்.

தமிழ்நாடு முழுவதையும் காணும் அவா ஒளவையாருக்கு உண்டாயிற்று. நாஞ்சில் மலைக்குத் தலைவன் நாஞ்சில் வள்ளுவன் என்பவன். அவனைப் புகழ்ந்து மிக்க பரிசில் பெற்ருர். மாரி வெண்கோ என்ற சேர அரசன், கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி என்ற பாண்டிய மன்னன், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற சோழன் ஆகிய மூவரும் ஒருங்கிருந்தனர். இவர்களைக்கண்ட மூதாட்டியார், என்றும் இவ்வாறு தமிழரசர்கள் ஒற்றுமையுடன் வாழ வேண்டும்என்று வாழ்த்தினர். பின் மதுரையை அடைந்தார். சங்கப் புலவரைக் கண்டவராகி மகிழ்ந்தார். பாண்டியமன்னனல் நன்கு மதிக்கப்பட்டார். 'நின்ஞடு, நல்ல தமிழ் உடைத்து'' என்ருர்.

இங்ஙனம், தமிழகம் புகழ வீற்றிருந்த ஔவையார், நீண்ட ஆயுளுடன் வாழ்ந்தார். தமிழ்மொழி, இவர் போன்ற பெரும் புலவர்களால் சிறந்தது; தமிழ்நாடு மேலோங்கி வாழ்ந்தது.

---

## ந. அரசன் உயிர்காத்த புலவன்

பாண்டி நாட்டுக்குத் தலைநகராக விளங்குவது மதுரை. இம்மதுரை வழி ஓடும் பெரிய ஆறு வைகையாகும். இவ்வாற்றின் நீர்ப்பெருக்கால் பல ஊர்கள் வளம்பெற்றுச் செழித்திருந்தன. அவற்றுள் மோசிகுடி என்பது ஒன்று.

நல்லோர் வாழும் ஊரே சிறந்த புகழைப் பெறுவதாகும். "எவ்வழி நல்லோர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்றார் தமிழ் மூதாட்டியார். அறிவற்றோர் வாழ்கின்ற இடம் பாழிடமே அன்றி ஊரிடமாகாது. மோசிகுடி, புலவர் பலர் பிறந்து சிறத்தற்கு இடமாக இருந்தமையால் புகழ் நிறைந்து விளங்கிற்று. மோசி சாத்தனார், மோசி கண்ணத்தனார், மோசி கீரனார் முதலிய பல புலவர் அவ்வூரில்தோன்றி வளர்ந்தார்கள். முடமோசியார் என்பவரும் அங்குப் பிறந்தவரே.

மோசியார், நற்றமிழறிவு பெற்றவர். இவர் பிறக்கும்போதே உடல் முடம்பட்டிருந்தார். ஆகவே,அவர் முடமோசியார் என்று அழைக்கப்பட்டார்.

பாண்டி நாட்டில் பிறந்த புலவர், பிறநாட்டு மன்னரிடமும் சென்று தம் அறிவுத்திறமையை அறிவிக்க விரும்பினுர். சோழ நாட்டை அடைந்தார். அப்பொழுது சோழ நாட்டை ஆண்டுகொண்டிருந்தவன், சோழன் முடித்தலைக் கோப் பெருநற் கிள்ளி என்பவனுவான். அவன் பாண்டி நாட்டுப் புலவரை மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டனன். புலவரின் புலமையை அறிந்தான்; தக்க பரிசுகள் தந்தான்.

சேர நாட்டிற்கும் செல்ல வேண்டும் என்பது புலவரின் எண்ணம். ஆதலின், சோழ மன்னனிடத்தும் பிரியா விடைபெற்றுச் சேர நாடு அடைந்தார்.

சேரமான் அந்துவஞ் சேர லிரும்பொறை சேர நாட்டை ஆண்டுகொண்டிருந்தனன். சேரமான்மோசியார் பெருமையை முன்னரே நன்குக அறிந்திருந்தான். ஆதலின் மிக்க அன்புடன் புலவரை வரவேற்றுன். தன் மனையில் கிடைத்த பொன்னையும், மணியையும் புலவருக்குப் பரிசிலாக வாரி வழங்கினன்.

அரசன் அன்புள்ளம் புலவரைப் பிணித்தது. புலவரின் அருந்தமிழ்ப் புலமையில் மன்னன் உள்ளமும் அழுந்தியது. புலவரைத் தன் நாட்டில் பன்னாள் தங்குமாறு மன்னன் வேண்டினன். தமிழ்மொழியைத் "தேருந்தோறும் இனிதாம் தமிழ்" என்றார் பொய்யா மொழிப் புலவர். ஆராயுந்தோறும் இனிமையைப் பெருக்கும் இயல்பு தமிழ்மொழிக்கு உண்டு. தீந்தமிழ் மொழியைப் புலவருடனிருந்து ஆய்ந்து இன்புற அரசன் எண்ணங் கொண்டான். அரசனின் சிறந்த எண்ணத்தை அறிந்த புலவர், வேறு ஒன்றுஞ் சொல்லாது சேர நாட்டில் தங்கினார்.

சேரல், புலவர்பால் தமிழ்பயிலத் தொடங்கினான். படித்தற்குத் தனியிடம் உரியது. கருவூர் சேரநாட்டின் தலைநகரம். இதற்குக் கிழக்கே சோழநாடு இருக்கின்றது. இருநாடுகளின் எல்லைக்கருகில் சேரநாட்டில், சேரமன்னனின் வேண்மாடம் என்ற பெரியதோர் இல்லம் உண்டு. அக்கட்டிடமே தனித்துப் படித்து இனித்து மகிழ்தற்கேற்ற இடம் என்று கொண்டனர். அங்குச் சென்று தங்கி இருந்தமிழை அருந்தினர்.

ஒரு நாள், அரசரும் புலவரும் வேண்மாடத் தமர்ந்து இருக்கின்றனர். அவர்கள் ஒரு

காட்சியைக் காண்கின்றனர். யானை ஒன்று, கருவூரை நோக்கி விரைந்தோடி வருகின்றது. யானையின்மீது ஒருவன் அமர்ந்து இருக்கின்ருன்; மறவர் பலர், ஈட்டியுடனும் வாளுடனும் உடன் ஓடி வருகின்றனர்.



இதனைக்காணும் சோழனுக்கு ஐயம் உண்டாகின்றது. "யானையின்மேலிருப்போன் அரசனைப்

போல் காணப்படுகின்றான். என் நாட்டின் எல்லைக்குக் கிழக்கே இருக்கும் நாடு சோழநாடு அத்திசையிலிருந்தே யானையும், வீரரும் ஓடி வருகின்றனர்; ஆதலின் யானைமீ தமர்ந்திருப் போன் சோழமன்னனாகவே இருத்தல் வேண் டும். எவனாயினும், உடனே சேனைத்தலைவனை அழைத்து, வருவோனை எதிர்த்துப் போர் செய் யும் வண்ணம் சொல்லுவோம்,' என்று எண்ணி னான். ஆனால், அடுத்து மற்றோர் எண்ணம் தோன்றுகின்றது. "தமிழ் நாடு முழுவதும், எங்கும் சென்று புகழ்பெற்றவர் நம் அருகி லிருக்கும் புலவர். இவரை வினாவின், 'இவன் இன்னான்' என்று நமக்கு அறிவிப்பார். அவரைக் கேட்டறிந்தபின் நாம் எண்ணியதைச் செய் வோம்," என்று நினைத்தான். வருகின்ற அக் கூட்டத்திலேயே தம் நாட்டம் முழுவதையும் சேர்த்து நின்ற புலவரைநோக்கி, "அருந்தமிழ்ப் புலவீர்! யானையின்மீது அமர்ந்து மறவர்சூழ நம் நாட்டின்மேல் வரும் இவனை அறிவீரோ? அறிந்திருப்பின் கூறுமாறு வேண்டுகின்றேன்," என்று பணிவுடன் வினவினான்.

அரசன் முகத்தைக்கண்டு அவன் அகத்தில் தோன்றும் எண்ணங்களைப் புலவர் அறிந்தார். முகத்தைவிட அறிவு நிறைந்த தொன்றும் உண்டோ? இல்லை. ஏன்? தன்னை உடையான்

மகிழ்ந்தாலும், வெகுண்டாலும் அவற்றை அது வெளிப்படையாகக் காட்டும். "முகத்தின் முதுக் குறைந்த துண்டோ உவப்பினும், காயினும் தான்முந் துறும்" என்பது நம் பெருமொழி.

சேரன் முகத்தில் சினக் கனற் பொறி பறத் தலைப் புலவர் கண்டார். யானையின்மீது அமர்ந்து வருவோனையும் இன்னான் என்று புலவர் அறிந்திருந்தார். சேரன் எண்ணம் தவறானது. வருகின்றவன் குற்றம் நிறைந்த மனத்தவனல்லன் என்பதைப் புலவர் உணர்ந்தார். ஆதலால், 'எவ்வகை இன்னலும் அன்னவனுக்கு வாராதிருக்கச் செய்தல்வேண்டும்,' என்ற கருத்தினராயினர். பின்வருமாறு கூறுகின்றார் :

"சேரர் வேந்தே! நீ நீடூழி வாழ்க! 'களிறு ஊர்ந்துவரும் இவன் யார்?' என்று வினவுகின்றாய். இவனை நான் அறிவேன். பகைவர் அம்புகளைத் தாங்கினமையால் வடுக்களுடன் இவன்மார்பு விளங்குகின்றது. இவ் வீரன் சோழ நாட்டு மன்னன். மயில்கள் உதிர்த்த பீலிகளைத் தனியே எடுத்துச் சேமிக்காமல், இவன் நாட்டு உழவர் நெல்லரிகளுடன் அவற்றையும் திரட்டிக் கட்டுவர். அவ்வாறு வளம் சிறந்தது, இவன் நாடு. இம்மன்னன், இன்று நின்னோடு போர் செய்ய வரவில்லை. அவ்வாறு நீ எண்ணியிருந்தால், அவ்வெண்ணத்தை இப்போதே

மாற்றிக்கொள். இச் சொற்களை, யானே படைத்துக் கூறவில்லை. வெகுளி என்ற தீக்குணத்தை அறவே விடுத்து, நடுநிலைமையிலிருந்து, ஊன்றிக் கவனி. அவ்வாறு கவனிப்பாயாயின் நினக்கே உண்மை வெளியாகும்.

"இவன் ஏறிவரும் யானை, ஊர்ந்துவரும் இவன் ஏவலுக்கு அடங்குவதாகக் காணப்படவில்லை; மதம்பட்டுக் காண்கிறது. இவன் நாட்டில், இவன் அவையிலும் நான் சில நாட்கள் தங்கி இருந்திருக்கின்றேன். எல்லைப்புறத்திலுள்ள ஊர்களில் அடிக்கடி கலகம் நிகழ்வது இயல்பு. அவ்வாறு உண்டாகாதவண்ணம் நீக்குதற்காக எல்லைப்புறத்தில் உள்ள ஊர்களை அடிக்கடி சென்று காண்பான். அவ்வாறே இவன் இன்றும் வந்திருப்பான். வருகின்றபோது இவன் யானை மதம்பட்டிருக்கும். அதனை அடக்கி, அதன்மேல் இருக்கும் அரசனைக் காப்பாற்றுவதற்கே மறவர் பலர் ஓடிவருகின்றனர். நீ விரும்பினால் இவனைச் சிறைச்சாலைக் க[illegible]ப்பலாம்; கொல்லவும் முற்படலாம். நல்ல மனமுடையவன் இவன்; ஆதலின் இவன் வாழ, இவனுடன் நட்புரிமை பூண்டு இருப்பாயானால் அது நினக்கு நல்லதையே தரும். ஆதலின், எவ்வகைத் தொல்லையுமின்றி இச் சோழ மன்னன் செல்வானாக."

சூரியன் முன் இருள் ஓடி ஒழிவதுபோல, புலவர் சொற்களின் முன் மன்னன் வெகுளி ஒழிந்தது. புலவர் சொற்களின் சிறப்பால் சோழமன்னனது யானையின் மதமும் அடங்கியது. சோழன், எவ்வகை இன்னலுமின்றித் தன் நாட்டை அடைந்தான்.

மாணவர்களே! புலவர்களிடத்தில் அரசர்கள் வைத்திருந்த நன்மதிப்பைக் காணுங்கள். தன்னாட்டுக்கு அடுத்த சோழ நாட்டைத் தான் கைக்கொள்ளச் சேரன் எண்ணியிருந்தால், சோழனைக்கொன்றிருக்கலாம். அவ்வாறு அவன் எண்ணவில்லை. புலவரால் அரசன் உயிர் பெற்றான்; சேரனும், அறிஞர் சொல்வழி நின்று பெருமையுற்றான்.

"நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே"

---

## ௧௰. போர்க்களத்தில் பரிசில்

நல்வளம் பல சிறந்து விளங்கியது கழாத்தலை எனும் ஊர். அறிஞர் பலர் அதன் கண் வாழ்ந்தனர். அவருள் ஒருவர் வளமுடைய செய்யுள் செய்யும் திறமை மிகுந்திருந்தார். அவரை யாவரும் கழாத்தலை என்ற ஊரிற் பிறந்தவர் என்றறிந்தார்கள்; ஆதலின், கழாத்தலையார் என்று அழைத்தார்கள்.

இவருள்ளம் மிகத் தூய்மை வாய்ந்தது. ஒரு முறை, இருங்கோவேள் என்பவனைச் சார்ந்து பரிசில் விரும்பி நின்றார். அவன், இவர் பெருமையை அறியாது அவமதித்தான். அக்காலத்தில் புலவருள்ளம் சிறிது வருந்தியது. அதன் பயனாக அச் சிற்றரசனுடைய அரையம் எனும் ஆட்சியிடம் முழுவதும் அழிந்தொழிந்தது.

இவர், நெடுஞ்சேரலாதன் என்பானைக் காண எண்ணினார். சேர நாட்டினை அடைந்தவுடன் இங்கு அமைதி குலைந்திருத்தலைக் கண்டார். காரணம் யாதென அறியும் அவாவினால் அங்கு எதிர்ப்பட்டாரைக் கேட்டார். அப்பொழுது சேரமன்னனுக்கும் சோழனுக்கும் போர் நடக்கின்றதென்று அறிந்தார். பரிசில் பெறவேண்டும் என்ற அந்த ஒரே எண்ணத்துடன் புலவர் வந்தவர் அல்லர். அரசனைக் கண்டு அவன் உடல் நலத்தையும் பிற நலங்களையும் அறியும் அன்பு மிகுதியாக அவருக்கு உண்டு. ஆதலினாலே, "பரிசில் தரும் நிலைமையில் அரசன் இல்லை; மீண்டேகலாம்" என்று எண்ணினாரல்லர். ஆகவே, போர்க்களம் என்றும் நினையாது, அரசனைத் தேடிச்சென்றார்.

புலவர் போர்க்களத்தை அடைந்தார். அவர் சென்ற காலம் போர்முடியும் காலம். இரு

பக்கத்துப் போர் வீரர்களும் இறந்து கிடக்கின்றனர். சேரமன்னனும் சோழமன்னனும் புண்பட்டுப் போர்க்களத்தில் வீழ்ந்தனர். சேரல் உடல் முழுவதும் அம்புகள் தைத்திருந்தன. அவன் மார்பிலும் நெஞ்சிலும், வேல்பாய்ந்த வழிக் குருதி அருவிநீரைப்போல் ஓடிக் கொண்டிருந்தது; ஆனால் அவன் உயிர் நீங்கவில்லை.

இந்த நிலையில், புலவர் கழாத்தலையார் சேரனைக் காண்கின்றார்; மன்னனை மனமியைந்த சொற்களால் வாழ்த்துகின்றார். மன்னன் உயிர் தளர்ந்த நிலையிலும் உணர்வு பெறுகின்றான். புலவரை உற்று நோக்குகின்றான். பின்னர்ப் போர்க்களத்தைக் காண்கின்றான். பெரிய மலையை ஒத்துக் களிறுகள் வெட்டுண்டு கிடக்கின்றன, அம்மலையில், உயிருடன் கூடிய யானை ஒன்றும் இல்லை. இருந்திருப்பின், அதனைப் புலவருக்குப் பரிசிலாக அளித்திருப்பான் போலும்! யானைப் பரிசில் பயனின்றிப்போகவே, தேர்ப் படையில் கருத்தை இருத்துகின்றான். போர்க்களத்தில், பாகர்கள் குதிரைகளை ஓட்டிய வழியெல்லாம் தேர்கள் ஓடின. அதனாலே மேடு பள்ளங்களில் ஓடிய அவை ஒடிந்துகிடக்கின்றன. அவற்றுள் ஒன்றேனும் நன்றாக இல்லை. ஆதலின், தேர்ப் பரிசிலையும் தரமுடியவில்லை. உயிர்

போகும் நிலையில் அடிபட்டு வீழ்ந்து கிடக்கும் மன்னனுக்கு வருத்தம் மிகுகின்றது. குதிரைகளேயேனும் தந்தனுப்புவோம் என்று பின்னர் எண்ணுகின்றான். ஆகவே, குதிரைப்படை அணிவகுத்து நின்ற பக்கத்தைப் பார்க்கிறான். அந்தோ! அவையும் யானைத்திரளின் கதியையே அடைந்தன. காற்றினால் அசையாமல் கடல் நடுவில் கப்பல்கள் நிற்கின்றன; அவ்வாறே குருதிக் கடலில் அசைவின்றி இறந்த குதிரைகள் கிடக்கின்றன. மன்னனின் துன்பம் மிக்கு ஓங்குகின்றது. “என்னே என் தன்மை! என் நலம் அறிந்து என்னை வாழ்த்துவதற்காகப் போர்க்களத்திற்கும் இப்புலவர் வந்தனரே! தம் உயிரை மதியாது என்னை வாழ்த்துதல் என்ற முழுநோக்கத்துடன் இங்கு வந்த புலவரை வெறுங் கையராக அனுப்பமாட்டேன். என்ன செய்வேன்!” என்று படைகளால் தன் உடற்குண்டாகிய துன்பத்தையும் சிறிதும் எண்ணாதவனாய்க் கவலை மிகுந்தான் அரசன்.

உயர்ந்த எண்ணங்கள் முற்றுப் பெறாமல் போதலில்லை. அஞ்ஞான்று, தன் கழுத்திலிருந்த அழகிய முத்துமாலையைப்பற்றிய நினைவு அரசனுக் குண்டாகியது. அம் மாலை பாம்பின் உடலைப்போல் பளபளவென்று ஒளிவிட்டு விளங்கியது. அம் மாலையைக் கழற்றிப் புலவர்

கையில் தந்து மன்னன் மன அமைதியைக் கொண்டான்.



மாணவர்களே! இக்கதை எவ்வளவு உருக்கம் தரத்தக்கதாய் இருக்கின்றது. புலவரை வெறுங்கையுடன் அனுப்பலாகாது என்று சில நாழிகைக்குள் உயிர் நீங்கும் மன்னன் எண்ணுகின்ருன். ஆ! அவனுடைய புலவரைப் போற்றும் பெருமை எவ்வளவினது!

இக்கதையைப் படிக்கும் உங்களுக்கு மற்ருெரு கதை நினைவிற்கு வரலாம். பாரத சண்டை நடந்தது. கர்ணன் என்பவன் போர் செய்து அருச்சுனன் அம்புகளால் அடியுண்டு வீழ்ந்தான். அவனுயிர் போகவில்லை. அவன் செய்த

புண்ணியச் செயல்கள் அவனைக் காப்பாற்றிக் கொண்டிருந்தன. அப்பொழுது கண்ணன் வேற்று வடிவத்தில் சென்று, அவனிடமிருந்து ஒரு வரம் பெற்றான். அதன் பயனாகக் கர்ணன் இறந்தான்.

இவ்விரு கதைகளையும் ஒரு சேர எண்ணிப் பாருங்கள், ஆராய்ச்சி அறிவு மாணவர்களுக்கு வேண்டியதொன்றன்றோ!

---

## ரு. ஊன்பொதி பசுங்குடையார்

தமிழறிந்த பெரியார் ஊன்பொதி பசுங் குடையார் என்பவர். இவர் மிகுந்த வறுமை யுற்றிருந்தார். எக்காலத்திலும் தம் உறவினருட னேயே இருப்பார். பரிசிலாகக் கிடைத்த பொரு ளைத் தமக்கென்று கொள்ளமாட்டார். உற்றாருக் கும் பகிர்ந்து கொடுத்து அவர்கள் உண்டு மகிழ் வதைக் கண்டு தாமும் மனம் மகிழ்வார்.

இவரிடத்தில் உயர்ந்த குணங்களெல்லாம் குடிபுகுந்திருந்தன. பிறர் குற்றத்தை எடுத்துப் பேசுகின்றவர்களைக் காண்பதற்கும் கூசுவார். அத்தகையோர் சொற்கள் அறவே தள்ளத்தகுந் தன என்று அவற்றை ஏற்றுக்கொள்ளமாட்டார்.

தீக்குணம் ஒருவனிடம் இருக்கக் கண்டால், அக்குணத்தை எவ்வாறேனும் ஒழித்து வாழும் வண்ணம் அக் குணமுடையவனைத் தூண்டுவார். பிழை செய்தோர் தாம் செய்தது பிழை என்று உணர்ந்தால், அவர்களுக்கு ஆகும் நலன்களைச் செய்வார்.

இவர் பரிசில் பெறுதற்காக மன்னர்களிடம் செல்வார். அப்பொழுதெல்லாம் தனித்துச் செல்வது இவர் வழக்கம் இல்லை; உறவினருடனே தான் செல்வார். இளஞ்சேட் சென்னி என்ற சோழ மன்னனை அடைந்தார். அவன் செருப்பாழி என்ற ஊரை வென்று தன் கீழ் அடக்கியவன்; ஆதலினால், செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி என்று அழைக்கப்பட்டான்.

சென்னி, சிறந்த போர்வீரன். போர்க்களத்தை ஏர்க்களமாகக் கொண்டவன். உழவர் ஏர்க்களத்தில் நெற் கதிரை அரிவர்; பின்னர் அவற்றைப் போராகக் குவிப்பர்; எருதினைப் பூட்டி அக்கதிரின்மேல் ஓட்டி நெல் வேறு வைக்கோல் வேறு எனப் பிரிப்பர். அவ்வாறே சென்னி போர்க்களத்தில், பகை வீரர் குரல் வளையை (கழுத்தை) அரிவன்; பிணப்போரைக் குவிப்பான்; யானையை எருதென்று கொண்டு வாளாகிய மடலை வீசுவான். இங்ஙனம் போரில் சிறந்த வீரன் இளஞ்சேட் சென்னி.

'பழுத்த மரம் எங்கே இருக்கின்றது என் பதை அறிந்து வௌவால்கள் அங்கே செல் லும். அவ்வாறே கேட்டார்க்கு இல்லை என்னுது தரும் வள்ளல்கள் இருக்கும் இடத்தைத் தேடிப் புலவர்களும் செல்வர். இளஞ்சேட் சென்னி பழுமரத்தை ஒத்தவன் என்பதைப் புலவர் அறிந்தார். ஆதலின், அவன்பால் தன் சுற்றத்தினருடன் சென்றார்.

"தெற்குத் திசையிலுள்ள குறுநில மன்னர், வடக்குத் திக்கில் வாழ்ந்த வடுகர், இவர்தமை வென்ற வேந்தனே !" என்று அரசனின் வெற்றி யைப் புகழ்ந்து சுற்றத்தாருடன் பாடி நின்றார் பசுங்குடையார். புலவர் தம் புலமையைச் செவ்வையாக மன்னன் அறிந்தான்.

அரசன், தன் நிதிக்கொட்டிலிலிருந்து சிறந்த அணிகளையும், பெருஞ் செல்வத்தையும் கொணர்ந்து புலவருக்கும் அவருடனிருந்த பிற ருக்கும் கொடுத்தான். அணிகளைக் கண்ட அவரு டைய சுற்றத்தார் அவற்றை அணியும் முறை அறியாது, விரலில் அணிய வேண்டியவற்றைச் செவியில் அணிதற்கு முற்பட்டனர். இடுப்பிற் குரிய அணிகளைக் கழுத்திலும், கழுத்தில் அணிய வேண்டியவைகளை இடுப்பிலும் அணி செய்கின்றனர். ஊன்பொதி பசுங்குடையார் இத னைக் கண்டதும் மகிழ்ந்து சிரித்தார். அவையி

லிருந்த அரசனும் பிறரும் விலா எலும்பு முறி யும்படி சிரித்தனர்.

இக் காட்சியைக் கண்ட புலவருக்கு மற் றொரு கதைப் பகுதி நினைவிற்கு வருகின்றது. அதனைப் பின்வருமாறு கூறுகின்றார்: "வஞ்சக மாக இராவணன், இராமனைச் சீதையினிட மிருந்து பிரித்தான். சீதையைச் சிறை செய்து கொண்டு சென்றான். அப்போது சீதை தான் சிறைப்பட்டதை ஒருவாறு இராமனுக்கு அறி விக்க விரும்பினள். ஆதலின், தான் அணிந் திருந்த அணிகளைக் கழற்றி ஒன்றாய்ச் சேர்த்துக் கீழே எறிந்தாள். இவ்வணிகளைச் சுக்ரீவனைச் சேர்ந்த குரங்குகள் கண்டன. ஒவ்வொரு குரங் கும் சில அணிகளை எடுத்துக்கொண்டு அவற்றை அணியும் இடத்தில் அணியாது தாம் விரும்பிய வெவ்வேறான இடங்களில் அணிந்து மகிழ்ந் தன. அவ்வாறே என் உறவினரும் இன்று காணப்படுகின்றார்கள்."

புலவரின் வறுமை யொழிந்தது. அவர் உறவினர் இலம்பாடும் நீங்கிற்று. இளஞ்சேட் சென்னியை நெடிது வாழ்த்தி யாவரும் மகிழ்ந் தனர்.

---

## ௬௨. பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனும்

பாண்டிய நாடு குமரிமுனைவரை பரவியிருந்தது. தெற்குக் கோடியில் பிசிர் என்ற ஊர் உண்டு. அவ்வூரில் ஆந்தையார் என்ற புலவர் இருந்தார். இவரைப் பிசிராந்தையார் என்று அழைத்தல் வழக்கம். இளமைக் காலத்திலேயே தொல்காப்பியம் போன்ற நூல்களைச் சிறக்கப்படித்து அறிஞராய் விளங்கினர். வெற்றுப் படிப்பளவில் இவர் அறிவு நின்றதில்லை. ஒழுக்கம் என்ற விழுமிய குணம் கல்வியினும் சிறந்தது. 'ஓதலிற் சிறந்தன்று' ஒழுக்க முடைமை,' என்பர் கற்ருேர். ஆதலினுலே, விழுப்பம் தரும் ஒழுக்கத்துடன் விளங்கினமையே இவருக்குத் தனிச் சிறப்பாகும்.

இல்லற நெறியில் வாழ விரும்பினர் ஆந்தையார். ஆகவே, கற்புக்கடம் பூண்ட பொற்புடைப் பாவை ஒருத்தியை மணந்தார். அந்த அம்மையார் பெண்ணெனப் படுவாள் எவ்வாறிருக்க வேண்டுமென்பதைப் பெற்ருரும் உற்ருரும் கற்பிக்க அறிந்த கற்புச் சிறப்புடையவள். "தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்," என்பது நம் அருமொழி. கற்பினின்றும் வழு

வாது தன்னைப் பெண்ணென்பாள் காத்துக் கொள்ளல் வேண்டும். பின்னர்த் தன்னைக் கொண்ட கொழுநனை உண்டி முதலியவற்றால் பேணல் வேண்டும். அடுத்து, இருவர் மாட்டும் அமைந்த புகழை வளர்த்துக்கொள்ளல் வேண்டும். இங்ஙனம் நற்குண நற்செய்கைகளை விடாப் பிடியாகக்கொண்டு அவ்வம்மையார் சிறந்தனள். கற்றுச் சிறந்த பிசிராந்தையார் கற்புச் சிறந்த இல்லத் துணையுடன் இன்புற இல்லறத்தை மேற்கொண்டார். இருவரும் ஒரு பசுவின் தலைக் கண்ணே காணப்படும் இரண்டுகொம்புகளைப் போல, வேறுபாடில்லாத உள்ளத்துடனிருந் தனர்.

செல்வங்கள் பல வகைப்படும். அவற்றுள் ஒன்று மக்கட் செல்வம். அறிவறிந்த மக்களி னும் சிறந்த செல்வம் உலகத்தில்லை என்னலாம். அதனாலேதான் திருவள்ளுவர், 'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த, மக்கட்பே றல்ல பிற,' என்றார். அழியாத கல்விச் செல்வத்தைப் பெற்ற புலவர் சிறந்த புதல்வர்ப் பேற்றினையும் அடைந்து விளங்கினார்.

தாம் மனைவி குழந்தைகள் எனப் பல்கிய குடிக்கு ஏவலாளர் சிலர் வேண்டியிருந்தனர். ஏவல் செய்வோரும் புலவர் குறிப்பறிந்து வேண் டியவற்றைக் காலம் இடம் அறிந்து செய்தனர்.

ஆதலின், எவ்வழியானும் குறைவின்றிப் புலவர் வாழ்ந்தார்.

அவர் வாழ்ந்த நாளில் பாண்டிய நாட்டை அறிவுடை நம்பி என்ற அரசன் ஆண்டு வந்தனன். ஆண்மக்களுட் சிறந்தவரை நம்பி என்று சொல்வர். இவன் வெற்று நம்பியாக இருக்கவில்லை. அறிவையே தன் செல்வமாகப் பெற்று வாழ்ந்தான். ஆதலினால், இவன் அறிவுடை நம்பி ஆயினன். குடிமக்கள் அறிவுடை நம்பியை நம்பி வாழ்ந்தனர்.

மக்களுக்குக் குற்றம் செய்தலே இயல்பு. பாண்டி மன்னனின் அரசியல் ஏவலாளர் மிகக் கொடுமையாக வரி வசூலித்தனர். அச் செயல், மக்களுக்கு மிகுந்த துன்பத்தை உண்டாக்கியது. புலவருக்கு இச்செயல் அளவுகடந்த மன வலியை உண்டாக்கிற்று. அரசனுக்கு இதனை அறிவித்துக் கண்டித்தற்காக அரசன் அவைக் களம் சேர்ந்தார். மன்னனும் இன்முகத்துடன் வரவேற்று இருக்கை தந்தான்.

அமர்ந்த புலவர் அரசன்கீழ் வாழ்வோர் செய்யுமவற்றை விளக்கமாக எடுத்துக் கூறுகின்றார். சொல்லவந்த ஒன்றை அவ்வாறே கூறுவதினும் உவமையால் விளக்குவது உயர்ந்தது. ஆதலின், கதை சொல்லுகின்றவரைப்போல் தொடங்கினார். "ஒரு யானை இருந்தது. அதற்கு

உணவு இடவேண்டுமல்லவா? அதற்காக அந்த யானையைக் காய்த்து விளங்கும் நெற்கதிரோடு கூடிய நூறு செய் அளவுள்ள நிலத்தில், அதனை வளர்த்தோர் விடுத்தனர். அவ்வளவு பெரிய நிலமும் பாழாயிற்று. ஆனால், யானையின் பசி நீங்கவில்லை. ஏன்? அதன் வாயுள் புகுந்த வற்றினும் காலால் மிதிபட்டு அழிந்தவை மிக்கவை. யானையை வளர்த்தோருக்குச் சிறிது அறிவு தோன்றிற்று. மிகச் சிறிய அளவாகிய 'மா' எனும் அளவு நிலத்திலுள்ள நெற்கதிரை அறுவடை செய்தனர். நெல்லைத் தனியாகப் பிரித்தனர். அரிசியாக்கி உணவு அமைத்துக் கவளமாக உருட்டி யானைக்குத் தந்தனர். யானை கண்டு மகிழ்ந்தது. 'இனி வேண்டாம்,' என ஒரு பகுதியை ஒதுக்கியது,'' இவ்வளவும் கூறி வந்தவற்றில் அரசன் மனம் நன்றாக அழுந்தி யிருந்தது.

அரசனே! யானை 'அறிவற்ற நெறியில் தன் பசியை நீக்கிக்கொள்ள முயன்றது. தானும் பசியைப் போக்கிக்கொள்ளவில்லை. நிலப் பகுதி யும் வீணே கெட்டது. அவ்வாறே நெறியறிந்து இறையைக் கொள்ளுவாயாயின் நீயும் நீடூழி வாழலாம். குடிமக்களும் நின்னை வாழ்த்துவர். அவ்வாறின்றி, நின் அரசியலை நின் கீழ் வாழும் கொடியோர் கையில் விடுத்தனை. அவர்கள்

யானையைப்போல் தாம் பெறும் பொருளுக்காக மக்களைத் துன்புறுத்துகின்றனர். அதனால், குடிமக்கள் நின்னை வெறுப்பர். நெறியறிந்து அரசிறையைக் கொள்ளுக. அவ்வாறு செய்யின் கோடிக்கணக்கான பொருளை ஈட்டி நாடு பெரிதும் செழிக்கும்," என்றார்.

ஆ ! புலவர் அறிவுறுத்திக் கூறும் சொற்களின் பெருமையை என்னென்பது ! மாறுபாடு சிறிதுமில்லா மனத்துடன் அரசன் புலவர் சொல்வழி நின்றனன். மக்கள் மகிழ்ந்தனர். நாடு உயர்ந்தது.

இவ்வாறு அரசனையும் இடித்துக் கூறித் திருத்தினார் இவர், என்று இவர் புகழ் எங்கும் நிறைந்தது. அக் காலத்தில் உறையூரைத் தலை நகராகக்கொண்டு சோழநாட்டை ஆண்டவர் கோப்பெருஞ் சோழர் என்பவர். அரசராக இல்லற நெறியில் வாழ்ந்தார் இம் மன்னர். இவருக்கு முழு மூடர்களாகிய பிள்ளைகள் பிறந்தனர். அவர்களால் மன்னர் மனம் துன்புற்றது. ஆதலின், 'இயல்பாகவே உலகம் நிலையாது; நிலைத்த பரம்பொருளை வணங்கல் வேண்டும்' என்ற துறவு எண்ணம் அவருக்குச் சிறந்தது. அரச முனிவராக அவர் விளங்கினார்.

செந்தமிழ்ப் புலமை சிறந்து விளங்கும் அறிவு அவருக்குண்டு. இனிய செய்யுளெழுதும்

பெருமையும் அவர் அடைந்திருந்தார். இத் தகைய சிறப்புக்கள் எல்லாம் அவர்பால் பொருந்தி இருந்தன. அக் காரணத்தினுல், அவரைச் சிறந்த சோழர் எனவும், தலைமைக் குணம் உடையவர் எனவும் குடிகள் புகழ்ந்தனர். ஆதலின், அவர்தம் இயற்பெயர் மறைந்தது. கோப்பெருஞ்சோழர் என்ற சிறப்புப் பெயரே அவருக்குப் பெயராயிற்று.

அம் மன்னர், நெடுந்தொலைவில் பாண்டி நாட்டுக்குத் தெற்குக் கோடியிலுள்ள பிசிர் என்ற ஊரில் வாழ்ந்த ஆந்தையாரைப்பற்றிக் கேள்வியுற்ருர். அவருடன் நேரிற் கலந்து பழகும் நட்புரிமையை விரும்பினர். இக் காலத்தே போல், நெடுந் தூரத்திலுள்ளோர் ஒன்று இரண்டு நாட்களில் ஓரிடம் சென்று சேர்தற்குரிய எளிய வசதிகள் அக்காலத்தில் இல்லை. மன்னரோ, அரசியலில் ஈடுபட்டவர். ஆதலின், பல நாட்கள் தம் அரசியலை விடுத்துச் செல்லும் நிலைமையில் அவர் இல்லை. அன்றியும் அவர் புதல்வர்களின் தொல்லையும் அவரை ஒருபுறம் வாட்டிற்று.

இருவரும் ஓரிடத்தில் இருந்து நட்பினர்களாகப் பழகும் பெருமையினைப் பெறவில்லை ஆயினும், இருவருடைய உள்ளங்களின் உணர்ச்சிகள் ஒத்தன. இவர்கள் நட்பு, பிறைமதி

போல வளர்ந்தது. நட்பு என்னும் செடி, பெரு நிலம் பிளக்கும்படி வேர் வீழ்த்தது. ஒருவர் உருவத்தை ஒருவர் காணவில்லை. ஆயினும் ஒருவர் உள்ளத்தை விட்டு ஒருவர் அகன்றதே இல்லை. புலவர் எப்போதும் அரசன் அருங் குணங்களை நினைந்து நினைந்து இன்புறுவார். அரசரும் அங்ஙனமே புலவரின் உயர்ந்த குணச் சிறப்புக்களை எண்ணி எண்ணி, 'அன்னாரை என்று காண்போம்' என்று ஏக்கமுற்றிருப்பார்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்"

என்ற வள்ளுவனார் வாக்கிற்கும் பொருந்திய இலக்கியமாக இருவரும் விளங்கினார்கள்.

## 1. அன்னச் சேவல் தூது

அறிவு நிறைந்தோர் பலர் வாழும் ஊர் பிசிர். அதன்கண் வாழ்ந்த கோப்பெருஞ் சோழரின் நண்பர், "என்று நான் பாண்டிநாடு விட்டு உறையூர் செல்வேன்? என்று எண் ணுள்ளத்தமர்ந்துள்ள தோழரைக் காண்பேன்? என்று அவருடன் கலந்து உரையாடி மகிழ் வேன்?" என்ற எண்ணங்களே மிக, வெளி யிடத்தில் நின்றுகொண்டிருந்தார்.

விண்வழி ஒரு பறவைக் கூட்டம் அப் போது பறந்து சென்றது. அக் கூட்டத்தை ஒட்டி அழகியதோர் அன்னப்பறவையும்பறந்து

சென்றது. அவை வடக்கு நோக்கிச் செல்வதை அவர் அறிந்தார். என்றும் எப்பொழுதும் மறவாது நின்ற கோப்பெருஞ் சோழரைப் பற்றிய நினைவு அவருக்கு மிகுந்தது. அம் மன்னராகிய தம் இன்னுயிர் நண்பர் வாழும் நாடு நோக்கிப் பறந்து செல்லும் பறவை போல் தாமும் பிறக்கவில்லையே என்று வருந்தினார். பறக்கும் ஆற்றலைத் தரும் சிறகுகளைப் பெற்றிருந்தால் சடுதியில் சென்றிருப்பார். நடந்து செல்வதென்னில் அது மிக்க தொல்லை தருவதோர் காரியம் என்று அதனைக் கைவிட்டார்.

அன்னச் சேவலைக் கண்ட அவர், அதனிடம் சில கூறி அனுப்ப ஆவல் கொள்கின்றார். தம் எண்ணத்தின் அழுத்தத்தினால், அறிவு இல்லாத பறவை, தாம் கூறுபவற்றைக் கேட்டறியுமா? சென்று அவ்வாறேசொல்லுமா? என்பனவற்றை மறந்தார். வாய்விட்டுத் தம் எண்ணத்தை எங்ஙனமேனும் கூறுதலிலேயே அவர் கருத்து நிற்கின்றது. துன்பமோ, இன்பமோ, இரண்டிலொன்று மிகுந்த காலத்தில் அதனை வாய்விட்டுக் கூறுவதாலே சிறிது ஆறுதல் உண்டாகும்.

"அன்னச் சேவலே! அன்னச் சேவலே! இம் மாலைக் காலம் மிக நன்றாக இருக்கின்றது.

தண்ணிலா தன் கதிர்களைப் பரப்பி மகிழ்ச்சியை உண்டாக்குகின்றது. யான் பார்க்கும் மக்களெல்லாரும் மகிழ்வுடன் காணப்படுகின்றனர். என் மனமோ தோழரை என்று காண்பது என்று வருந்துகின்றது. நீயோ குமரித் துறையில் அயிரை முதலிய மீன்களை உண்டு மகிழ்ந்திருக்கின்றாய்! நின் மனைவிக்கு அணிவகை சில தருதல் வேண்டும் என்று நான் ஆவல் கொள்ளுகின்றேன். அவை என்பா லில்லை. ஆதலின், யான் கூறுமிடத்திற்குச் செல்லுவாயாயின் அவற்றைப் பெறலாம். நீ இமயம் நோக்கிப் பறந்து செல்லுகின்றாய். இப்பாண்டி நாட்டைக் கடந்து செல்வாயாயின் சோழநாட்டைக் காண்பாய். அந்நாட்டின் தலைநகரம் அழகிய கோழி என்னும் உறையூர். அவ்வூரில் மிக உயர்ந்த அரண்மனை இருக்கின்றது. அம்மாளிகையின் வெளியில் காவலாளர் நின்றிருப்பர். அவரிடம் கூறிய பின்பே உள்ளே செல்ல வேண்டுமென்பதில்லை. உனக்குத் தடை ஒன்றும் இராது; நேரே செல்லலாம். சென்று, அவையில் வீற்றிருக்கும் கோப்பெருஞ் சோழரைக் காண்பாயாக! கண்டு, அவர் கேட்கும் வண்ணம், 'பிசிர் என்னும் ஊரிலிருந்து வருகிறேன். பிசிராந்தைக்கு அடித்தொழில் புரிபவன் யான்,' என்று கூறுக. அவர் மனம் மகிழ்ந்து நின் மனைவி அணிய அணிகள் தருவர்,'' என்றார்.

இவ்வாறு தனித்திருந்த காலத்தும், பிற வற்றைக் கண்ட காலத்தும் தோழரின் பெருமையைப் புலப்படுத்திக் கூறினர் பிசிராந்தையார். மற்றொரு முறை, 'நும் தலைவர் யார் ?' என்று கேட்டாரை நோக்கி, "என் தலைவர் யார் என்று கேட்கின்றீர்கள். அவர் வளம் சிறந்த நாட்டினர். தம்மை அடைந்த பாணர் பசியை உடனே போக்குபவர். உறையூர் எனும் ஊரில் வசிப்பவர். கோப்பெருஞ் சோழன் என்ற பெயருடையார். குற்றமற்ற நட்புரிமையை நன்றாகக் கொண்டவர். பொத்தி என்ற நண்பரை அருகிலேயே என்றும் உடையவர். அந் நண்பருடன் மெய்யாக மகிழ்ந்து விளங்குபவர்," என்று கூறினர்.

நாடு இடை கிடந்தும் நட்பு வளரலாயிற்று. உண்மைத் தோழர்களாக இருவரும் சிறந்து நின்றனர்.

## 2. இறுதி நாட்கள்

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின்."

ஒருவன் ஏழு பிறப்புக்களிலும் தீமையின்றி வாழ்வான். எப்படி ? மக்களைப் பெறுவானுனல்; எத்தகைய மக்களை ? பழி பிறங்காப் பண்புடை மக்களை; பிறரால் பழிக்கப்படாத நற்குணமுள்ள மக்களைப் பெறுதல் வேண்டும். ஆகவே,

பிள்ளைகளைப் பெற்றால் நற்குணமுள்ளவர்களைப் பெறுதல்வேண்டும்; இன்றேல் பெற்றோருடைய நற்பெயர் கெடும்.

கோப்பெருஞ் சோழர் நட்பால் சிறந்தார். நட்புச் செல்வம் அவருக்குக் கிட்டியது. நன் மக்கட்பேறு அவருக்கு இல்லை. அவர் பிள்ளைகள் மிகுந்த கொடுமைக் குணத்தினர். தம்மைப் பெற்று வளர்த்துத் தமக்குரியன செய்தவர் தந்தை; ஆதலின், அவர் சொல்வழி நிற்கவேண்டும் என்ற குணம் அவர்களிடத்தில்லாது ஒழிந்தது. அவ்வளவோடு நின்றிருந்தாலும் கெடுதி இல்லை. தம் தந்தையினையே அரச பதவியினின்றும் நீக்கவேண்டும் என்று எண்ணினர். தீய எண்ணம் தீச் செயலை விளைத்தே தீருமல்லவா? ஆகவே, அப்புதல்வர்கள் தம்மால் இயன்றதொரு படையைத் திரட்டினர். மன்னர்மேல் சண்டைக்கும் வந்தனர்.

கோப்பெருஞ்சோழர் நடந்தவற்றை அறிந்தார். அவர் மனம் புண்பட்டது. தம் மக்களின் தீய நடையைக் கண்டிக்க வேண்டியது இன்றியமையாதது. அதற்கென்னசெய்வது என்று அரசர் சிந்தித்தார். தாமும் அவருடன் சண்டை செய்து அவருடைய ஆற்றலை அடக்கி நல்லறிவு கொளுத்தவேண்டும் என்ற முடிவிற்கு வந்தார். சேனைத் தலைவரை நோக்கித் தம் படையைத்

தம் மக்கள் படைக்கெதிராக அனுப்புமாறு கட்டளை இட்டார்.

சோழருடைய நண்பர்களுள் புல்லாற்றூர் எயிற்றியனார் என்பவர் ஒருவர். 'முகம் நக நட்பது நட்பன்று.' காணுங் காலத்தில் முகம் மலர நகைசெய்து நிற்றல் நட்பாகாது. 'அழி வினவை நீக்கி ஆறுய்த்தலே,' நட்பினர் செய்ய வேண்டியவை. தம் நண்பர் கேடுதரும் தீ நெறி களில் செல்லின் விலக்கல் வேண்டும்; பின்னர் நன்னெறிகளில் செலுத்துதல் வேண்டும். இவைதாம் நட்புடையார் மேற்கொள்ள வேண்டியவை. இவற்றை நன்குக அறிந்த புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார். ஆதலால், அரசர் தம் மக்கள்மேல் படைகொண்டு செல்கின்றார் என்பதை அறிந்த அவ்வளவி லேயே, அரசர் இருக்கும் இடத்தை விரைந் தடைந்தார்.

அரசர் முகம் முழுவதும் செக்கச் செவே ரெனச் சிவந்திருக்கின்றது. கண்கள் அனலை ஒத்து விளங்குகின்றன. ஆண்டுகள் பல கடந்த அவருடல் முறுக்குடன் வீரத்தால் சிறந்து நிற் கின்றது. ஆதலின் மெல்ல, "எந்தப் போரிலும் வெற்றியையே பெற்ற வேந்தே ! நிலப்பகுதியை முழுவதும் வென்று அச் சிறப்புத் தோன்ற

வெண்கொற்றக்குடையின் நீழலில் வாழ்வீர் !" என்றார்.

தம் பண்டை வெற்றிகளில் மன்னர் மனம் செல்கின்றது. அவர்தம் எண்ணம்—ஒரே எண்ணம்—மக்களை அடக்க வேண்டும் என்ற எண்ணம்—நெகிழ்கின்றது. அதனால் புலவர் கூறுகின்றவற்றைக் கருத்துடன் கேட்கின்றார் அரசர்.

"அரசரே ! நும்முடன் சண்டையிட வந்தோர் இருவர். அவர்கள் யாவர் என்று எண்ணினேன். நின் பழங்காலப் பகைவரோ என்று கருதினேன். அவர்கள் நின் பகைவரல்லர் என்றுணர்கின்றேன். ஆனால், நீவிர் அவர்தம் பகைவரோ என்றால் அவ்வாறும் கூறுதற்கில்லை."

உலகில் பகைவர்களே போர் செய்பவர். பகைவரல்லாத இருசாரார் போர் செய்தலை யாண்டும் கேட்டுமில்லை; கண்டுமில்லை. இவ்வுண்மைக் கருத்தினை உள்ளீடாக வைத்துக் கொண்டார் புலவர். அரசருடைய நல்ல உள்ளம் வெகுளியால் சிறிது துன்பமடைந்திருக்கின்றது. அத்துன்பத்தினை நீக்க முற்படுகின்றார். இங்ஙனம் சொல்லிய காலத்தில் அரசர் புலவரைக் கூர்மையாகக் காண்கின்றார். 'காலம் அதுவே,' என்றறிந்த புலவர் தொடர்ந்து கூறுகின்றார்.

"அறிவிற் சிறந்த அரசர் ஏறே! சிறந்த புகழுடையீராக நீவீர் வாழ்கின்றீர்! பிறந்தபின் மாய்தல் உறுதி. ஆதலின், மேலுலகத்தை நீவிர் அடையுங்காலத்து இவ் வரசியலை ஒழித்துச் செல்வீர். அப்பொழுது இவ் அரசியலை ஏற்று நடத்துபவர் யார்? இன்று நும் முன் பகைவராய் நிற்பவர்களல்லவா நும் பின் அரசாள்வோர்? மேலும், யான் கூறுகின்றவற்றைக் கேட்பீராக. நும் பகைவரென நிற்கும் இவ்விளைஞர் தமக்கு ஆற்றல் உண்டு என்று நம்பினர். ஆதலினல், தம் உண்மை அறிவை இழந்தனர். இவர் இக் களத்துத் தோற்ருல் இந்த அரசச் செல்வத்தை யாருக்குக் கொடுப்பீர்? போரில் வெற்றி ஒருவரையே சாரும் என்று சொல்லுதற்கில்லை. ஆகவே, நீவிர் தோற்றுவிட்டால் நேர்வதென்ன? உம்முடைய பழம்பகைஞர் மகிழமாட்டார்களா? உலகத்தில் பெரும் பழிச்சொற்களுக்கல்லவோ இடமாகுவீர்?"

இவ் வினக்களால் மன்னன் உள்ளத்தில் புது ஒளி உண்டாயிற்று. மக்கள்மேலிருந்த வெகுளி சிறிது சிறிதாக அழியத்தொடங்கியது. தாம் இனிச் செய்ய வேண்டியது யாது என்றறியாமல் மன்னர் மனம் தடுமாற்றம் அடைகின்றது. புலவர் நன்ருக மன்னர் எண்ணங்களை உணர்ந்தார். ஆதலின் அடுத்து, மன்னர்

இனி இதனைத்தான் செய்யவேண்டும் என்று கட்டளை இடுகின்றார்.

"எம் உயிரனைய பெருந்தகையீர்! நும் வீர உணர்ச்சிகள் ஒழிவதாக! நும் உள்ளம் நன்று உணர்ந்து வாழ்வதாகுக! இனி உமக்கு அரசியல் தொல்லை வேண்டாம். வயது நிறைந்த நும் மக்களே ஆள்வதற்கு அவ் வரசியலை விட்டு விடுவீர். நும் உயிர்க்கு ஆவன செய்தல் வேண்டும். அஞ்சினோர்க்குப் புகலிடமாக நும் திருவடிகள் விளங்கின. நும்மை விருந்தினர் எனத் தேவர் ஏற்றுக்கொள்ளவேண்டும். அதற்குரிய நற்றவத்தை நீவிர் செய்தல் வேண்டும். செய்யத் தக்கது அதுவே," என்று கூறி முடித்தார்.

மன்னர் தம் முன்னைய எண்ணங்களை எல்லாம் அறவே மறந்தார். புலவர் கூறியவாறே தவத்தைமேற்கொண்டார்; எப்படிப்பட்ட தவம்? வடக்கு நோக்கி ஓரிடத்தில் இருத்தல்; உடலை மெலிவித்தல்; யோகப் பயிற்சியால் உயிரை நீத்தல்; எனுமிவையாகிய வடக்கிருத்தல் என்ற தவத்தை மேற்கொண்டார். மன்னர் உடையை ஒழித்தார்; முனிவர் போன்று உடுத்துக்கொண்டார்.

இதனை நாட்டுமக்கள் அறிந்தனர். அறிஞர்களும் புலவர்களும் மன்னரைச் சூழ்ந்தனர். **பொத்தியார், கண்ணனார், கருவூர்ப் பெருஞ்**

சதுக்கத்துப் பூத நாதனுர் முதலிய புலவர் கள் சேர்ந்து நின்றனர். உள்ளம் மிக வருந் தினர்.

அவர்களைக் கண்ட அரசர், அவர்களுக்குத் தேறுதல் கூறும் முறையில் பின்வருமவற்றைக் கூறினுர் : "அறிஞர்களே ! மனம் வருந்தா தீர். உலகத்துப் பிறந்தோர் யாவரும் நல்வினையைச் செய்தல் வேண்டும். குற்றப்பட்ட நெஞ்சினோர் அறவினையைச் செய்வோமோ அல்லோமோ என்று கருதுவர்; தம் ஐயம் நீங்கார். அவர் இழிந்த குணத்தினர் ஆவர். யானையை வேட்டையாடச் சென்றவன் யானையையும் பெறு வான்; குறும்பூழ் எனும் மிகச் சிறிய பறவையை வேட்டையாடச் சென்றவன் அது கிடைக்கப் பெருமலும் மீளலாம். ஆகவே உயர்ந்ததாகிய அறம் செய்யும் எண்ணமுடையோர்க்கு இப் பிறப்பிலேயே அதன் பயன் கிடைக்கப் பெருமற் போயினும், அடுத்த பிறப்பிலேயாயினும்கிட்டும். மாறிப்பிறத்தல் இல்லை என்று சிலர் சொல்ல லாம். அவ்வாருயின், சிறந்த புகழை நிலை நிறுத்திக் குற்றமில்லா உடம்பொடுகூடி இறத் தல் சிறந்தது; அதனுல், எவ்வாறும் நல்வினை யைச் செய்தலே நன்று."

பின்பு, அரசர் தாம் வடக்கிருந்த இடத்திற் கருகில் ஓரிடத்தை ஒழித்துவைக்குமாறு தம்பால்

இருந்தார்க்குக் கூறினர். 'அவ்விடம் எதற்கு?' என்ற ஐயம் அவர்களுக்கு உண்டாயிற்று. அதனை அறிந்த அரசர், "அறிஞர்களே! தென்னம் பொருப்பன் நன்னாடு பாண்டி நாடு. அந்நாட்டில் என் உயிரைப் பாதுகாப்பவர் ஒருவர் இருக்கின்றார். அவர் பிசிர் என்னும் ஊரில் வாழ்கின்றவராவர். யாம் செல்வத்துடன் சிறந்த காலத்தில் அவர் வரவில்லை; ஆயினும், யான் இன்னமை அடையும் இக் காலத்து வருவார். ஐயம் உங்களுக்கு வேண்டிய தில்லை. இடமொழித்து வையுங்கள்," என்றார்.

அறிஞர்கள், "அரசே! உங்களைப்பற்றி அவர் கேள்விப்பட்டுள்ளார். நீங்களும் அவ்வாறே கேட்டறிந்திருக்கின்றீர்கள். இவ்வாறே யாண்டுகள் பல கழிந்திருக்கின்றன. ஒரே இடத்திலிருந்து நிரம்பப் பழகியிருக்கும் நண்பினராயினும் அவ்வழியில் ஒழுகுவது மிகக் கடினம். ஆதலின் அவ்வெண்ணத்தை மாற்றிக்கொள்ளல் நலம்," என்றனர்.

அவர்தம் சொற்களைக் கேட்ட மன்னர், "சிறந்த அறிஞர்களே! நீங்கள் எவ்வகை ஐயமும் எள்துணையளவும் கொள்ளாதீர்கள். பிசிர் எனும் ஊரில் வாழும் அவர் இனியகுணக் குன்று; உயிருடன் பிணிக்கும் உயர்ந்த நட்பினர்; புகழை ஒழிக்கும் பொய்க்குப் பகை;

மெய்ம்மையே அணியும் மேன்மையோர்; புகழையே வாழ்வெனக் கொள்ளும் உயர்ந் தோர்; என்னை வேருகவும் தம்மை வேருகவும் கருதும் இயல்பு அவர்பாலில்லை. அவர் பெய ரைக் கேட்டால், ‘என் பெயர் சோழன்,’ என்பார். இவ்வாறு பேதையாகிய என்னுடைய பெயரையே தம் பெயர் என்று சொல்லும் வேறு பாடு இல்லாத அன்பினர். இத்தகைய காலத் தில் தனித்து நில்லார்; வந்தே தீருவார். ஆதலின் என்னை மறுக்காது அவருக்கும் இடம் ஒழித்துவையுங்கள்,” என்று கூறினர்.

உணர்ச்சி யொன்றே சோழநாட்டு மன்ன ரையும் பாண்டிநாட்டுப் புலவரையும் ஒன்ருகச் சேர்த்தது. அவ் வுணர்வால், புலவர் தம் தோழராகும் அரசருக்கு உற்றதை உணர்ந்தார். நர்டு நீங்கினர். காடு பல கடந்தார். சோழ நாட்டைச் சேர்ந்து மன்னரிருக்கும் இடத்தை அடைந்தார். பொத்தியார், வந்த புலவரைக் கண்டார்; கண்ணகனர் கண்டார்; பூதநாதனர் கண்டார்; பிறரும் கண்டனர். மற்றைய அறி ஞர்களும் கண்டனர். வியப்புக் கடலில் ஆழ்ந் தனர். ஒன்றும் பேசுதலாற்ருது நின்றனர்.

துன்பம் நிறைந்த காலம் அது. அப்போது ஆந்தையார் வந்தது ஒரு கிளர்ச்சியையே யாவருக்கும் உண்டாக்கியது. ஆதலின் பொத்தி

யார் வாய் திறந்து "இதனை நினைத்தாலே வியப்பை உண்டாக்குகின்றது. தம் சிறப்



புக்கள் எல்லாவற்றையும் கைவிட்டுப் புலவர் இங்கே வருதற்குத் துணிந்தது மிக்க வியப்பை உண்டாக்குகிறது. வேற்றுநாட்டு மன்னரிடத்

துத் தோன்றிய நட்பையே பற்றுக்கோடாகக் கொண்டு இத்தகைய காலத்து இங்கே வருதல் அளவிறந்த வியப்பை உண்டாக்குகின்றது. 'வருவான் பிசிரோன்,' என்றார் மன்னர்; அவ்வாறே வந்தார் புலவர். இவ்விருவருடைய அறிவு ஒற்றுமையை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும், வியப்பு எல்லை கடந்து செல்கின்றது. சோழன் செங்கோல் செல்லாத் தேயம் பாண்டி நாடு. அங்கு வாழ்ந்த புலவர் நெஞ்சினைத் தமதாகக் கொண்டார் மன்னர். இவரை இழக்கும் இவ்வுலகம் எவ்வாறு இனி வாழும்!" என அங்கு நடந்தவற்றைக் கூறி மன்னர்க்காக வருந்தினர்.

ஞாயிற்றைக் கண்ட தாமரை மகிழ்ந்தலரும். தண்ணிலவைக் கண்ட ஆம்பல் இனிமையாக மலரும். மேகத்தைக் கண்ட தோகைமயில் மகிழ்வால் நடிக்கும். தாய் முகங் கண்ட சேயின் உள்ளத்தின் மகிழ்வும் இயம்பப்படுமதோ? ஆந்தையாரைக் கண்ட மன்னர் இவ்வாறு ஆயினர். இன்மொழிகள் சிலவற்றை இயம்பினர். காணாது நட்ட இருவரும் ஒருவரை ஒருவர் கண்டு மகிழ்ச்சி எனும் கடலில் ஆழ்ந்தனர்.

பின்னர், அங்குக் கூடி இருந்த முதிய புலவர் ஆந்தையாரை நோக்கி, "ஐயரே, நுமக்கு ஆண்டுகள் பல ஆயின என்று அறிவோம்;

ஆனால் அதற் கறிகுறியாகிய நரை இன்றி இருக்கின்றீர்களே! காரணம் இன்னதெனக் கூறலாமோ?" என்றார்.

புலவர், "சொல்லுகின்றேன் கேளுங்கள்; என் மனைவி மாண்பு நிறைந்தவள்; நற்குண நற்செய்கைகளுடையவள். என் மக்களும் என் மனைவியைப் போன்றே உயர்ந்த குணங்களை உடையவர். என் ஏவலாளர் என் கருத்திற்கு வேலைசெய்வர். என் நாட்டு அரசன் ஒத்த ஒழுங்குடன் அரசாள்கின்றனன். மேலும், யான் வாழும் ஊரில் அடக்கம் முதலிய உயர்குணங்கள் நிறைந்த சான்றோர் பலர் வாழ்கின்றனர்; அவர்களுடன் யான் என்றும் பழகுகின்றேன். இத்தகைய நலங்களாலே எனக்குக் கவலை என்பது இல்லை. ஆதலின், கவலை உள்ளாரைப் பிணிக்கும் கவலைப்பிணி என்றனக் கில்லை. அப் பிணியுடையாரையே நரை தனக்கு உரிமையாக்கிக்கொள்ளும். எனக்குக் கவலையும் இல்லை; நரையும் இல்லை," என்று கூறினார்.

சான்றோர் யாவரும் வியப்புக் கடலில் ஆழ்ந்தனர். நடந்தவற்றையெல்லாம் கண்டார் கண்ணகனார் என்னும் ஒரு புலவர். அவர் தாம் எண்ணிய சிலவற்றைக் கூற விரும்பினார். "பொன், பவளம், முத்து மணி ஆகியவை ஒரே இடத்தில் தோன்றுவன அல்ல. மண்ணிலும்,

கடலிலும், மலையிலும் அவைதோன்றுகின்றன. ஒன்றற்கொன்று இயைபில்லா நெடுந்தொலைவில் பிறக்கின்றன. ஆயினும், நல்ல அணிகலன்களைச் செய்யுங்காலத்துக் கோவையாய் ஒரே இடத்தில் சேர்கின்றன. அவ்வாறே, சான்றோர் வெகுதொலைவி லிருந்தாலும் ஒன்றுசேர்வர்; இதற்கு ஐயமில்லை," என்றார்.

புலவரும் அரசரும் வடக்கிருந்தனர். அப்போது பொத்தியாரும் அரசருடன் வடக்கிருக்கமுற்பட்டார். அவரைக் கண்ட மன்னர், "நும் மனைவி, மகன் பெற்ற பின்னர் வருக! இப்போது வேண்டா" என்று தடுத்தார். நாட்கள் பல ஆயின. உடல்வலி யிழந்த புலவரும் புரவலரும் உயிர் துறந்தனர். அவர்கள் உயிர் நீங்கிய இடத்தில் கற்கள் நடப்பட்டன. அவற்றில் அவர்கள் உருவங்கள் எழுதப்பட்டன; அவர்தம் பெருமையும் பொறிக்கப்பட்டிருந்தது.

மகனைப் பெற்றவுடன் பொத்தியாரும் வந்தார். நடுகல் உருவத்தில் சோழனைக் கண்டார். "தோழனே! மகனைப் பெற்ற பின்னர் 'வருக' என்றனை. மகனைப் பெற்று வந்தேன். எனக்கு இடம் எங்கே?" என்றுரைத்துக் கசிந்து நின்றார். நடுகல் வெடித்து ஒரு புறம் புலவருக்கு இடம் தந்தது.

மாணவர்களே! அரசரின் சீரிய குணத்தைக் கண்டீர்களா? நடுகல்லாகியும் நண்பனைக் கைவிடவில்லை; பொத்தியாரும் வடக்கிருந்து உயிர் நீத்தார். சிறுவர்களே! இக்கதையைப் படித்தீர்கள். இதன்கண் நீவிர் சிறந்ததொரு படிப்பினையைக் காண்கிறீர்கள். காணுத இருவர் கலந்த தோழராயிருந்தனர். ஒருவருக்குத் துன்பம் வந்தபோது மற்றவரும் அதைத் தம்முடையதாகக் கருதினர். ஆகவே, தோழர்கள் எப்படி இருக்கவேண்டும் என்பதை இது அறிவிக்கின்றதல்லவா?



# மேற்கோள் விளக்கம்

## எண் பக்கத்தைக் குறிக்கும்

2. (தந்தை...............செயல்) தந்தை தன் மகனுக்குச் செய்யும் உதவி எது என்றால், அறிஞர்கள் கூடியுள்ள அவையில், அவர்களோடு ஒத்த அறிவுடையவனாக அவனை விளங்குமாறு செய்தலாம்.

*20. (கொங்குதேர்..............பூவே) பூந்தாதை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையினையும், அழகிய சிறையையும் உடைய வண்டே! நான் விரும்பியதைக் கூறாமல், நீ அறிந்த உண்மையைச் சொல்வாயாக. நீ அறியும் மலர்களுள் பொருந்திய நட்பையும், மயில்போன்ற இயலையும் செறிந்த பற்களையுமுடைய இந்தப் பெண்ணின் கூந்தலைப்போல நறுமணமுடைய பூக்கள் இருக்கின்றனவா?

40. (இறுதி.........தூது) தம் உயிருக்கு இறுதி நேர்ந்தாலும், சிறிதும் அஞ்சாது, தாம் சொல்லவேண்டியவற்றை மாற்றரசனிடத்தில் சொல்லித், தம் அரசருக்கு உறுதியை உண்டாக்குவதே தூதுவனுக்கு அழகாகும்.

49. (முகத்தின்.........துறும்) முகத்தினும் அறிவு படைத்த பொருள் பிறிதொன்றில்லை. என்? உள்ளம் மகிழ்ந்தாலும், வெகுண்டாலும் அதனை இது முற்பட்டுக் காட்டிவிடுகின்றது.

60. (தற்காத்து...........பெண்) கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துக்கொண்டு, உண்டி முதலியவற்றால் தன் கணவனைக் காப்பாற்றி, இருவர்மாட்டும் அமைந்த இனிய புகழைக் காப்பாற்றி, நற்குண நற்செயல்களை விடாப்பிடியாகக்கொண்டு விளங்குபவள் பெண் என்று சொல்லப்படுவாள்.

66. (புணர்ச்சி.........தரும்) ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை; இருவருக்கும் ஒத்த உணர்ச்சியே நட்பாகும் உரிமையைக் கொடுக்கும்.

69. (எழுபிறப்பும்.........பெறின்) பிறரால் பழிக்கப்படாத, நற்குணங்களையுடைய புதல்வரைப் பெறுவனாயின், வினைவழியே பிறக்கும் எழுபிறப்பின்கண்ணும், ஒருவனைத் துன்பங்கள் சென்று அடையமாட்டா.

---

* கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ அறியும் பூவே.

# அருஞ்சொற் பொருள் விளக்கம்

## எண் பக்கத்தைக் குறிக்கும்

மகவு - குழந்தை 2
கருந்தனம் - பெருஞ்செல்வம் ,,
வாத்தி - ஆசிரியர் ,,
நாவலர் - நாவன்மையுடைய புலவர் 3
மதி நலம்-அறிவின் பெருமை ,,
மாக்கள் - விலங்குகள் 4
காண்கிலேம் - காணவில்லை 5
உரை வகுத்தல் - உரை எழுதுதல் 6
விழைவு - ஆவல் 20
மதியாது - மதிக்காமல் ,,
அங்கயற்கண்ணி பங்கர் - அங்கயற்கண்ணி அம்மையாரை ஒரு பக்கத்தே உடைய சொக்கநாதன் ,,
பொருமினுன் - வருந்தினுன் 21
கந்தர-கழுத்தை உடையவனே ,,
வேத மந்திர - மறையொலி யாயுள்ளவனே ,,
கான்ற - வெளியிட்ட 22
உறையுள் - தங்கும் இடம் 23
கசிந்தனர் - வருந்தினர் ,,
நோன்பு - விரதம் 25
எதிர் மண்டும் - எதிர்த்து நிற்கும் 30
காந்தள் - ஒருவகை மலர் 31
குளவி - மலை மல்லிகை ,,
தரம் - தகுதி 33
சான்ற - நிறைந்த ,,
அகம் - உளம் 34
கவளம் - யானையின் உணவு ,,
கங்கு - வரம்பு 40
நாட்டம் - பார்வை 43
குருதி - இரத்தம் 53
பகிர்ந்து - பாகம் செய்து 56
நிதிக்கொட்டில் - பணம் வைக்கப்பட்டிருக்கும் இடம் 58
இலம்பாடு - இன்மை; தரித்திரம் 59
பொற்பு - அழகு 60
இறை - வரி 63
ஈட்டி - தந்து 64
இயற்பெயர் - பெற்றோர் இட்டு அழைத்த பெயர் 65
தண்ணிலா - குளிர்ச்சி பொருந்திய நிலவினை வீசும் மதியம் 68
நெகிழ்கின்றது - வன்மை யாகிய நிலையிலிருந்து குழைகின்றது. 72
மாய்தல் - அழிதல் 73
தடுமாற்றம் - தடுமாறுதல் ,,
பேதை - அறிவில்லாதவன் 77
இயம்பப்படுமதோ - சொல்லப்படுமோ 79
கோவையாய் - தொடர்பு பெற்று 81
பொறிக்கப்பட்டிருந்தது - எழுதப்பட்டிருந்தது ,,
படிப்பினை - வாழ்விற்குரிய தகுதியமைந்த கருத்து 82

கழக வெளியீடு: ௩௫௦.

# சங்க காலத்துக் கதைகள்



சிவத்திரு. ஞானியாரடிகளின் மாணவர்
வித்துவான், திரு. மு. இராசாக்கண்ணனுர் B.O.L.
எழுதியன



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நம் மூதாதையராகிய பெருந்தமிழ்ச் செல்வர்கள் நமக்குத் தந்திருக்கும் மணிக்குவியல்கள் சங்கநூற் செய்யுள்களாகும். மன்றமேறி வழக்காடி உரிமைப் பொருளைப் பெறுகின்றவர்களைப் பார்க்கின்றோம்; நாம் நமக்குரிய மணிக்குவியற் பொருளை நம்முரிமை என்றேனும் எண்ணி ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லையா ?

இந்நூலில் காணப்படும் கதைகள் ஐந்தும் சங்கநூற்களிலிருந்து கொள்ளப்பட்டனவாகும். ஒவ்வொன்றும் ஓர் அரிய மணியை நிகர்த்து விளங்கி ஒளிவிடுகின்றது. புறநானூறு, மணிமேகலை, பரிபாடல் எனும் மணிப்பெட்டகங்களே இவ்வைந்து ஒளிக் கற்களையும் உதவியன.

இளைஞர்கள் இத்தகைய கதைகளைப் படிப்பதால் பெரும்பயன் அடைவர். ஆண்டில் முதிர்ந்தோரும் சங்க நூற்களைப் படித்தல் வேண்டும் என்னும் அவாவும் முதிரும். இவ்வாறு முதிர முதிரச் சிறந்த தமிழுள்ளத்தைக் கைவரப் பெறுவர்.

சங்க காலத்துக் கதைகள் எனும் பெயருடன் வெளிவரும் இந்நூல், சங்கநூற் சிறு கதைகள், சங்க நூற் கதைகள், செந்தமிழ் நாட்டுச் சிறு கதைகள் ஆகியமூன்றினையும் பின்பற்றி வருகின்றது.

இவ்வாறு பல நூல்கள் வெளிவருவதற்காகும் நன்முயற்சியையும் மேற்கொண்டுள்ளோம்.

சிறு சிறு தொடரில், நல்ல விளக்கங்களுடன் படித்தற்கு உணர்ச்சியும் கவர்ச்சியும் நிரம்பச் செந்தமிழினிமை புலப்படச் சீரிய முறையில் எழுதித்தந்த திருவாளர் வித்துவான் மு. இராசாக்கண்ணனார் B. O L. அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

# சங்க காலத்துக் கதைகள்



## 1. தமிழ் முழுதறிந்தோன்

நம் தமிழ் நாட்டைப் பல சிறிய அரசர்களும், பெரிய அரசர்களும் ஆண்டுவந்தனர். அவர்கள் தங்களுடைய அடையாளங்களாகப் பலவற்றை வைத்துக்கொண்டிருந்தனர். அவற்றுள் 'முரசு' என்பதும் ஒன்று.

இம் முரசினை எவ்வாறு செய்தார்கள்? காட்டில் வாழ்கின்ற விலங்குகளுக்குள் சண்டை உண்டாவது வழக்கம். காளைமாடு புலியுடன் சண்டையிட்டுத் தன் கொம்புகளால் புலியைக் கிழித்துக் கொல்லும். அவ்வாறு கொன்ற காளை இறந்த பிறகு அதன் தோலால் முரசினைச் செய்வார்கள். தோலின்மேல் இருக்கும் மயிரினைப் போக்காமல் இருந்தவாறே அமைப்பார்கள். அதனால் இது, 'மயிர்க்கண் முரசு' என்று சொல்லப்படும்.

இதனை எங்கே வைப்பார்கள்? சிறந்த கட்டிலின்மேல் முரசு வைக்கப்படும். மக்கள் எவரும் அக்கட்டிலின்மேல் ஏறி இருத்தல் ஆகாது. முரசுகட்டில் தூய்மையும் தெய்வத் தன்மையும் உடையது என்று வணங்கப் பட்டுவந்தது. அரசன் கொலுவீற்றிருக்கும்

அரியணையாகிய அரசுகட்டில் மிக உயர்ந்தது. அவ்வாறே முரசு கட்டிலும் மிக உயர்ந்தது.

முரசை எதற்குப் பயன்படுத்துவார்கள்? அரண்மனையில் திருமணம் நடக்கும் காலம், திருவிழா நாட்கள், பகைவன்மேல் போரிடச் செல்லும் நாள் ஆகிய காலங்களில் வள்ளுவன் என்னும் அரசனுடைய வேலையாள் முரசினை யானையின்மேல் ஏற்றிக்கொண்டு ஊர் நடுவே செல்லுவான். முரசினை அடித்துச் செய்தியைச் சொல்லுவான்.

இவ்வளவு பெருமை பொருந்திய முரசு வைக்கப்படும் இடமாகிய முரசுகட்டிலோடு பொருந்திய கதை யொன்றைச் சொல்லுகின்றேன். கருத்துடன் கேளுங்கள்.

பாண்டிநாட்டில் மோசிகுடி என்று ஓர் ஊர் இருந்தது. அங்கு அறிவுடையோர் பலர் வாழ்ந்தனர். அவர்களுள் கீரனார் என்ற பெயருடைய ஒருவர் இருந்தார். இவர் நல்ல சொற்களையே எப்பொழுதும் பேசினார்.

அன்பர்களே! உங்கள் முன்னே பழுத்த மாம்பழம் ஒன்றையும் துவர்ப்புடைய மாங்காய் ஒன்றையும் வைக்கின்றேன். ஏதேனும் ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்கின்றேன். நீங்கள் எதனை எடுத்துக் கொள்வீர்கள். இனிக்கும் பழத்தையா? அல்லது துவர்ப்புடைய காயையா? நீங்கள் பழத்தைத்தானே விரும்புவீர்கள். அதைப்போல நாம் பேசு

வதற்கு நல்ல சொற்களும் இருக்கின்றன. தீய சொற்களும் இருக்கின்றன. இவற்றுள் எதனைக் கொள்ள வேண்டும்? பிறருக்குத் துன்பத்தைத் தரும் தீய சொற்களையா? அல்லது பிறர் மகிழ்வதற்குரிய இனிய சொற்களையா? பழத்தை விரும்பிய நீங்கள் இனிய சொல்லையே விரும்புவீர்கள். ஆகவே, உங்களைப் போலவே புலவரும் இனிய சொற்களாகிய நல்ல சொற்களையே பேசினார். தீய சொற்களை இவர் கனவிலும் நினைக்கவில்லை. இவர் பிறந்த ஊர் மோசிகுடி என்று சொன்னேன் அல்லவா? இவருடைய பெயரோ கீரனார் என்பது. மக்கள், இவர் பிறந்த ஊரோடு இவர் பெயரையும் கூட்டி மோசிகீரனார் என்று அழைத்தார்கள்.

இவர் வாழ்ந்த காலத்தில் சேர நாட்டை இரும்பொறை என்ற அரசன் ஆண்டுவந்தான். இவன் சிறந்த வீரனாக விளங்கினான். தகடூர் என்ற ஊரைத் தலைநகரமாகக் கொண்டு அதியமான் என்ற சிற்றரசன் அரசாண்டுவந்தான். அவனுக்கும் சேரனுக்கும் போர் மூண்டது. இரும்பொறை அதியமானை வென்று தகடூரை அழித்தான். இந்த வெற்றியின் பிறகு, இவன் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை என்று அழைக்கப்பட்டான்.

இரும்பொறையின் பெருமை பாண்டிநாடு முழுவதும் பரவியது. அவன் பெருமையை மோசி கீரனாரும் அறிந்தார். அவனைக் காண வேண்டும் என்று எண்ணிச் சேர நாடு சென்றார்.

மன்னனைக் கண்டார். இருவரும் பொருந்திய நண்பர்கள் ஆயினர். யானை, பொன், முத்து முதலியவற்றைப் புலவருக்கு அரசன் பரிசிலாகத் தந்தான்.

காலையிலும் மாலையிலும் இரும்பொறை புலவருடன் கலந்து பேசிக்கொண்டிருப்பான். அரசியல் நுட்பங்களை எல்லாம் புலவரைக் கேட்டு அறிந்துகொள்வான். ஆதலின், அரசியல் துன்பங்களை நீக்கும் மருந்தாகப் புலவர் விளங்கினர். சேரனும் புலவரில்லாமல் தான் வாழமுடியாது என்று கருதினான்.

புலவரின் பிறப்பிடம் எது? பாண்டி நாட்டிலுள்ள மோசிகுடி என்பதன்றோ? தம் சொந்த ஊருக்குச் செல்லவேண்டும் என்று புலவர் நினைப்பாரன்றோ? தன்னூருக்குச் செல்லவேண்டும் என்று நினைந்து அரசனிடத்துச் சென்று சொன்னார். அரசனோ இவரை விட்டுப் பிரிய முடியாது தவித்தான்.

"எனக்கு நல்லறிவு தந்த அறிஞரே! ஏன் இப்போது பாண்டிநாட்டிற்குச் செல்ல வேண்டும்? பிறந்த ஊரைப் பிறகு சென்று பாருங்கள். தாங்கள் என் அவையில் வீற்றிருக்கும்போது எனக்கு அளவுகடந்த மகிழ்ச்சி உண்டாகின்றது; என்னை யறியாமலே என் மனத்தில் சிறந்த ஊக்கம் விளங்குகின்றது; முழுமதி விளங்கும் வானம் போல் என் அவையும் ஒளிவிடுகின்றது, எல்லா வகையாலும் உயர்ந்த தங்களை

விட்டுப் பிரிந்து என்னல் வாழ முடியாது,'' என்று கூறித் தடுத்துவிட்டான்.

புலவர் மேலும் மேலும் மன்னனைத் தூண்டினர். அவர் ஊர் சென்று வருதலை ஒருவாறு ஒத்துக்கொண்டான். சில நாட்களில் திரும்பிவருமாறு சேரன் கேட்டுக்கொண்டான்.

கீரனர் மோசிகுடிக்குச் சென்றனர். நாள் பல ஆயின. மனைவி மக்களுடன் இன்பமாகக் காலத்தைப் போக்கினர். ஆகவே, சில நாளில் புறப்பட்டுச் சேர நாடு செல்ல முடியாதவரானர்.

நாள்களை எண்ணிக்கொண்டிருந்தான் சேரன். புலவர் வரவில்லையே என்று வருந்தினன். அவர் வரமுடியாதவாறு என்ன துன்பம் நேர்ந்ததோ என்று நினைந்து வருந்தினன். உடனே தூதர் சிலரைப் பாண்டிநாட்டிற் கனுப்பிப் புலவரை அழைத்து வரும்படி கட்டளை இட்டான்.

தூதர்களைக் கண்டதும் புலவருக்கு அரசன் நினைவு வந்தது; அவனுடைய அன்பு நிறைந்த உள்ளத்தை நினைந்தார். உடனே புறப்பட்டுச் சேர நாட்டை நோக்கி நடந்தார்.

ஆயிரக் கணக்கான கல்தொலை செல்ல வேண்டும் என்றாலும் இக்காலத்தில் இயந்திரத்தின் உதவியால் செல்லலாம். கீரனர் முதலியோர் வாழ்ந்த அந்தப் பழங்காலத்தில் இவ்வகை இயந்திரங்கள் இல்லை. ஆனல் அவர்களின் உடல் நல்ல உரத்துடன் இருந்தன;

அவர்கள் உடலில் ஓடிய குருதி செக்கச் செவே ரெனச் சிவந்திருந்தது. தடை படாத குருதி ஓட்டத்தால் தசை நார்கள் வன்மையாகவிருந் தன. ஆதலின், அவர்கள் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு நடந்தே சென்றனர். இந்த நாட்களிலே பட்டினங்களில் வாழ்வோர் நடந்து செல்வதை உடற்பயிற்சியாகக் கொள்கின்றனர்.

நம் புலவர் பாண்டி நாட்டினின்றும் நடந்தே சென்ருர். ஆதலிஞல் உடல் இளைத் தார். சேர நாட்டை அடைந்து சேரன் அரண் மனையை அடைந்தார். நீண்ட வழி நடந்து வந்தாரன்ருே? அவருக்கு இளைப்பும் களைப்பும் வந்தன; அரசன் எங்கோ வெளியில் சென் றிருந்தான். அரசன் வரும்வரை ஓரிடத்தி லிருந்து களைப்பைப் போக்கிக்கொள்ள எண்ணி ஞர். எங்கும் பார்த்தார்.

நல்ல உருவங்கள் செதுக்கப்பட்ட அழகிய கட்டில் ஒன்று காணப்பட்டது. எண்ணெய் நுரையைப் போன்ற பல துணிகள் அக்கட்டி லின் மேல் போடப்பட்டிருந்தன. மேலும் காம்பு அரியப்பட்ட மலர்களும் தூவப்பட் டிருந்தன. அக் கட்டில் மிக அழகாக விளங் கிற்று; புலவரைத் தன் பக்கம் இழுத்தது.

இளைப்போடிருந்த புலவர் இளைப்பைப் போக்கிக்கொள்ள ஓர் இடம் தேடிக்கொண்டிருந் தாரன்ருே? கட்டிலைக் கண்டவுடன் அதன் மேலேறிப் படுத்துத் தூங்கித் தம் உடல்

அலுப்பினைப் போக்கிக்கொள்ளக் கருதினார். அவர் பார்த்தது முரசு கட்டில் என்பதை அவர் அப்போது தெரிந்து கொள்ள வில்லை. ஆனால் அவருக்கு முரசு கட்டிலே தெரியாதா? அவர் முரசு கட்டிலை அறிந்தவரே. ஆயினும் உடல் களைத்திருந்தமையால், ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற கவலையே இருந்தமையால் முரசு கட்டில் என்பதை மறந்தார். கட்டிலின் மேல் ஏறிப் படுத்தார். நன்றாகத் தூங்கி விழித் தவர்களும் இந்த முரசு கட்டிலில் படுத்தவுடன் உறங்கிவிடுவார்கள். ஏதனால்? கட்டிலின்மேல் போடப்பட்டிருந்த துணியின் மென்மையாலும் பூவினாலும் தூங்கியே தீருவர் என்றால், உடல் களைத்த நம் புலவர் தூங்கினார் என்று சொல்ல வும் வேண்டுமோ. தம்மை மறந்து அயர்ந்து நன்றாகத் தூங்கினார்.

கட்டிலில் இருந்த முரசு எங்கே சென்றது? இரும்பொறை அரசனுக்கும் அடுத்தநாட் டரச னுக்கும் சண்டை உண்டாகியது. ஆதலினால், சேரன் அந்தப் பகைவன் மேல் படையெடுத்துப் போக வேண்டி இருந்தது. போர் செய்யச்செல் லும் முன்னர் முரசினை ஆற்றிற்குக் கொண்டு போவார்கள். அங்கே அதனை நீராட்டுவார்கள். பிறகு மயிலிறகால்' செய்யப்பட்ட மாலை, மலர் முதலியவற்றை அணிவார்கள்; வணங்குவார் கள்; ஊர்ந்த யானையின்மேல் ஏற்றுவார்கள். வள்ளுவன் என்பவனும் உடன் ஏறி இருப் பான், ஊர் நடுவில் யானையைக் கொண்டுபோய்

நிறுத்துவர்; வீரத்துடன் முரசினை அடிப்பர்; முரசொலியைக் கேட்ட வீரர்கள் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பெரிய சேனை ஆகி அணி வகுத்துப் படை எடுத்துச் செல்வார்கள். ஆகவே, முரசு வெளியில் கொண்டுபோகப் பட்டது. முரசு இல்லாமலிருந்த கட்டிலில் கீரனார் உறங்கினார்.

வெளியில் சென்றிருந்த மன்னன் அரண்மனைக்கு வந்தான். வழக்கம் போல் முரசு கட்டிலைப் பார்க்கச் சென்றான். அவன் கண்கள் என்ன கண்டன! யாரோ ஒரு நாடோடி கட்டிலின்மேல் தூங்குவதாக நினைத்தான். அவன் உடல் படபடத்தது; நெஞ்சு காய்ந்தது; நாக்கு வறண்டது; சினம் மேல் எழுந்தது; "கடவுள் வாழும் கோவில் எவ்வளவு சிறந்ததோ அவ்வளவு சிறந்ததன்றோ முரசு கட்டில்! இந்த உண்மை யாருக்குத் தெரியாது? என் அரண்மனையில் இப் பகற்காலத்தில் முரசு கட்டிலில் ஓர் ஆள் படுத்துறங்குவதா? அவ்வளவு இழிந்துபோய் விட்டதா என்னுடைய அரசியல்! இந்தக் கொடியவனைக் கொன்றால் தான் என் வெகுளி தணியும். என் முரசிற்குப் பகைவரைப் பலி ஆக்கவேண்டியவன் யான். ஆனால், இன்றைய தினம் முறை யறியா இவனை முரசு கட்டிலுக்குப் பலி ஆக்குவேன்," என்று கூறிக்கொண்டே வாளை ஓங்கிக்கொண்டு கட்டிலை நெருங்கினான்.

ஒரு விநாடிகாலமே உள்ளது; வாள்

புலவரைத் துண்டம் செய்திருக்கும். தாம் வெட்டுண்டதை அறியாமலே புலவரும் நீண்ட தூக்கமாகத் தூங்கியிருப்பர். வலக்கையை முகத்தின்மேல் வைத்துக்கொண்டு புலவர் உறங்கினர்; அதனால் முகத்தை அரசன் தொலைவி லிருந்தபோது காணவில்லை. அருகில் வந்தவன் முகத்தைக் கண்டான்; புலவர் என்றறிந்தான்; அவர் அயர்ந்து உறங்குவதையும் தெரிந்துகொண்டான். பெரிய கொடுஞ் செயல் செய்தவனைப் போலத் துள்ளினன்; கொலைத் தொழிலைச் செய்தவனைப் போல விழித்தான்; வாளைக் கீழ் விடுத்தான்.

"ஐயோ! என் உயிரைப் போன்ற புலவரைக் கொன்றிருப்பேனே! எனக்கு நல்லறிவு தந்த கடவுள் இவர் அல்லரோ! அரசியல் அறிவித்த ஐயரையா கொல்ல நினைந்தேன்! என்னே என் மதியின் இழிவு! நடந்துவந்த இளைப்பால் உறங்குகின்றார். கால் முழுவதும் பாதைப் புழுதி படிந்திருக்கின்றதே. ஏ! தமிழன்னையே! உன்னுடைய அருமையான மகன் ஒருவனைக் கொலை செய்ய நினைந்தேன்! தவறுதலால் நேர்ந்த தப்பு எண்ணம் இது! ஆதலின் தமிழ்த் தாயே, மன்னிக்கவேண்டும்,' என்று பலவற்றை முணுமுணுத்துக்கொண்டு கண்ணீரும் கம்பலையுமாய் நின்றான். துக்கக் கடலில் ஆழ்ந்தான்.

அரசன் 'செயலையேனும் எண்ணங்களையேனும் புலவர் அறிவாரா? ஒரு சிறிதும்

அறியார். தூங்கிய அவர் சிறிது அசைந்தார். "இவர் விழித்துக்கொண்டு யான் நிற்கும் நிலையைப் பார்த்தால் என்ன நினைப்பார்?" என்று அரசன் கருதினான். சுற்றும் முற்றும் பார்த்தான். அங்கே முரசிற்கு வீசும் கவரி வைக்கப்பட்டிருந்தது. அதனை எடுத்துத் தானே மெதுவாக வீசினான். புலவர் எதனையும் அறியாத தூக்கக் கடலில் ஆழ்ந்திருந்தார்.



அரசன் புலவர்க்குக் கவரி வீசுதல்

புலவர் கண் விழித்தார். ஆனால் கண் விழித்துப் பார்க்க முடியவில்லை. எங்கும் நோக்கினார். தாம் எங்கு இருக்கின்றோம் என்பதை உடனே அவரால் அறிய முடியவில்லை. மேலும் நினைத்துப்பார்த்தார். அரண்மனையில் இருப்பதை அறிந்தார். என்னே புதுமை. அரசன்

கவரி வீசுகின்ருன். இச் செயலைக்கண்ட புலவர் உடனே எழுந்து ஓடி, அரசன் கைகளைப் பிடித்துக்கொண்டார். கவரியை வாங்கி வைத்தார்.

"மலை நாட்டு மணியே! மணிமுடி தரித்த மன்னனே! வெற்றி நிறைந்த கொற்றவனே! என்ன காரியம் செய்தாய்? குற்றமற்ற வாரினல் கட்டப்பட்டது; கருமரத்தால் செய்யப்பட்ட அடிப்பாகத்தை உடையது: மயிற்பீலி மாலை, நீலமணி மாலை முதலிய மாலைகள் சூட்டப்பட்டது; குருதிப்பலியைக் கொள்வது; வீரம் நிறைந்தது; இவ்வாறு சிறந்த முரசம் நீராடுவதற்காக வெளியில் கொண்டுபோகப் பட்டிருக்கின்றது. அம்முரசம் வைக்கப்படும் இடத்தில் யான் என்னை அறியாமலே உறங்கினேன். இச் செயல் என் உடல் களைப்பாலும் அறியாமையாலும் நடந்தது. நீதி அறிந்த மன்னனே! நீவிர் என்ன செய்தல் வேண்டும்? முரசு கட்டிலின் தூய்மையைக் கெடுத்த என்னை இரண்டு கூறுகளாகத் துண்டித்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யவில்லை. நும்மைப் பற்றவேண்டிய சினத்தைக் கெடுத்தீர். அவ்வளவோடு நில்லாது என்னருகே வந்தீர். என்னைக் கொல்லுதற்காக வாளேந்த வேண்டிய கையில் கவரியை ஏந்தினீர். மேலும் எனக்குத் தூக்கம் வருதல் வேண்டும் என்று வீசினீர். ஆ! நும் செயலை என்னென்பேன்! இவ்வாறு நும்மைச் செய்யச் செய்தது எது! தமிழ், ஆம், தமிழே. நீவிர் தமிழ் வளத்தை அறிந்தீர். அறிந்து நின்ற

பெருமைக் குணமே என்னைக் கொல்லாது தடுத்தது. நீரே தமிழறிந்தவர். தமிழ் முழுதறிந்த தலைவரே! நும்முடை இக்குணம் என்றென்றும் வாழ்க! நும் வாழ்க்கை, வெற்றி சிறந்து விளங்குவதாக! நும் அறிவு தமிழின்பத்தைத் துய்த்து மேலும் மேலும் சிறப்பதாகுக," என்றார்.

வாய் நிறையும் வாழ்த்தால் புலவர் வாழ்த்தினர். மன்னன், "புலவரே! தங்கள் நட்பே எனக்குத் தமிழறிவைத் தந்தது. தமிழறிவே என்னுள்ளத்தைப் பண்படுத்தியது. தங்கள் வாழ்த்து என்னை மேலும் மேலும் தமிழன்னைக்குத் தொண்டு செய்பவனாக ஆக்கவேண்டும் என்று தமிழ்க் கடவுளை வணங்குகின்றேன்," என்றான். இருவரும் மகிழ்வுடன் அரண்மனையுள் புகுந்தனர்.

வாழ்க தமிழ்ப் புலவர்! வாழ்க தமிழ் முழுதறிந்தோன்!



## 2. உறுதியுள்ள மருதி

தமிழ் நாட்டின் மூன்று பிரிவுகளுள் ஒன்று சோழ நாடு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அதனைக் ககந்தன் என்னும் சோழன் அரசாண்டான். அவன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகரமாகக் கொண்டிருந்தான். காவிரிப்பூம்பட்டினம் துறைமுகமாகவும் விளங்கிற்று.

ககந்தன் ஒரு நல்ல அரசன். அவன் உயர்ந்த குணங்களை எல்லாம் பெற்றிருந்தான். குற்றங்கள் செய்யாமல் தன்னைக் காப்பாற்றிக் கொண்டான். குற்றங்களே ஒருவன் வாழ்வைப் பாழாக்கும் என்பது நம் பெரியோர் கண்ட உண்மை.

> குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
> அற்றம் தரூஉம் பகை.
>
> —திருக்குறள்.

குடிமக்களையும் எத்தகைய குற்றமும் செய்யாதிருக்குமாறு தடுத்தான். குற்றவாளி என்றறிந்தால் எப்படியும் தண்டித்தே தீருவான். குடிகளும் இவனிடத்தில் நன்மதிப்பு வைத்திருந்தனர். ஆதலினால் இவன் பெயரால் காவிரிப்பூம்பட்டினத்தையும் அழைக்கலானார்கள். பட்டினம் காகந்தி என்று அழைக்கப்பட்டது.

ககந்தனுக்கு இரண்டு ஆண்பிள்ளைகள் உண்டு. அறிவு நிறைந்த மக்கள் பிள்ளைகளைப்

பெறுகின்றனர்; அறிவு குறைந்த விலங்குக் கூட்டங்களும் தம் இனத்தைப் பெருக்கு கின்றன; பறவைக் கூட்டங்களும் மற்றவையும் அவ்வாறே செய்கின்றன. உலகத்தில் காணப் படும் எல்லா உயிரினங்களும் இத்தொழிலை அறிந்தோ அறியாமலோ செய்து வருகின்றன. இதில் சிறப்பு என்ன?

பெற்ருேர் அறிவுடன் இருத்தல் வேண் டும். அவர்கள் பெறும் சிறுவர் பேரறிஞர் களாக விளங்குதல் வேண்டும். இல்லையேல் இக் குழந்தைகள் தம்மைப்பெற்ருேருக்கு இழிவைத் தேடி வைப்பார்கள். "ஐயோ! இந்தப் பிள்ளையை எந்தக் கொடியன் பெற்ருனே? இவ் வளவு கொடுமைகளை இது செய்கின்றதே," என்று ஊரார் இழிகுண மக்களைப் பேசுவதைப் பார்க்கின்ருேம். ஊரார், ஊர் நடுவில் நின்று குலம் முதலியவற்றைப் பற்றிக் குறைசொல்லா மல் இருக்கவேண்டும் என்ருல் அறிவுடைய பிள்ளைகளைப் பெறுதல் வேண்டும். அல்லது பிள்ளைகளைப் பெருமல் இருத்தல் நல்லது. கெட்ட பிள்ளைகளைப் பெறும் பெற்ருேர் தம் குலத்திற்குப் பழியையும் இழிவையும் பெற்று வைத்துக்கொண்டோ ராவர்.

நன் மக்களைப் பெற்ற பெற்ருேர் உலகத் தோரால் நன்கு மதிக்கப்படுகின்ருர்கள். அவர் களுக்குப் புகழ் சேர்கின்றது. ஏழேழு பிறப்புக் களிலும் அவர்களைத் தீமை தீண்டாது.

*எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்*
*பண்புடை மக்கள் பெறின்.*

என்றனர் திருவள்ளுவர். "பிறரால் பழிக்கப் படும் தீச் செயல்களைச் செய்யாதவரும், நல்ல குணங்களையும் நல்ல செயல்களையும் உடைய வரும் ஆகிய மக்களைப் பெற்ற பெற்றோரை எழு பிறப்புக்களிலும் தீயவை தீண்டமாட்டா," என்பது இக் குறளின் கருத்து.

ககந்தன் நல்ல குணமுடையவன். ஆனால் அவன் பெற்ற பிள்ளைகள் தீய குணத்தின் உருவங்களாக இருந்தனர். ஒருவரேனும் அறிவுடையவராக இல்லை. அவர்கள் கண்ட கண்ட இடங்களில் திரிந்தார்கள். அவர்கள் கல்வியைக் கனவிலும் எண்ணியதில்லை. சுட்டுப் போட்டாலும் ஓர் எழுத்தும் அவர்களுக்கு வராது என்று ஆசிரியர்கள் கைவிட்டார்கள். இழிந்த மக்கள், திருடர், பொய் பேசுவோர், பிறர் மனைவியை விரும்புவோர், கொடியர், இப்படிப்பட்டவர்கள் இவர்களுக்கு நண்பர்கள் ஆயினார்கள். ஒருவகைக் கட்டுப்பாடும் இல்லாமல் அவிழ்த்துவிட்ட காளைகளைப்போல் திரிந்தார்கள்.

அவ்வூரில் மருதிஎன்றொருத்தி இருந்தாள்; அவள் அழகிற் சிறந்தவள்; அந்தணர் குலத்தில் பிறந்தவள்; திருமணம் ஆகப்பெற்றவள்.

அவள் நாள்தோறும் காவிரி ஆற்றுக்குச் சென்று நீராடி வருவாள். செல்லும்போது பல பெண்கள் ஒன்று கூடிச் செல்வார்கள்.

ஒரு நாள் காலை வேலைகளை முடித்துக்கொண்டு ஆற்றுக்குப் புறப்படக் காலமாயிற்று. ஆதலின் தனியாகச் சென்று நீராடித் தனியாக வந்து கொண்டிருந்தாள்.

ககந்தன் பிள்ளைகள் இருவருள் ஒருவன் காவிரிக் கரையோரமாக நின்று கொண்டிருந்தான். அவன் தனித்து வந்த மருதியைக் கண்டான். அவள் அழகில் ஈடுபட்டான். அவள் தனியே வந்ததாலேயே அவள் கற்பில்லாதவள் என்று நினைத்தான். அவள் அழகில் ஈடுபட்டான்; தன்னுடைய அறிவை இழந்தான்; தொலைவில் இருந்த அவன் நெருங்கி வந்தான்.

அருகில் வரவர அவனுடையஉள்ளத்தில் காமத் தீ குடிகொண்டது. அவளைப் பார்க்கப் பார்க்க அத் தீ கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது; எப்படியேனும் அவளைத் தன்னுடைய மனைவியாக ஆக்கிக் கொள்ளவேண்டும் என்ற தீய எண்ணம் அவனை மூடியது. ஆதலின் நெஞ்சில் அச்சம் இல்லாமல் அவளை மேலும் நெருங்கினான். அவனுக்குத் தெரிந்த பல இழிந்த சொற்களை இன்பமாகக் கூறினான்; அவள் ஒன்றும் பதில் சொல்லாது நடந்தாள்.

மருதி கற்புடையவள்; கணவனை அன்றிப் பிற ஆண்களைக் கண்ணெடுத்துப் பார்க்காதவள். வீதியில் நடந்து செல்லும்போது குனிந்த வண்ணமே செல்லுவாள். ககந்தன் மகன் அவளிடத்தில் பல சொல்லியும் அவை அவள் காதில் விழவில்லை. ஏன்? வீட்டிற்குப்

போகவேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் அவள் சென்று கொண்டிருந்தாள். ஆதலின் அத் தீய சொற்கள் அவள் காதில் விழவில்லை.

இளவரசனுக்கு மேலும் உள்ளத்தில் பலம் உண்டாயிற்று. 'நான் நினைத்தது சரி. இவள் நல்ல நடக்கை இல்லாதவள். ஆதலால் தான் நான் சொல்லிய சொற்களை எல்லாம் கேட்டுக்கொண்டாள். என்னோடு பேசுதற்கு வெட்கப்படுகின்றாள் போலிருக்கிறது. ஆதலால் தான் வாய்மூடிச் செல்கின்றாள். இவள் நேரில் சென்று இனிப் பேசுவோம்!' என்று நினைத்தான். அவள் முன்வந்து நின்றான். கைகளை ஆசையோடு நீட்டினான். "கண்மணியே! எங்குப் போகின்றாய்? என்னுயிர்க்கு நீயே துணைவி. வருக, நாம் கூடி வாழ்வோம்." என்று பல இழிந்த சொற்களைப் பேசினான்.

இளவரசன் தன் நேரில் நின்று கை நீட்டிப் பேசியவற்றை மருதி கேட்டாள். முகம் சிவந்தது. கண்கள் நெருப்பை வெளிவிட்டன. உள்ளத்தில் அச்சம் தோன்றியது. "என்ன கொடுமை! என்ன கொடுமை!" என்று துன்பப்பட்டது அவள் உள்ளம். உடல் பதறிற்று. 'என்ன நேருமோ!' என்று நடுங்கினாள். தன் முன்னே நிற்கும் அந்தப் பாழ் மகன் 'தன்னைத் தொட்டுவிட்டால்!' என்று நினைக்கவும் உடலெல்லாம் வேர்த்தது. மெது வாக நடந்து செல்லலாகாது என்று நினைத்து

ஓடத் தொடங்கினாள். அரசன் மகனும் தொடர்ந்தோடினான்.



இளவரசன் கற்புடை மருதியைத் தொடர்தல்

காவிரிப்பூம் பட்டினத்தில் பூத சதுக்கக் கோயில் என்று ஒரு கோயில் உண்டு. அக் கோயிலில் சதுக்கப் பூதம் வாழ்ந்துவந்தது. அதன் கைகளில் பாசக் கயிறு இருந்தது. தவறு

செய்வோரை அப்பூதம் பிடித்துக்கொள்ளும். பிறகு அவர்களைக் கொன்று விடும். அந்தக் கோயிலை மருதி கண்டாள். விரைவாக அத்னுள் புகுந்தாள்.

ககந்தன் மகன் அக் கோயிலினுள் செல்லாது வெளியில் நின்றான். ஏன்? அவன் செய்தது தவறு. தவறுடையோரை அப்பூதம் கொன்றுவிடும். ஆதலின் அவன் உள் நுழைந்தால் அவனுக்குப் பெருந்துன்பமாகிய உயிரை இழத்தல் உறுதியாக நேரும். ஆகவே வேறு வழியில்லாமல் திரும்பினான்.

தலைமயிர் அவிழ்ந்து தோளின்மேல் கிடக்கின்றது; பெருமூச்சு வருகின்றது; உடல் ஆடிக்கின்றது; கண்கள் பரபரப்புடன் நோக்குகின்றன; கால்கள் தள்ளாடுகின்றன; நெஞ்சு படபட என்று அடித்துக் கொள்கின்றது. இந்தக் கோலத்துடன் மருதி சதுக்கப் பூதத்தின் முன்னே நின்றாள். பேசத்தொடங்கினாள்.

"சதுக்கப் பூதக் கடவுளே! நல்லோருக்கு உறவே! தீயோருக்குப் பெரு நெருப்பே! யான் கற்புடையவள் அல்லளா? எனக்குக் கற்பில்லையா? அந்தக் கொடியவன் என்முன்னே வந்துநின்று இழிந்த சொற்களைச் சொன்னானே! ஐயோ! என்னைத் தனக்கு மனைவியாக இருக்கும்படி அன்றோ சொன்னான்! ஆ! என்ன கொடுமை! எவ்வளவு கொடிய சொற்கள்! அச் சொற்கள் தங்கள் திருச்செவியில் விழவில்லையா? அதோ உயிருடன் செல்

கின்ருனே! அவன் என் உயிருடன் வாழ்கின்ருன்! கற்பு நிறைந்த என்னைக் குறைவு படுத்திய அவனைக் கொல்வது தங்களுடைய கடமை அல்லவா? இதைத் தவிரத் தங்களுக்கு வேறு என்ன வேலை இருக்கின்றது? ஏன் பேசாமல் இருக்கின்றீர்? அவன் எப்படி என்னை நினைக்கலாம்? என்னுயிர்க்கணவன் நெஞ்சில் அல்லவோ நான் குடி இருக்கவேண்டும்? இக் கடையன் தன்நெஞ்சில் என் உருவத்தை எவ்வாறு கொள்ளலாம்? ஐயோ! இஃது நெறியோ! இது முறையோ! இது அறமோ! இதுவோ கடவுளாகிய தங்கள் செயல்! நான் கற்பில்லாதவளா? அல்லது தாங்கள் இல்லா தொழிந்தீரோ?'' என்று கூறி அழுது அரற்றிக் கீழே விழுந்தாள்.

அவள் முன் சதுக்கக் கடவுள் தோன்றினர். "மருதி! மன மாசு அற்றவளே! அழாதே. நீ அந்தணர் குலத்தில் பிறந்தவள்! கற்புடையவள்! ஆயினும் சில தவறுகளைச் செய்திருக்கின்ருய். அத்தவறுதல்கள் உன் கற்பின் வன்மையைக் குலைத்துவிட்டன.''

"நம் தமிழில் மிகச் சிறந்த நூல் திருக்குறள் என்பது. அதனை இதுவரை படிக்காமலிருந்தாய். இனியேனும் படிப்பாயாக. அதன் கண்,

'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'

என்பது, பெண்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதைத் தெரிவிக்கின்றது. இந்தச் சிறந்த பொருளுரையை நீ இகழ்ந்தாய். இதன் வழி நீ நடக்கவில்லை. எப்படி? தம் கணவனின் மிக்க தெய்வம் கற்புடைய பெண்களுக்கு வேறு இல்லை. அவனே அவர்கள் வணங்க வேண்டிய கடவுள்; அவனே கட்டளை இட்டால் அல்லாமல் வேறு கடவுளை வணங்கவும் கூடாது; வாழ்த்தவும் கூடாது; நீ தவறினாய்."

"உன் கணவனை வணங்கினாய்; மேலும் வேறு கடவுளையும் வணங்கினாய். அப்படிச் செய்தற்கு உன் கணவன் விருப்பத்தையும் நீ பெறவில்லை. பிற கடவுளரைப்பற்றிக் கூறும் பொய்க் கதைகள் பலவற்றை இன்பத்துடன் கேட்டாய்; அவற்றையே மகிழ்ச்சியோடு படித்தாய்; மேலும் அளவிற்குப் பொருந்தாத விடுகதைகளில் உள்ளத்தை வைத்தாய். அவ்வளவோ! அந்தக் கடவுளரை ஒப்பனை செய்து வீதியிலே கொண்டுவந்து விழாக் கொண்டாடுகிறார்களே; அவ்விழாவிலும் கேளிக்கைக் கூத்துக்களிலும் மனம்கலந்து உடன் கலந்தாய்; இவற்றோடு எல்லாம் நீசேர்ந்தாய்; உன்னுடைய உண்மைக் கற்பை இழந்தாய்.

"உண்மைக் கற்பு என்பது எது? கற்பின் சுடும் தன்மையே அதுவாகும். உனக்குக் கற்பு இருக்கின்றது; அக் கற்புக்குச் சுடும்தன்மை ஒழிந்தது. சுடும் தன்மை இருந்தால் ககந்தன் மகன் உன்னைக் கண்கொண்டு பார்த்திருக்கமாட்

டான்; நெஞ்சால் நினைத்திருக்கமாட்டான்; வாயால் சிலவற்றைப் பேசி இருக்கமாட்டான்; உன்னைக் கண்ட கண்கள் வெந்திருக்கும்; நினைத்த நெஞ்சம் நெருப்பாயிருக்கும்; பேசிய வாய் புகைந்திருக்கும்.

"மழை நின் ஏவலை ஏற்றுக்கொள்ளாது; காரணம், நின்கற்பு சுடும் தன்மையை இழந்தமையாலேயே. இனிக் கற்பு நெறியில் ஒழுங்காக இரு; இழந்த வன்மையை மீட்டுக்கொள்; இன்று தொடங்கி ஏழு நாட்களுக்குள் அரசன் உன்னைத் தவறாகப் பேசியோனைத் தண்டிக்க வேண்டும். அவன் தவறினாலும் நான் தவற மாட்டேன். நான் கொன்றொழிப்பேன்; வருத்தமில்லாது வீட்டிற்குச்செல்," என்று கூறிற்று.

ககந்தன் கண்போன்ற ஒற்றர்களை வைத்திருந்தான். அவர்கள் எங்கு எதுநடந்தாலும் அவற்றை உடனே அரசனுக்கு அறிவிப்பார்கள். இளவரசன் நடக்கையை அவர்கள் வழியே அரசன் அறிந்தான்.

அரசன் உள்ளம் வெயிலில் இட்ட புழுவைப்போல் துடித்தது. உடனே அவனைக் கொல்லுமாறு கட்டளை இட்டான். 'அவன் காவலாளருக்கு அகப்படாமல் ஓடிவிடுவான்; அல்லது அவர்களை மயக்கித் தப்பித்துக்கொள்வான். யானே இவனுக்குத் தண்டனையைத் தருவேன்,' என்றுரைத்துத் தன் கைவாளினால் கொன்று வீழ்த்தினன் ககந்தன்.

"அடாது செய்வோர் படாது படுவர்"

## 3. பட்டினத்துப் பெண்

மருதி என்பவள் சோழநாட்டுக் காவிரிப் பூம் பட்டினத்தில் வாழ்ந்தாள் என்று முன்னே படித்தீர்கள் அன்ருே! அந்தக் காவிரிப்பூம் பட்டினத்திற்கு வேறு பல பெயர்களும் உண்டு. அவற்றில் புகார் என்பது ஒன்று. பகைவர்கள் அந்த நகரத்தினுள்ளே புகமாட்டார்கள் என்பது அப்பெயரின் பொருள்.

துறைமுகப் பட்டினமாக அஃது இருந் தமையால் வாணிபம் செய்வோர் பலர் அங்கு வாழ்ந்தார்கள். அவர்கள் செல்வம் சிறந்திருந் தார்கள். அவர்கள் வீட்டில் பொன்னும் மணி யும் நிறைந்து கிடந்தன. நெல், கேழ்வரகு, எள்ளு முதலிய தானிய வகைகள் குவியல் குவியலாகக் கிடந்தன. அவர்கள் வீட்டுத் தோட்டத்தில் பசுக்கள், ஆடுகள், எருமைகள் முதலியவை கூட்டங் கூட்டமாக இருந்தன.

வாணிகர்களின் தலைவனுக ஒருவன் இருந் தான். அவன் செல்வத்தில் குபேரனைப்போல் இருந்தான். அரசனும் ஒவ்வொரு காலத்தில் இவனிடம் பணம் கடன்வாங்குவதுண்டு. இவ னுக்கு ஒரு மகள் இருந்தாள். அவள் பெயர் விசாகை.

விசாகை அழகில் திருமகளைவிடச் சிறந் திருந்தாள்; அறிவில் கலைமகளை வென்ருள். மயில்போன்ற சாயலைப் பெற்றிருந்தாள்;

அவள் பேச்சு குயிலின் குரல்போல் இனிமை யாக இருக்கும். அவள் நடப்பதை அன்னங்கள் கண்டால் நாணமடையும்.

வாணிகர் தலைவனுடன் பிறந்தவள் ஒருத்தி உண்டு. அவள் விசாகைக்கு அத்தை என்னும் முறையினை உடையவள். அவளுக்கு ஓர் ஆண் மகன் இருந்தான். அவன் அறம் செய்வதிலேயே கருத்தைச் செலுத்தினான். அவனைத் தருமதத்தன் என்று அழைத்தார்கள்.

தருமதத்தன் மதியினை ஒத்த முகமுடையன்; சிறந்த கல்வி அறிவினை உடையவன்; ஒழுங்காக வாணிபமுறையினையும் அறிந்திருந்தான். நல்ல குணங்கள் எல்லாம் இவனிடம் அடைக்கலம் புகுந்திருந்தன. மிகச் சிறியவனாக இவன் இருந்தாலும் பட்டினத்திலுள்ளோர் யாவரும் இவனை அறிந்திருந்தார்கள். தத்தன் என்று யாரேனும் சொன்னால், 'ஓ! அவனா! அவன் நல்லவனாயிற்றே! அவனைப் பெற்றெடுக்க அவன் பெற்றோர்கள் என்ன தவம் செய்தார்களோ!' என்று வாயூறச் சொல்லுவார்கள். தம் கெட்ட குணமுடைய பிள்ளைகளைத் திருத்துதற்குப் பெற்றோர்கள், தத்தனை எடுத்துக்காட்டாகச் சொல்லுவார்கள். தத்தன் யாவராலும் புகழப்பட்டான்.

தத்தனும் விசாகையும் அம்மான் மகளும் அத்தைமகனும் ஆவர்; இருவரும் மைத்துன முறையினர். இருவரும் ஒரே வீட்டில் வளர்ந்த

னர். செந்தமிழ் மொழியில் அழுந்திய உள்ளம் விசாகைக்கு உண்டு. ஆகவே அவள் நல்ல நூல்களை எப்பொழுதும் படித்துக்கொண்டிருப் பாள். படிக்கும் காலத்தில் சில இடங்கள் விளங் காமல் இருக்கும். அந்தப் பகுதிகளைத் தத்த னைக் கேட்டுத் தெரிந்து கொள்வாள்.

தத்தனும் கலையில் கருத்துடையவன். அவன் நயமாகக் கருதும் பகுதியை அவளுக் கும் படித்துக்காட்டி மகிழ்வான். அவளும் மிகுதியும் மகிழ்வாள். "தெருந்தோறும் இனி தாம் தமிழ்" என்றார்களே! அஃது எவ்வளவு பொருத்தமாக இருக்கின்றது. அன்பரே! நீர்த் துறையில் மூழ்கியவர்களின் உடல் சிறிது நேரம் தூய்மையாக இருக்கும்; அதுவரை அவர்க ளும் மகிழ்ந்திருப்பார்கள். ஆனால் தமிழ்த் துறையில் மூழ்க மூழ்க நம் அறிவு தூய்மையா கின்றது; அறிவு தூய்மையாக ஆக மகிழ்ச்சி யும் மிகுகின்றது. இம் மகிழ்ச்சி நிலைத்துப் பேரின்பத்தை உண்டாக்குகின்றது. தமிழே இனிமை; ஆ! தமிழ்ச் சொற்களோ மிக மிக இனிமையாக இருக்கின்றன; அவற்றின் பொருள்களோ, ஆகா! எவ்வளவு பெரு மகிழ்வை உண்டாக்குகின்றன; நம் வாழ்நாள் வரை இத் தமிழ்மொழிக்கே முழு அடிமைக ளாகி இன்பத்தைத் துய்க்கவேண்டும்," என்று உடல் பூரித்துச் சொல்வாள். அவள் சொல் லாகிய தேனில் தத்தனாகிய ஈ தன் உடலையும் மறந்து கிடக்கும்.

தங்களுக்குக் கிடைத்த ஓய்வு நேரத்தை வீணாக்காது பேசி மகிழ்ந்தார்கள். இருவரும் அறிவால்வரும் இன்பத்தை ஒரே வகையாகத் துய்த்தார்கள். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்பது அறிஞர் வாக்கு. அறிவுடைய இரு வரும் ஒருவரை ஒருவர் உயிர் போல் கருதினர். மாலையில் கிழக்கே மதியும் மேற்கே ஞாயிறும் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்குமோ அவ்வளவு நன்றாக இருந்தனர் இருவரும். மாடு ஒன்று; அதற்குக் கொம்பு இரண்டு; அவ் வாறே உடலால் இரண்டாகவும் உயிரால் ஒன்றாகவும் வாழ்ந்தனர்.

குற்றம் செய்தல் மக்களுக்கு இயற்கையாகிய குணம். இருவர் உள்ளம் ஒத்துவாழ்வதையே சில பொறாமைக்காரர் காணமாட்டார். அப்படிப்பட்ட மக்கள் எங்கும் காணப்படுவார்கள். பட்டினத்திலும் இவ்வகை மக்கள் சிலர் நம்பியாகிய தத்தனும் நங்கையாகிய விசாகையும் அன்பில் கட்டுண்டிருந்ததைத் தவறாக நினைத்தனர் ஆதலின், பல இழி சொற்களைக் கூறினர். நம்பியும் நங்கையும் களவில் மணந்து கொண்டனர் என்று வாய்ப்பறை அடித்தனர். இச்சொற்கள் காட்டுத்தீயைப் போல் எங்கும் பரவிற்று. ஊர் வாயை மூட யாரால் முடியும்?

நங்கையும் இச்சொற்களைக் கேட்டாள். வீணர்களின் அறியாத தன்மையை எண்ணி வருந்தினாள். இந்தச் சொற்கள் கூர்மையான அம்புகளைப்போல் அவள் உள்ளத்தில் தைத்

துப் பெரும் புண்ணை உண்டாக்கின. ஒருவர் ஒரு வீட்டின் நடுவில் இருக்கிறார். அப்போது அவ்வீடு நான்கு பக்கங்களிலும் நெருப்புப் பிடித்துக் கொண்டால் நடுவில் இருப்போர் கதி என்ன? ஓடிப்பிழைக்கவும் முடியாமல் சூட்டி ஞல் வாடிப் புகையால் நைந்து துன்புறுவார் கள் அன்ருே? விசாகையும் பழிச்சொற்களாகிய தீயினல் வாடி வருந்தினள். உண்மையை மக்க ளுக்கு அறிவிக்க ஆசைகொண்டாள். என்ன செய்தாள்..

வீட்டைவிட்டு வெளியில் வந்தாள்; உலக அறவியைச் சார்ந்தாள். உலக அறவி என்பது ஊரம்பலம். இங்குப் பலரும் வந்து தங்குவார் கள். இந்தக் காலத்தில் மக்கள் தங்குவதற்கு என்று கட்டப்படும் அறச்சாலையைப் (தரும சத் திரம்) போன்றது.

உலக அறவியில் ஒரு தூண் இருந்தது. அத்தூணில் ஒரு பாவை செதுக்கப்பட்டிருந் தது. அதற்குக் கந்திற் பாவை என்று பெயர். இப்பாவையை மக்கள் வணங்குவர். தன்னைக் கேட்போருக்கு இவ்வுருவம் மூன்று காலச் செய்தியையும் தெரிவிக்கும். ஆதலினல் இது நாவுடைப் பாவை என்று போற்றப்பட்டது.

விசாகை இப்பாவையின் அருகே வந்தாள். "அரிய பாவையே!" இவ்வூர் வீணர்சிலர் என்னைப் பழித்துப் பேசுகின்றனர். என்கற்பில் ஐயம் கொள்ளுகின்றனர். நீயே உண்மையை

எடுத்துரைக்க வேண்டும்,'' என்று வேண்டி நின்றாள்.

கேட்டது பாவை. ''நகரத்து வாழ்கின்றவர்களே! இவள் கற்புடையாள்; இவள் கற்பிற்குக் கட்டுப்பட்டது மழை. ஐந்து பூதங்களும் கட்டுப்பட்டன; கடவுள் கற்புடையாள் இவள்; அலர் மொழியைத் தூற்றாதீர்,'' என்றுரைத்தது.

பட்டினத்தில் வாழ்வோர் எல்லோரும் பாவை சொன்னவற்றைக் கேட்டனர்; தாம் கொண்டிருந்த ஐயத்தைப் போக்கினர். ''விசாகை நம் பட்டினத்துப் பெண்; இவள் பிறந்தமையாலேயே நம் பட்டினம் பெருமை பெற்றது; இனி இந்த வகையான பழிச் சொற்களைச் சொல்லக்கூடாது. விசாகை நீடூழி வாழ்க! தருமதத்தன் பல ஊழி வாழ்க,'' என்று கூறினார்கள்.

விசாகை தன் வீட்டிற்கு வந்தாள்; தாயினை வணங்கினாள். எழுந்து அடக்கத்தோடு நின்று ''அம்மா! இந்த ஊரார் என்னைப் பழித்தார்கள். கந்திற் பாவை என் கற்பை எடுத்துக்கூறியது; அவர்கள் வாயடங்கி விட்டார்கள். தூய்மையாகிய உள்ளத்தில் மைத்துனர் அவர்களையே வைத்து வணங்குகின்றேன். அவரைத் தவிர வேறு எவரையும் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். இவ்வளவு பழிச்சொல் மூட்டைகளைச் சுமந்த பின்பு மணம் செய்து கொள்ள எனக்கு விருப்பம் இல்லை. உண்மைக்காதல் பல

பிறப்புக்களையும் தொடர்ந்து வருகிறது என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். யான் உறுதியும் உண்மையும் கூடிய காதலுடையவளே. ஆதலால் அடுத்த பிறப்பில் யான் மைத்துனரை மணந்து கொள்வேன். இனி மணமில்லாமலே காலத்தைக் கழிக்க ஆசைப் படுகின்றேன்; எனக்கு ஒரு கன்னிமாடம் கட்டித்தருதல்வேண்டும்; அதிலிருந்துகொண்டு ஐந்து பொறிகளையும் அடக்கிக் கடவுளை வணங்கித் தமிழ்மொழியைப் பயின்று என் காலத்தைக் கழிப்பேன்; அன்போடு என் எண்ணத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும்,'' என்று சொல்லி மறுமுறையும் வணங்கினாள்.

''நூலைப் போல சேலை தாயைப் போல பெண்'' என்பது பழமொழி. அழகிலும் அறிவிலும் கற்பிலும் சிறந்த விசாகையைப் பெற்றதாய் எவ்வாறிருப்பாள்? அவளும் அறிவில் மிகுந்து விளங்கியிருப்பாளன்றோ? மகள் சொன்னவை எல்லாம் ஒழுங்கானவை என்று நினைத்தாள். தன் கணவனிடத்தில் மகளின் விருப்பத்தைச் சொல்லிக் கன்னிமாடம் கட்டித் தருமாறு தூண்டினாள். கன்னிமாடத்தில் நம் பட்டினத்துப் பெண் குடிபுகுந்தாள்.

தத்தன் நடந்தவற்றை அறிந்தான். அரிய மாணிக்க மணியை இழந்த நாகம்போல் அலறினான். கன்னிமாடத்துள் ஆண்கள் செல்லலாகாது. ஆகவே தத்தனும் அங்கே போக முடியாது. தன் கண்மணியை ஒத்த கன்னியைக்

காணுது காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ அவன் விரும்பவில்லை. அவ்வூரிலிருந்தால் அவன் உள்ளம் உடைந்துவிடும் போன்றிருந்தது. விசாகையைப்பற்றிய நினைவுகள் அடிக்கடி அவனைத் துன்புறுத்துவன ஆயின. ஆதலின் பட்டினத்தை விட்டுப் போவதற்கு முற்பட்டான்.

தன் மாமன் மாமியாராகிய விசாகையின் தந்தை தாயாரை வணங்கினுன்; மற்ற உறவினர்களுக்கும் சொல்லிக்கொண்டான்; ஒரு நல்ல நாளிலே பட்டினத்தை விட்டுப் புறப்பட்டான்; தென் மதுரையை அடைந்தான்; அவ்வூரில் வாணிபம் நன்ருக நடப்பதைக் கண்டான். அவன் வாணிபம் செய்யும் ஆற்றலுடையவன் அல்லவா? பொழுதுபோக்காக அத்தொழிலை மேற்கொண்டான். வாணிபத் துறையில் நுட்பமான மதியுடையவன் அவன். ஆதலின் மளமள என்று பொருள் சேர்ந்தது. ஒன்று நூருயிற்று; நூறு ஆயிரம் ஆயிற்று; இவ்வாறு கோடிக்கணக்காகப் பொருள் சேர்ந்தது.

தருமதத்தன் கல்விச் செல்வத்தில் பொலிந்தவன்; இப்போதோ பொருட் செல்வமும் குவிந்தது. சிலர் பொருளைப் பெற்றவுடன் இருள் நிறைந்த அறையில் பைகளில் நிரப்பி வைப்பார்கள். நாள்தோறும் அந்த அறையினுள் சென்று அவற்றை எண்ணி மகிழ்வார்கள். எண்ணிமுடிந்தவுடன், 'ஐயோ!

எண்ணுவதற்கு மேலும் பணம் இல்லையே. ஏ! கடவுளே! எனக்குப் பணம் வேண்டும்,' என்று நைந்து கடவுளை வணங்குவார்கள். இதுவோ பணத்தைப் பயன்படுத்தும் வழி!

தத்தன் அவ்வாறு செய்யவில்லை. பணத்தை என்ன செய்தல் வேண்டும்? என்று கருதினான். "செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே" என நக்கீரர் என்ற பெரும் புலவர் சொன்னார். செல்வம் படைத்தவர் இருவகைச் செயல்களை மேற்கொள்ள வேண்டும். அவை, பிறர்க்குக் கொடுத்தல், தானும் பயன்படுத்திக் கொள்ளுதல், என்பவையாம். 'ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது, ஊதியம் இல்லை உயிர்க்கு' என்றனர் வள்ளுவர். 'பிறர்க்குக் கொடுத்தல்வேண்டும்; நாமும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்,' என்பது அதன் கருத்து. செல்வமுடையான் இந்த இருவகைச் செயல்களையும் மேற்கொள்ளாமல் போனால் அவன் செல்வத்தின் பயனைப் பெறாதவன் ஆகின்றான். ஆகவே, வறுமையாளனாக அவன் எண்ணப்பட வேண்டியவனே.

தத்தன் அறம் செய்தலை மேற்கொண்டான். 'இரவலர் தமரினும் இனியர்' என்றார் மற்றொருவர். பிச்சைக்காரர் நமக்கு உறவினரைவிட இனிமையுடையவர்களாய் இருக்கின்றனர். 'இல்லை' என்று வந்து கேட்டவர்களுக்கு, 'உண்டு, இதோ எடுத்துப் போ' என்று மகிழ்வுடன் தத்தன் கொடுத்தான்.

மேலும் பல அறச் செயல்களை மேற்கொண்டான். 'எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும்'. எண்ணும் எழுத்தும் என்று சொல்லப்படுபவை கல்வியில் அடங்கும். கல்வியே மக்களுக்கு உணர்ச்சி தருவது. கற்றற்குப் பொருள் தேவை. செல்வமுடையவரே கற்கலாம். ஏழைகள் என்ன செய்யலாம்? அவர்களிடத்தில் பொருளில்லாக் குறையால் வாழ்நாள் முழுவதும் கல்வி என்ற அரிய பொருளைப் பெருது ஒழிதல் நன்று ஆகாது, என்று தத்தன் கருதினான். தமிழகத்தில் கல்வி எல்லாருக்கும் வேண்டும். கல்லாதவரே இருத்தல் ஆகாது என்று நினைத்தான். ஆகவே, இலவசக் கல்விச் சாலைகளை நிறுவினான். ஏழைகளுக்கு எத்தகைய செலவும் இன்றிப் படிப்புச் சொல்லிக் கொடுக்கப்பட்டது. உணவும் உடையும் சுவடிகளும் அவர்களுக்கு உதவப்பட்டன. தென்மதுரைமக்கள் மட்டும் அன்றி வெளியூர்களிலிருந்தும் பலர் வந்து படித்தனர்.

தத்தன் வாழ்ந்த நாளில் மக்கள் சாலைகள் வழியே ஓரிடமிருந்து மற்றோரிடத்திற்கு நடந்தே செல்லவேண்டி இருந்தது. சாலைகளில் நடப்போருக்குப் பல நன்மைகளைச் செய்யவேண்டும் என்று நம்பி கருதினான். ஐந்துகல் தொலைவுக்கு ஓர் அறச்சாலை கட்டினான்; அடுத்துச் சோலைகளை உண்டாக்கினான்; வழி நெடுகக் கிணறுகளைத் தோண்டி வைத்தான். அறச் சாலையில் வழிப்போவா

ருக்கு உணவு தரப்பட்டது. சோலைகளிலிருந்த இனிய பழ மரங்கள் அவர்களுக்கு நல்ல பழங்களை உதவின. நீர் வறட்சியைக் கிணறுகள் போக்கின. இவ்வாறு தத்தன் செய்த அறச் செயல்கள் கணக்கில் அடங்கா.

தத்தனின் புகழ் எங்கும் பரவிற்று. அரசன் இவனைப் பார்க்கவேண்டும் என்று ஆசைப் பட்டான்; தன் அவைக்கு அழைத்தான்.

இந்தக் காலத்தில் நம் அரசினர் பொதுத் தொண்டு செய்வோருக்குத் தங்கப் பதக்கம் முதலியவற்றைத் தருகின்றார்கள். அன்றியும் பட்டங்களையும் கொடுக்கின்றார்கள். நம் நாட்டில் பழங்காலத்திலும் இந்த வகையான பழக்கங்கள் உண்டு. வாணிக மரபில் நல்ல அறங்களைச் செய்வோருக்கு எட்டி என்ற பட்டத்தைக் கொடுப்பார்கள். அதற்கடையாளமாகப் பொற்பூ ஒன்று தருவார்கள். அப்பூவிற்கே எட்டிப்பூ என்ற பெயரும் உண்டு. நம் தத்தனுக்கு மன்னன் எட்டிப் பூவினை வழங்கினான். தன் அவையில் வீற்றிருக்கும் உரிமையினையும் கொடுத்தான். அன்று முதல் தருமதத்தன், எட்டி தருமதத்தனானான். 'அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்' அன்றோ?

ஆண்டுகள் பல கடந்தன. தத்தனுக்கு வயது அறுபது முடிந்தது. அவன் ஏன் காவிரிப்பூம் பட்டினத்தை விட்டுவந்தான்? தன் மாமன் மகள் விசாகை கன்னிமாடத்திற்குச் சென்றமையால் வந்தான் என்று முன்னே

சொன்னேன். வரும்போது இவன் சிலவற்றைச் சொல்லிவிட்டு வந்தான். என்ன சொல்லி இருப்பான்? எண்ணிச் சொல்லுங்கள். சொல்லு கின்றேன். 'என் உயிரை ஒத்தவள் விசாகை; அவள் ஊர்வாயை அடக்க இந்தப் பிறப்பில் என்னை மணக்கமாட்டேன் என்ருள் : அடுத்த பிறப்பில் கூடி வாழ இறைவனை வேண்டு கின்ருள். அப்படி ஆனல் யான் மட்டும் மணம் செய்து கொள்ளலாமா? தகாது. யானும் இப் பிறப்பில் யாரையும் மணம் செய்து கொள் ளேன்; அடுத்த பிறப்பில் என் அருமருந்து அன்ன மாமன் மகளையே மணப்பேன்,' என்று உறுதி கூறிவிட்டு வந்தான். இருவர் உள்ளங் களும் எவ்வாறிருக்கின்றன என்பதைப் பாருங்கள்.

ஒருநாள் தத்தன் தன் மாளிகையில் இருந் தான். அப்போது அங்கு ஒருவன் வந்தான். அவன் ஓர் அறவோன். எவரேனும் தீமை செய்வதாக அறிந்தால் அவருடைய வீட்டிற்குச் செல்வான். 'இன்ன செய்கை கெட்டது; அதனை நீக்கிவிடுங்கள்,' என்று சொல்லுவான். அப்படிப்பட்ட அவன் தத்தனிடத்தில்,"எட்டிப் பட்டத்தினைப் பெற்ருேய்! செல்வத்தில் சிறந் தோய்! தாங்கள் இதுவரை மணம் செய்து கொள்ளவில்லை என்பதை அறிகின்றேன். மணம் செய்து கொள்ளாதவர்கள் எவ்வளவு அறம் புரிந்தாலும் மேலுலகத்திற்குச் செல்ல மாட்டார். ஆதலின், உடனே தாங்கள் உள்ளத்

திற்குப் பொருந்திய ஒருத்தியை மணம் புரிந்து கொள்ளவேண்டும்; இல்லற வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்; இவற்றையே யான் தங்கள் நன்மைக்காகத் தங்களைக் கேட்டுக்கொள் கின்றேன்,'' என்று வணக்கத்துடன் கூறினன்.

அறவோன் சொற்கள் தத்தனைக் காவிரிப் பூம் பட்டினத்தை நினைக்குமாறு செய்தன. தான் பிறந்து வளர்ந்த அவ்வூரை ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளாகப் பார்க்காமலிருந்து விட்டான். சென்று பட்டினத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் மிகுந்தது. நண்பினர் முதலியோரிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டான். தென்மதுரைமக்கள் தருமமே உருவாகிய தருமதத்தனைப் பிரிய முடியாமல் அழுது நின்றனர்.

பட்டினத்திலும் தத்தன்புகழ் நிறைந் திருந்தது. இப்போது அவ்விடத்திற்குத் தத் தன் வருகின்முன் என்பதைக் கேட்ட மக்கள் திரள்திரளாகக் கூடினர். அவன் உறவினரும் பிறரும் கும்பல் கும்பலாய்ச் சூழ்ந்தனர். தத்த னைத் தவிரப் பிறரை மணக்க மாட்டேன் என்று கன்னிமாடம் புகுந்த இளங்கன்னியும் எதிர் கொள வந்தாள்.

பட்டினம் முழுவதும் கிளர்ச்சியுடன் விளங்கிற்று. 'அதோ தத்தனுர் வருகின்முர்' என்று பெரிய ஒலி எழுந்தது. தத்தன் வாழ்க! அறச்செயல் புரிந்த அண்ணல் வாழ்க! உறுதி உள்ளத்து உயர்ந்தோன் வாழ்க! எம் நகர்

புரிந்த ஏந்தல் வாழ்க! மடமை ஓட்டிய மன்னர் வாழ்க!' என்று நான்குபுறங்களிலும் வாழ்த் தொலிகள் வானைப்பிளந்தன.

தத்தனை எல்லோரும் கண்டனர். தத்த னும் எல்லோரையும் கண்டான். விசாகை வீரனைக் கண்டாள்! வீரனும் விசாகையைக் கண்டான்; ஆயினும் ஒருவரை ஒருவர் காண வில்லை. என்ன வியப்பு! நேருக்கு நேர் நிற் கின்றனர்; ஆனாலும் அறிந்துகொள்ள முடிய வில்லை.

பட்டினத்தை விட்டு நீங்கிய நாளில் தத்தன் கட்டிளங் காளையாக இருந்தனன். காமனை வென்ற அழகுடன் விளங்கினான். குறு குறு என்ற கருவிழி; பள பள என்ற நெற்றி; எடுத்த தலை; விரிந்த மார்பு; இவற்றோடு அழகே ஒரு வடிவத்தைக் கொண்டதைப் போன்று இருந்தான். ஆனால் இன்று எவ்வாறு காணப்படுகின்றான்? கருத்துச் சுருண்டிருந்த தலைமயிர் பாலினும் வெளுத்தது; நீண்டு அழ காயிருந்த புருவங்கள் சுருங்கின; ஒளியுடன் விளங்கிய தோல் கடல் அலைகளைப் போல் மடிந்து தொங்கிற்று; நெற்றியில் பல வரிகள் காணப்பட்டன. அந்தோ! அவனிடம் நிறைந்துநின்ற அழகு இன்று மறைந்தது! காலம் என்னும் கொடியோன் செய்த வேலை அன்றோ இது.

விசாகையி னுருவமும் மாறியது. அன்று தாமரையை ஒத்திருந்தன அவள் கண்கள்.

கருமணலைப் போல் வரிவரியாக ஒளிவிட்டு அழகோடு நின்றது அவள் பின்னி விட்ட கூந்தல். முத்தினைத் தோல்வியுறச் செய்தன அவள் பல். சந்திரன் அவள் முகத்தைக் கண்டு தலை கவிழ்ந்தான். இன்று அவள் எவ்வா றிருக்கிறாள் ? ஐயோ ! கண்கள் குழிந் தன. முகம் சுருங்கியது; பற்கள் வீழ்ந்தன ; பால் நுரையைப்போல் தலைமயிர் வெளுத்தது.



விசாகையும் தத்தரும் ஒருவரை ஒருவர் நோக்கல்

இவ்வாறு இருவரும் முழுவதும் உருவம் மாறி இருந்தார்கள். ஆகவே ஒருவரை ஒருவர் அறிய முடியவில்லை ; பிறகு அறிந்தார்கள். விசாகை ! என்றனன் தத்தன். அன்ப ! என் றனள் விசாகை. ஒருவரை ஒருவர் நெடுநேரம் நோக்கி ஒன்றும் பேசாதிருந்தனர். 'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ !'

விசாகை வாய் திறந்தாள். " அன்பரே! இன்று நம்மை நாம் அறியாது விழிக்கின்றோம். நம்மிருவரையும் ஒன்றாகக் கட்டிவைத்த அழகு எங்கே? தங்களுக்கு அறுபது ஆண்டுகளுக்கு மேலாயிற்று. என் கூந்தலும் வெண்நிறம் ஏற்றது. நம்மை முன்னே மயக்கிய காமமும் தன் வன்மையை இழந்தது. எல்லாம் தோன்றி மறைவனவே!

தத்தன் :—என் அன்புடைய விசாகை! நீ சொல்வன யாவும் உண்மையே. யான் ஓர் அறவோனால் இங்கு அனுப்பப்பட்டேன். அவன், 'மணம் செய்து கொள்ளாதவர்கள் செய்யும் அறம் பயனுடைத்தன்று,' என்றான். அவன் சொல்லில் எனக்கு நம்பிக்கை வரவில்லை. ஆயினும் என் உள்ளத்துப் பெண்ணாகிய நின்னைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் அழுத்தமாக என் உள்ளத்தில் உண்டாயிற்று.

விசாகை :—அறவோர் என்ன சொல்லினர். 'மணம் செய்யாதவர் செய்யும் அறம் பயனில்லாதது,' என்றா கூறினர்? அஃது எப்படி? இளமை நில்லாது; யாக்கையும் நில்லாது; செல்வமும் நில்லாது; அறவோர் சொல்லும் இல்வாழ்க்கையில் பிறக்கும் பிள்ளைகளும் நமக்கு மேலுலகத்தைத் தரமாட்டார்கள். என்றும் வாழ்வது அறம் ஒன்றே. ஆதலின் இனியும் அறம் செய்வீராக!

இருவரும் பேசி மகிழ்ந்தனர். நகரமக்கள் உடல் பூரித்தனர். ‘நம்பி வாழ்க! நங்கை வாழ்க! கற்பிற் சிறந்த காரிகை வாழ்க! உறுதி சிறந்த உண்மையோன் வாழ்க! பட்டினத்துப் பெண் வாழ்க! பல நலம் சிறந்த பண்பினர் வாழ்க!’ என்று ஆரவாரித்து மகிழ்ந்தார்கள்.

விசாகையின் உள்ளத்து உறுதியே உறுதி! தத்தனின் தகுதியே தகுதி!

---

## 4. சாலி மகன்

### I

#### பசு மகன்

ஆறுகளில் உயர்ந்தது கங்கை. இதில் வந்து கலக்கும் சிறிய ஆறுகள் பல இருக்கின்றன. அவ்வாறு கலக்கின்றவற்றுள் இரண்டு. வாரணே, அசி என்பவை. இவை கங்கையோடு சேரும் இடத்தில் ஓர் ஊர் இருக்கின்றது. அதற்கு வாரணுசி என்பது பெயர்.

பல நூறு ஆண்டுகளுக்கு முன்னே வாரணுசியில் அந்தணன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் அபஞ்சிகன்; வேதத்தை நன்ருகப் படித்தவன். அவன் தொழில் பிறருக்கு வேதத்தைச் சொல்லிக் கொடுப்பது. அவன் மனேவியின் பெயர் சாலி. அவள் கற்பிலும் அழகிலும் சிறந்தவள். கணவனேயே கடவுளாக வணங்கினுள்.

தீவினே யாரை விடும்? சாலி அழகிய ஆடவன் ஒருவனேக் கண்டாள். அவன்மேல் ஆசைகொண்டாள். தன் உயிரினும் சிறந்த கணவனே மறந்தாள்; கற்பை விடுத்தாள்; கண்ட அவனுடன் கலந்திருந்தாள்; கருவும் வாய்க்கப் பெற்ருள்.

கமரில் விழுந்த பால் மீண்டும் வருமா! ஒரு செயலேச் செய்யும் முன்னே பல முறை எண்ணுதல் வேண்டும். எண்ணித் துணிந்த பிறகே செய்தல் வேண்டும். சாலி நினேத்துப்

பார்க்கவே இல்லை. கண்டவனிடம் கலந்து வாழலாமா? என்று அவள் நினைக்கவே இல்லை. பிறகு தான் செய்தது தவறு என்பதை உணர்ந் தாள். அவள் நெஞ்சு அவளுக்கு நஞ்சு ஆயிற்று. "ஏ! சாலி! என்ன செயல் செய் தாய்? கற்பைக் கெடுத்துக் கொண்டாயே! பெண்களுக்கு அழகிய அணி கற்பன்றோ? அதனை இழந்து வாழ்தல் ஆகுமோ?" என்று அவளுடைய நெஞ்சு இடித்துக் கூறிற்று.

நெருப்பிலிட்ட புழுவைப்போல் சாலி துடித்தாள். 'என்ன செய்வது' என்று வருந்தி அழுதாள்; பிறகு அறிஞர்களை அடுத்தாள்; தான் செய்த தவற்றினை எடுத்துக் கூறினாள். அதற்குக் கழுவாயாக என்ன செய்தல் வேண்டும்? என்று கேட்டாள். அவர்கள், "தமிழ் நாட்டில் குமரி என்றோர் இடம் இருக் கின்றது; அங்கே சென்று நீராடவேண்டும்: நீராடினால் தீவினை ஒழியும். நீ செய்திருக்கும் தீச் செயலுக்கு இதுவே கழுவாய்," என்று சொன்னார்கள்.

காசி விடுத்தாள். தெற்கு நோக்கி வந்தாள். அருமை அன்பர்களே, எண்ணிப்பாருங்கள். நம் தென்னாடு எவ்வளவு சிறப்போடு கூடியது. வடநாட்டில் பிறந்த சாலி தன் தீவினையைப் போக்கிக் கொள்ள நம் நாட்டிற்கு வருகின்றாள்.

பல ஆறுகளைக் கடந்தாள். காடு மேடுகளைத் தாண்டி வந்தாள். கன்னட நாடு தெலுங்கு நாடுகளை விட்டுத் தமிழ் நாடு சேர்ந்தாள். சோழ

நாட்டு வழி வந்துகொண்டிருந்தாள். ஒருநாள் ஞாயிறு மறைந்தது; இருள் எங்கும் நிறைந்தது; சாலி ஒரு சோலையில் தங்கிக்கொண்டிருந்தாள். காசியை விட்டு வருங்காலத்தில் கருவுடன் இருந்தாள் என்று அறிவோமன்றோ! அக்கரு முதிர்ந்தமையால் அந்த இரவில் குழந்தையைப் பெற்றாள். தன்னருகில் ஒருவரும் இல்லாமையால் தவித்தாள்; உள்ளம் வருந்தினாள்.

பிறந்த அந்த ஆண் குழந்தை அழகாக இருந்தது. கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டு அழுதது. அதனைக் கண்ட சாலி முதலில் வருந்தினாள். ஐயோ இக் குழந்தையினாலன்றோ நான் காசியை விட்டுவந்தேன். என் வாழ்க்கைக்கு இஃது ஒரு கோடரிக்காம்பு என்று நினைந்து அழுதாள்.

குழந்தை பசியால் துடித்தது. தாய் சிறிதும் கவலை கொள்ளாமல் விட்டுவிட்டுப் போய் விட்டாள். 'அம்மா! அம்மா!' என்று மேலும் மேலும் அச் சிறுவன் அழுதான். அம்மா எங்கே? அவள் போய்விட்டாளே!

அச்சோலையின் மற்றொரு புறத்திலே பசு ஒன்று இருந்தது. அது நல்ல குணங்களை உடையது; மக்களிடத்தில் அன்பாக இருக்கும். அப்பசு குழந்தையின் அழுகைக்குரலைக் கேட்டது. தன் தூக்கத்தையும் விட்டு எழுந்து வந்தது. குரல் கேட்ட வழியே போய்க் குழந்தையை அடைந்தது. யாருமில்லாமல் இளங் குழந்தை தனியே கிடந்து அழுவதைக் கண்

டது. அதன் அருகில் சென்று நின்று தன் நாவினால் மெல்ல நக்கிற்று. பசு நக்கவே குழந்தை உடம்பில் கொஞ்சம் சூடு உண்டாயிற்று. குழந்தை உறங்கத் தொடங்கியது.



பசு குழந்தையை நக்குதல்

பசியினால் குழந்தை விழித்துக்கொண்டு அழுதது. பசு குழந்தையின் வாயில் தன் பாலைப் பீச்சிற்று. குழந்தை குடித்தது. அதன்

பசி நீங்கிற்று. அழுகை ஓய்ந்தது. குழந்தையும் விளையாடிற்று. சோலையிலுள்ள பல நிறப் பூக்களைப் பசு பறித்துக்கொண்டு வந்தது! குழந்தைக்குக் காட்டி விளையாடச் செய்தது.

அன்பர்களே! பசுவின் செய்கையைக் கண்டீர்களா? நாம் அதனை விலங்கு என்று கட்டிப் போட்டுத் தீனி போடுகின்றோம். நாம் நெல்லை எடுத்துக்கொண்டு அதற்கு வைக்கோலினைப் போடுகின்றோம். பெற்றெடுத்த தாய் குழந்தையை விட்டுச் சென்றாள். ஆனால் விலங்காகிய பசு அக்குழந்தையைக் காப்பாற்றுகின்றது. இப்பசுவினை நாம் எவ்வாறு புகழலாம்! கடவுள்பசு என்று சொல்லலாமா? அறிவுடைய ஆ என்று கூறலாமா? நீங்களே சொல்லுங்கள்.

குழந்தையைப் பசு ஏழு நாட்கள் காத்தது. சோலைக்குச் சிறிது தொலைவில் வயனங்கோடு என்ற ஊர் ஒன்று இருந்தது. அவ்வூரில் அந்தணர் பலர் வாழ்ந்தனர். அவர்களுள் இளம்பூதி என்பவன் ஒருவன் இருந்தான். அவன் வேதங்களைக் கற்றவன்; நல்ல உள்ளம் உடையவன்; கடவுளிடம் அன்பு செலுத்துபவன்.

இளம்பூதி செல்வத்துடன் வாழ்ந்தான். அவனுக்கும் அவன் மனைவிக்கும் ஒரே குறை இருந்தது. அஃது என்ன? அவர்களுக்குக் குழந்தை இல்லை.

வயனங்கோட்டை அடுத்த ஓர் ஊரில் இளம்பூதியின் உறவினர் இருந்தனர். அவ் வூருக்கு இளம்பூதியும் அவன் மனைவியும் போக நேர்ந்தது. அவர்கள் சோலையின் வழியாகத் தான் போகவேண்டும்; வேறு வழி கிடையாது.

குழந்தை இல்லாமலிருந்த இளம்பூதிக்கு நல்லகாலம் பிறந்துவிட்டது! சோலை வழிச் சென்ற அவன் குழந்தையைக் கண்டான். மக்கள் யாருமில்லாமலிருக்கப் பசு ஒன்று அதனைக் காப்பாற்றிக் கொண்டிருப்பதையும் அறிந்தான். கடவுள் மகிழ்ந்து தனக்கு மகனைத் தந்ததாகக் கருதினான். 'இது பசுவின் குழந்தை அன்று. என் குழந்தை, என் குழந்தை. ஆகா! என்ன அழகான முகம்! ஆகா! எவ்வளவு சிறிய கால்கள், இளைய ஞாயிறுபோலச் செக்கச் செவேரென இருக்கின்றதே!' என்று சொல்லி மகிழ்ந்தான்.

இளங்குழந்தை தனியாய்க் கிடந்ததை நினைந்து நினைந்து அழுதான். 'கடவுளே! தாங்கள் தம்மை நம்புவோரைக் கைவிடமாட்டார் என்பதை அறிந்தேன். அடியேனுக்குத் திருவருள்செய்த தங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன். இறைவனே! குற்றமில்லாத என் உள்ளத்தால் தங்களை வணங்குகின்றேன். இவ்வளவே என்னால் செய்யத்தக்கது!' என்று பல பேசினான்.

தன்னருகில் நின்ற மனைவியைப் பார்த்தான். அவளும் அவனைப் போலவே உள்ளம்

உருகிக் கண்ணீர்விட்டு நின்ருள். 'கண்மணி! இவன் நமக்குக் கடவுள் தந்த செல்வம். இச் செல்வ மகன் நம்மை நல்ல நெறியில் செலுத்த வந்த பெருமகன். இனி நீயே இவனைக் காப்பாற்ற வேண்டியவள்! இதுவரை அன்போடு இப்பசு காப்பாற்றியது. நம் கிளை பொலிக. இந் நம்பி நீடுவாழ்க,' என்று சொல்லிக் குழந்தையை எடுத்து அவள் கையில் தந்தான். அவள் குழந்தையை வாங்கி அணைத்து முத்தமிட்டு உச்சி மோந்தாள்.

நடந்தவற்றை எல்லாம் கண்ணீர் ஒழுகப் பசு கண்டுகொண்டிருந்தது. இளம்பூதி பசு வருந்துவதைக்கண்டு அதனருகில் சென்று அதன் உடலை மெல்லத் தடவிக் கொடுத்தான். 'பசுவே, வருந்தாதே. இதுவரை நீ இக் குழந்தையை வளர்த்தாய். இனிமேல் உன்ஞல் ஆகாது. ஆதலிஞல் நாங்கள் எடுத்துச் செல்கின்ரும். துன்பப்படாதே. உன்னை நாங்களும் மறக்கமாட்டோம்; இக்குழந்தையும் மறவாது. இச்சிறுவனுக்கு நீ வளர்த்த நினைவு பற்றி ஆமகன் என்று பெயர்வைக்கிறேன்,' என்று சொன்ஞன். தன் பொறுப்பில் இருந்த பொருளை மற்ருெருவரிடத்தில் ஒப்படைத்ததைப் போன்று பசு நின்றது. 'குழந்தையை அன்போடு வளர்த்து வாருங்கள்' என்று சொல்வதைப்போல் பார்த்தது. பிறகு காடு நோக்கி மெதுவாக அசைந்தசைந்து நடந்துசென்றது.

இளம்பூதி வயனங்கோட்டிற்குக் குழந்தையுடன் வந்தான். கண்ணை இமை காப்பாற்று

வதுபோல் காப்பாற்றினன். மதி வளர்வதைப் போல் ஆமகனும் வளர்ந்தான். அவனுக்கு ஆண்டுகள் ஐந்தும் நிரம்பவில்லை.

ஆமகன் இயல்பாகவே நல்லறிவு வாய்க்கப் பெற்றிருந்தான். பல நாள் துன்பப்பட்டுக் கற்றுக்கொள்ள வேண்டியவற்றை எளிமையாக அறிந்தான். கல்வி நிரம்பிற்று; கல்வியின் பயன் என்ன என்று ஆராய்ந்தான்.

"கற்றதனல் ஆய பயன்என்கொல் வால்அறிவன்
நற்ருள் தொழுஅர் எனின்." —குறள்.

இறைவன் திருவடிகளை வணங்குவதே கல்வியின் பயன். கற்பதெல்லாம் கடவுள் அருளைப் பெறுவதற்கே. உண்மையாகிய கல்வி, கற்றவர்களைக் கடவுளிடத்தில் கொண்டுசேர்க்கும். இறைவனை வணங்காதவர்கள், கற்றவர்கள் என்று சொல்லப்படமாட்டார்கள்; அவர்கள் வெற்று ஆள்களே! இந்த உண்மையை ஆமகன் அறிந்தான்.

இறைவனை எவ்வாறு வணங்குவது? என்று மேலும் எண்ணினன். இறைவன் எங்கே இருக்கிருன்? அவன் இல்லாத இடம் எது? எங்கும் அவன் இருத்தலினல் எல்லாப் பொருள்களையும் இறைவனுகக் கருதி வணங்கவேண்டியதே கடமை ஆகும்.

உலகத்திலுள்ள பொருள்கள் இருவகைப் படும்: உயிருள்ளன, உயிரில்லாதன என. உயிரில்லாத பொருள்களுடன் நாம் எவ்வாறு பழக

முடியும் ? உயிருடைய பொருள்களுடனே தான் நாம் பழகுகின்றோம். ஒவ்வொரு உயிரினுள்ளும் கடவுள் எழுந்தருளி இருக்கின்றான். ஆகவே, உயிருள்ள பொருள்களெல்லாம் இறைவன் எழுந்தருளும் கோயில்கள். ஒரு புழுவை நாம் நசுக்கிவிட்டால் கடவுள் கோயில் ஒன்றை இடித்தவர்களாகின்றோம். ஆதலினாலே பூச்சி புழு முதலாக மக்கள்வரையில் எல்லோரிடத்தும் அன்புடன் இருக்கவேண்டும். அன்பே உயிர்; அன்பே கடவுள். இன்பம் தருவதும் அன்பே. அழியாத வீடு தருவதும் அன்பே. உலகத்தில் நமக்கு வேண்டிய எல்லாம் தருவதும் அன்பே.

"எவ்வுயிரும் நீங்காது உறையும் இறைசிவன்என்று
எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு."

ஆகவே, எல்லா உயிர்களிடத்திலும் அன்பாக இருத்தல்வேண்டும்; அதுவே இறைவனை வணங்கும் நெறி; அதுவே நமக்கு இறைவன் அருளைக் கூட்டுவிக்கும் என்று ஆமகன் உறுதி கொண்டான்.

## II

### வேள்விப்பசுவை விடுதலைசெய்தல்

வயனங்கோட்டில் அந்தணர்கள் வாழ்ந்தார்கள் என்று முன் சொன்னேன் அல்லவா ? அவர்கள் வேள்வி செய்வது வழக்கம். அவ்வாறு ஒருநாள் வேள்வி செய்தார்கள். அதனைக் காணுதற்கு ஆமகன் அங்குச் சென்றான்.

வேள்வி செய்யும் இடத்தில் அவன் என்ன கண்டான்? ஓர் இடத்தில் குழியொன்று கட்டப் பட்டிருந்தது. அதனைச் சுற்றிலும் பல அந் தணர்கள் இருந்தனர். அக் குழியில் தீ எரிந்து கொண்டிருந்தது. அந்தணர்கள் அடிக்கடி பலவற்றைச்சொல்லி நெய்யை அக் குழியில் விட்டார்கள். தீ கொழுந்துவிட்டு எரிந்தது. அதனை அடுத்து ஒரு பெரிய தூண் இருந்தது. அத் தூணில் ஒரு பசு கட்டப்பட்டிருந்தது. அப் பசுவின் கொம்பில் பல மாலைகள் சுற்றப்பட் டிருந்தன. வேள்வியின் முடிவில் அப் பசுவைப் பலியாகக் கொல்வார்கள் என்பதை அவ் விலங்கு அறிந்திருந்தது. ஆதலினால் கண்ணீர்விட்டுக் கதறிக்கொண்டிருந்தது. அந்தணர்கள் அத னைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

வலைப்பட்ட மான்போல் வருந்திய பசுவை ஆமகன் கூர்ந்து பார்த்தான். அதன் நெஞ்சின் துடிப்பையும் உடலின் படபடப்பையும் உள்ளத் துத் துயரத்தையும் அவனால் பார்த்துக்கொண் டிருக்க முடியவில்லை; உள்ளம் கசிந்தான்; கண் ணீர் விட்டான். யாரிடம் சொல்லிப் பசுவை மீட்கலாம்? என்று எண்ணினான். அங்கிருந் தோர் ஒவ்வொருவரும் யமனைப் போன் றிருந் தார்கள்; ஒருவரும் அவன் சொல்லை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்பதை அறிந்தான். ‘எவ்வாறேனும் பசுவின் தொல்லையை ஒழிப் பேன்,’ என்றுறுதிகொண்டான். அதற்கேற்ற வழியை நினைத்து ஒரு முடிவிற்குவந்தான்.

வேள்வி நடந்த வீட்டிலேயே அந்த இரவு தங்கினான்.

நள்ளிரவு; எல்லோரும் அயர்ந்து உறங்குகின்றனர்; வீடு முழுவதும் அமைதியாக இருக்கின்றது. 'இதுவே காலம்' என்று கருதி ஆமகன் தன் மறைவிடத்திநின்றும் வந்தான். மெதுவாகப் பசுவைக் கட்டுத் தறியினின்றும் அவிழ்த்தான். தனக்கு விடுதலை வந்தது என்று மகிழ்ந்த பசுவும் மெல்ல அவனைப் பின்பற்றியது. எத்தகைய ஓசையும் இல்லாமல் ஓட்டிச் சென்றனன். கல்லும் முள்ளும் நிறைந்த கரடு முரடான வழியே இருவரும் சென்றார்கள்.

அந்தணர் கண் விழித்தனர். ஆவினைக் காணவில்லை. "ஐயோ! வேள்வி நின்றுவிடுமே! வேள்விப்பசு எங்கே சென்றது?" என்று கூக்குர லிட்டார்கள். பசுவின் அடிச்சுவட்டைக்கண்டு தேடிச் சென்றார்கள். விரைந்து சென்றமையால் பசுவினை ஆமகனுடன் கண்டார்கள். உடனே இருவரையும் பிடித்துக் கொண்டனர்.

"இழிந்தவனே! புலைமகனே! திருடனே! கொடியவனே! ஏன் வேள்விப் பசுவினைத் திருடிக்கொண்டு ஓடுகின்றாய்? உன் எண்ணம் என்ன? சொல்லு. இல்லையேல் உதைபடுவாய். உம்," என்று அச்சுறுத்தினர். அன்றியும் கோலினால் அடித்துத் துன்புறுத்தினர்.

தேடிக்கொண்டு வந்த அந்தணர்களுடன் வேள்வியைச் செய்துவைக்கும் ஆசிரியரும்

வந்திருந்தார். அவர் வேள்வி ஆசிரியர் என்று சொல்லப்படுவார். அவரே அளவு கடந்து ஆமகனை அடித்தவர். சிறுவன் என்றும் கருதாமல் தம் கையிலிருந்த கோலால் ஓங்கி ஓங்கி அடித்தார். ஆமகன் உடலில் குருதி வழியத் தொடங்கியது.

அந்தணர்கள் செய்கைகளைப் பசு கண்டது. வேள்வி ஆசிரியரே கொடுமை நிறைந்தவர் என்று எண்ணிற்று. தனக்கு நன்மை புரிந்த இளைஞனைத் துன்புறுத்திய ஆசிரியரிடம் அதற்குப் பகைமை மிகுந்தது. ஆதலின் உடனே தன் கூர்மையான கொம்புகளால் ஆசிரியர் வயிற்றில் குத்திற்று; குடல் வெளிவந்தது. அந்தண ஆசிரியரின் உடல் கீழே வீழ்ந்தது; உயிர் ஓடி ஒழிந்தது.

மற்ற அந்தணர்கள் என்ன செய்வதென்று அறியாமல் விழித்துக்கொண்டு நின்றனர். தன்னைக் காப்பாற்றிய இளைஞனை மெல்ல நக்கித் தன் நன்றியைப் பசு அறிவித்தது. உடனே நாலுகால் பாய்ச்சலில் விரைந்து ஓடிக் காட்டில் மறைந்தது.

வயனங்கோட்டு அந்தணர் தம் வேள்விப் பசுவை இழந்தனர். அது மட்டுமா? அந்தோ! வேள்வி ஆசிரியரையும் இழந்தார்கள். இவற்றிற்கெல்லாம் ஆமகனே காரணம் என்று அவனை வெகுண்டு நோக்கினர். கொல்லுகின்றவர்களைப் போல நோக்கிய அந்தணர்களைப்

பார்த்து ஆமகன், "ஐயர்களே! என்னை ஏன் அடிக்கிறீர்கள்? நான் என்ன குற்றம் செய்தேன்? நான் சொல்வனவற்றைக் கேளுங்கள். இப்போது காட்டுப் பக்கமாக ஓடிய பசுவுடன்



உங்களுக்குள்ள பகை என்ன? அதனை ஏன் கொல்லத் துணிந்தீர்கள்? அதனைக் கொல்லு வதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கின் றது? அதன் நன்மைக்காக நீங்கள் என்ன செய்திருக்கின்றீர்கள். பசுக்களுக்கென்று அரசன் புல்வெளிகளை விட்டிருக்கிறான். அப் புலங்களிலுள்ள புல்லை இந்தப்பசு தின்கின்றது. நீரோடையி லிருக்கும் தண்ணீரைக் குடிக் கிறது. மரத்து நிழலில் படுத்துறங்குகின்றது. அவ்வளவோ? நமக்கும் நம் குழந்தைகளுக்கும் பால் கொடுத்துக் காப்பாற்றுகின்றது. நாம் இப்பசுவுக்கு என்ன கைம்மாறு செய்கின்றோம். ஒன்றுமில்லையே! அவ்வாறிருக்கக் கொடுமை

யாக இதனையே கொல்ல முற்படுகின்றீர்களே! இஃது ஒழுங்காகுமா! எண்ணிப் பாருங்கள்,'' என்று சொன்னான்.

சிறுவன் பேசப் பேச அந்தணர்களுக்குச் சீற்றம் ஏறிக்கொண்டே போயிற்று. மேலும். அவனைப் பேச வொட்டாது தடுத்து அந்தணர்கள் பின்வருமாறு சொன்னார்கள். "அறிவில்லாச் சிறுவனே! அறியாமையால் பல பேசுகின்றாய். உனக்கு உண்மை உணர்வு கிடையாது; ஆதலினால்தான் ஏதேதோ உளறுகின்றாய். எம் சொற்களைக் கருது. திருமால் அருள்செய்துள்ள வேதத்தை நீ படித்தறியாய். அறிந்திருப்பின் வேள்வியின் பெருமையை அறிந்திருப்பாய்; இந்தப் பயனிலாத சொற்களைச் சொல்லி இருக்கமாட்டாய். நீ மக்களுள்ளே பதரை ஒத்தவன். பல சொல்லுவானேன். நீ பசுமகன் தானே! உனக்கு விலங்கின் அறிவைத் தவிர வேறு அறிவு எவ்வாறு வரும்,'' என்றனர்.

ஆமகன் "அந்தணர்களே! நன்றாக மகிழுங்கள். என்னைப் பசுமகன் என்று சொல்லி எதற்காகச் சிரிக்கின்றீர்கள்! என்னைப் பசுமகன் என்று சொல்லுவதால் எனக்கென்ன இழிவு. ஓகோ! உங்களுக்குத் தெரியாதோ? உங்கள் குலத்து இருடிகள் வரலாற்றை நீங்கள் படிக்கவில்லையோ? இல்லையானால் சொல்லுகின்றேன்; கருத்துடன் கேளுங்கள். அசலன் என்ற முனிவன் உங்களால் போற்றப்படுகின்றான்.

அவன் யார் வயிற்றில் பிறந்தவன்? பசுவின் வயிற்றில் பிறந்தவன் என்பதை அறியீரோ? அல்லது மறந்தீரோ? சிருங்கியைப் பெற்ற தாயார் யாவர்? மான் என்னும் விலங்கன்றோ? சிறிதும் உயிர்களிடம் இரக்கம் காட்டாது கொல்லும் கொடிய விலங்காகிய புலியின் வயிற்றில் பிறந்தவன் விரிஞ்சி ஆகும். நீங்கள் வணங்குகின்ற கேசகம்பளனைப் பெற்றது நரி அல்லவா? பசு, மான், புலி, நரி முதலியவற்றின் வயிற்றில் பிறந்தவர்கள் உங்கள் குலத்து இருடிகள். இவ்வாறிருக்க என்னைப் பசுமகன் என்று இகழ்கின்றீர்களே! இகழ்வதற்கு என்ன வழி இருக்கின்றது? சிறிது நினைத்துப் பாருங்கள்!'' என்றான்.

அந்தணர்கள் வெட்கத்தால் மூடப்பட்டனர்; பேச வழி அறியாது திகைத்து நின்றனர். அவருள் ஒருவன், "ஓ! இச்சிறுவன் யார் என்று எனக்குத் தெரியும். இவன் திருட்டுச் செயலையும் முரட்டுப் பேச்சினையும் பார்க்கும் போது ஐயம் சிறிதுமே இல்லாது ஒழிந்தது,'' என்றார்.

எல்லோரும் ஆவலுடன் "சொல்லு சொல்லு,'' என்றனர்.

அவன், "நான் சில ஆண்டுகட்குமுன் ஒருத்தியைக் கண்டேன். அவள் வடநாட்டிலிருந்து வந்தவள்; நடந்தமையால் உடல் வாடி இருந்தாள். குமரிசென்று நீராட வந்து

கொண்டிருந்தாள். அவளைக் கண்டு யான், 'நீ யார்? நின் ஊர் யாது? இங்கு வரக் காரணம் யாது?' என்று கேட்டேன். அவள் 'என் பெயர் சாலி. நான் காசியிலிருந்து வருகின்றேன், கணவர் வேத வாத்தியார். நான் தீயமதியால் தவறி நடந்து கரு வயிற்றிலுற்றேன். அறிஞர்கள், கற்புநெறி தவறிய கொடுமை நீங்கக் குமரி ஆடவேண்டும் என்றனர். இடம்விட்டு இடம் பெயர்ந்து செல்லும் மக்களோடு கூடினேன். தெற்கிலுள்ள குமரி நீராடி வருகின்றேன் இவ்வூரிலிருந்து சிறிது தொலைவில் உள்ள சோலை ஒன்றில் குமரிக்குப் போகும்பொழுது தங்கியிருந்தேன்; அச்சோலையில் நல்ல இருளில் ஒரு மகனைப் பெற்றேன். வேறுவழி இன்மையால் அக்குழந்தையை அங்கேயே விடுத்துப் போய்விட்டேன். ஐயா, எனக்கும் நற்கதி கிடைக்குமா? என்னைப் போன்று கொடுவினை செய்தாரை நீங்கள் கண்டிருப்பீர்களா! கடவுளே!' என்று சொல்லி வருந்திச் சென்றாள். அக்குழந்தையே இவன்! கற்புநெறி தவறியவள் பெற்றெடுத்த கசடன் இவன்! இச்செய்தியை இவனை வளர்த்த இளம்பூதிக்குச் சொல்லவேண்டும் என்று கருதினேன். அவனுக்குப் பிள்ளை இல்லாமையால் என் சொற்களை நம்பமாட்டான் என்று நினைத்துப் பேசாமல் இருந்துவிட்டேன். ஒழுங்கற்றுப் பேசும் இவன் பிறப்பும் ஒழுங்கற்றதே! 'குலத்தளவே ஆகும் குணம்,'' என்றான்.

அந்தணர்கள் எல்லோரும் முணுமுணுத்தார்கள். 'வேசி மகன், இழி மகன்' எனப் பலவற்றைச் சொன்னார்கள்.

ஆமகன் அவர்கள் பேச்சினைக் கேட்டான். இனிமையாகச் சிரித்தான் "அந்தணப் பெரு மக்களே! ஏன் சிரித்துக் குறை கூறுகின்றீர். நீங்கள் வணங்கும் கடவுளாகிய பிரம்மா திலோத்தமை என்ற தேவ தாசியைப் படைத்தார். அந்தத் தாசியின் பிள்ளைகள் அல்லரோ வசிட்டனும் அகத்தியனும்? மாபெரும் முனிவர்களாகிய இவ்விருவரையும் தாசியின் பிள்ளைகள் என்று தள்ளிவிட்டார்களா?" என்று சொல்லிக் கைகொட்டிக் கடகட என்று சிரித்தான்.

ஆமகன் பேச்சு அந்தணர்களுக்கு வெந்த புண்ணில் வேல் நுழைவதுபோல் இருந்தது. அவர்களால் மறுத்தும் பேசமுடியவில்லை. சிறிய அவனால் சொல்லப்படும் சொற்களைக் கேட்டுக் கொண்டிருக்கவும் உள்ளம் ஒப்பவில்லை. முடிவாக அவனைக் குலத்தினின்று விலக்கினர். அவர்கள் கட்டளைப்படியே அவனை வளர்த்த இளம்பூதியும் விட்டுவிட்டான்.

பசுமகனுக்குச் சோறு போடுவார் எவரும் இல்லை. ஆகவே பிச்சையெடுக்கவேண்டியவனானன். இவனிடத்தில் நல்லெண்ணம் இல்லாத அந்தணர் பிச்சைப் பாத்திரத்தில் சோறு போடாது கல்லைப் போட்டனர்! அந்தோ!

கொடுமை. கல்லையும் மண்ணையும் காய்ச்சிக் குடிக்கக் கடவுள் கற்றுக் கொடுத்திருக்கின்றானா? இல்லையே. பசியைக் கல்லால் எவ்வாறு போக்கிக்கொள்ள முடியும்? "சோறு இல்லை; போ என்று சொல்லலாகாதா? கல்லைப் போடுகின்றார்களே! இவர்கள் நீடூழி வாழட்டும். நான் வேறு ஊர் செல்கின்றேன்," என்று சொல்லிப் பசுமகன் வேற்றூர்க்குச் சென்றான்.

## III

### உணவு சுரக்கும் ஓடு

வயனங்கோட்டினை விட்ட பசுமகன் பல கல் தொலைவு நடந்து வந்தான். வடமதுரை அடைந்தான். அவ்வூரில் நாமகளுக்கென்று ஒரு கோயில் இருந்தது. அக்கோயிலின் முற்பகுதியில் ஒரு மேடை இருந்தது. அம்மேடையைத் தானிருக்கும் இடமாகச் சிறுவன் அமைத்துக்கொண்டான். அவ்வூரில் பகல் முழுவதும் பிச்சை எடுப்பான். மாலையில் அம்மேடைக்கு வருவான். பிச்சையாகக் கிடைத்த உணவைத் தான் ஒருவனே உண்ணமாட்டான். குருடர், செவிடர், நொண்டிகள், காப்பாற்றுவோர் இல்லாதோர், பிணியாளர் முதலியோரை அழைத்து அவர்களுக்கு இடுவான். அவர்கள் உண்டு ஒழிந்த மிச்சிலைத் தான் உண்பான். பிறகு நாமகளை வணங்கி உறங்குவான்.

இவ்வாறு பல நாட்கள் கழிந்தன. ஒரு நாள் வழக்கம்போல் பிச்சை எடுத்து மற்றவருக்

கும் கொடுத்துத் தானும் உண்டு உறங்கினன். இரவு கன்னங்கரேல் என இருந்தது. விண் மீன்களும் ஆகாயத்தில் காணப்படவில்லை. கரிய மேகம் எங்கும் சூழ்ந்திருந்தது. 'சோ' என்ற ஒலியுடன் மழைபெய்தது. அக்காலத்தில் வேறு ஊரிலிருந்து வந்த சில கூட்டத்தார் ஆமகனை எழுப்பி 'உணவு வேண்டும்' என்று சொன்னர்கள். அவர்கள் பசியினல் வாடி வதைந்தார்கள். சிறுவனே சோறு மிகுதி வைத்திருப்பவன் அன்று. அன்றன்று கிடைத்தவற்றை அவ்வந்நாளிலேயே செலவு செய்துவிடுவான். ஆதலின் உள்ளம் நொந்து, "கலைமகளே! இவர்கள் பசியை யான் எவ்வாறு போக்குவேன்; இவர்களோ பசிக்கொடுமையால் மிகுதியும் துன்புறுகின்றர்களே; என்ன செய்வேன் தாயே, நீயே காப்பாற்ற வேண்டும்," என்று வணங்கினன்.

தனக்கென்று நினைந்து வருந்துவதைவிடப் பிறருக்காக வருந்துவது உயர்ந்தது. பிறர் துன்பத்தைக் காணமுடியாத நிலையில் ஆமகன் வருந்தினன். ஆதலின் கலைமகளும் அவன் துன்பத்தை ஒழிக்கவேண்டும் என்று எண்ணினள். அவன் முன்தோன்றி, "உண்மையான அன்பனே! வருந்தாதே. நான் இந்த ஓட்டினைத் தருகின்றேன். இதனைக் கைக்கொள். நாட்டில் பஞ்சத்தால் உணவு இல்லாமற் போனலும் இவ்வோடு உணவுதரும். உணவைக் கையில் வாங்குவோர் மேலும் வாங்க

முடியவில்லையே என்று வருந்தும் அளவுக்குத் தரும். இதில் உணவு இல்லையே என்று நீ என்றும் வருந்தவேண்டியதில்லை. வந்தோர் பசியை முதலில் நீக்கு,'' என்று சொல்லி ஓட்டினை அவன் கையில் தந்தாள்.

'செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை' அல்லவா ? நன்றியறிந்தவன் பசுமகன். ஆதலின், நாத் தழுதழுக்க அன்போடு கலைமகளை வணங்கினான். ''என் தாயே! ஒளியே! நாக்கில் விளங்கும் நங்கையே! வானோர் தலைவி! மண்ணோர் முதல்வி! பிறர் துன்பத்தை அழிக்கும் பெருந்தகையோய்! நின் திருவடியை வணங்குகின்றேன். நின்னை வணங்காது யான் உய்ய முடியுமோ ?'' என்று தொழுதனன்.

பிறகு பசியால் வாடிய கூட்டத்தாருக்குச் சோறிட்டான். எவ்வளவு எடுத்தாலும் சோறு வந்துகொண்டே இருந்தது. மணலிடத்தில் தோண்டினால் தண்ணீர் எவ்வாறு சுரக்கும்? அதைப்போலவே எடுக்க எடுக்க அவ்வோடு உணவு தந்துகொண்டே இருந்தது.

மறுநாள் பொழுது புலர்ந்தது. இதற்கு முன்னெல்லாம் கையில் பிச்சைப் பாத்திரத்தோடு பிச்சை எடுக்கச் செல்வான். ஆனால், இன்றைய நாள் பசித்தோர் எல்லோருக்கும் உணவு கொடுக்கச் சென்றான். இரந்தோர்க்கெல்லாம் உணவு தந்தான். பசி எனும் நோயினை ஒழிக்கும் மருத்துவனுமயினான். மக்க

ளுக்கு மட்டுமா? பறவைகளுக்கும் சோறு போட்டான்!

பழுத்த மரத்தில் பறவைகள் வந்து சேரும். எதற்கு? அதிலுள்ள பழத்தைத் தின்பதற்கு. ஆமகனிடத்தில் உணவு தரும் ஓடு இருந்தமையால் அவனும் ஒரு பழமரத் தைப் போன்றிருந்தான். பசிநோயாளரும் பறவைகளும் அவனைச் சூழ்ந்தனர். உணவு உண்ணும் ஒலி மிகுந்தது!

அருமை அன்பர்களே! பசி என்பது கொடிய துன்பத்தைத் தருகின்றது. ஒருவ னுக்குப் பசிக்கத்தொடங்கினதும் அவன் எந்த வேலையும் செய்யமுடியாமல் விழிக்கின்றான். உடம்பு ஓய்கின்றது. கண்கள் மூடுகின்றன. ஆதலினால் பசி எல்லா வகையான சிறந்த குணங்களையும் அழித்துவிடும்.

பசியால் வாடினவர்களுக்கு உணவு தரு தல் பெருஞ் செயலாகும். அவர்கள் உண்ட தும் தெளிவாகக் காணப்படுகின்றார்கள். அவர் களின் முகத்தில் ஒருவகை ஒளிகாணப்படுகின் றது. 'அப்பா' என்று கூறித் தம் மகிழ்வைத் தெரிவிக்கிறார்கள். அந்தக் காலத்தில் அவர் களைக் காண்பதற்கே நமக்கு மிகுதியும் மகிழ்ச் சியாய் இருக்கிறது.

பசி நீங்கி மகிழ்ந்து செல்லும் முகங்களை ஆமகன் கண்டு உள்ளம் மகிழ்ந்தான். இவ்வாறு சோறு போடுவது உயர்ந்த அறச்செயல் ஆத

லின், பசுமகன் அறத்திற்குத் தூண் போன்று விளங்கினான்.

மேலுலகம் என்று ஒன்று இருக்கின்ற தென்று நீங்கள் அறிந்திருக்கின்றீர்களா? வீட்டில் உங்கள் பெற்றோர் சொல்லியிருப்பார் களே! அந்த உலகத்தில் வாழ்பவன் தேவேந் திரன். அவன் 'பாண்டு கம்பளம்' என்னும் இருக்கையில் இருப்பான்; சிற்சில காலத்தில் அக் கம்பளம் அசையும். அவ்வாறு அசைந் தால் மண்ணுலகத்தில் பெரும் அறச்செயல் செய்கின்றவர் இருக்கின்றார் என்று கொள்ளப் படும். அறிந்தவுடன் புறப்பட்டு வருவான். வந்து அவர்களுக்கு நல்லவரங்களைத் தருவான்.

சாலி மகனைப்போல் அறச்செயல் செய்த வர் உண்டோ? அதன் பயனாக இந்திரன் கம் பளம் அசைந்தது. இந்திரன் சாலிமகனைப் பற்றி உடனே அறிந்தான். அவனுக்கு நல்ல வரங்களைக் கொடுக்கவேண்டும் என்று நினைத் தான். விரைவாக மண்ணுலகத்திற்கு வந் தான்.

தன் சொந்த உருவத்தை இந்திரன் விட் டான்; ஒரு கிழவன் உருவத்தை ஏற்றுக் கொண்டான். ஆமகன் முன்னே வந்தான். "அன்பனே! அறச்செயல் செய்த பெருமை நினக்கு உண்டு. யான் மிக மகிழ்கின்றேன். நான் தேவலோகத்துத் தேவேந்திரன். உனக்கு வேண்டிய வரத்தைக் கொடுப்பதற்காக வந் தேன். அறிவிற் சிறந்தவனே! உனக்கு

வேண்டும் வரங்களைக் கேள்; தருகின்றேன்" என்றான்.

சாலி மகன் கிழவனை உற்றுப் பார்த்தான். இடி இடி என்று சிரித்தான். அவன் சிரித்த சிரிப்பில் அவன் விலா எலும்புகள் முறிந்து விடுவன போன்று இருந்தன. பிறகு அத் தேவனை இழிவாக நோக்கினான், "இந்திரனே! தேவர் நாட்டு அரசனே! மேலுலகத்துத் தலைவனே! இந்த மண்ணுலகத்தில் நல்ல செயல்களைச் செய்தோர் அவற்றின் பயனைத் துய்த்தற்காக நின் நாட்டிற்கு வருகின்றனர். நின்னுடு எவ்வகையான தகுதியை உடையது? அது வெறும் இன்ப நாடு. அங்குத் தவம் செய்யும் முனிவர்கள் இருக்கின்றார்களா? உலக ஆசை ஒழிய வேண்டும் என்று கடவுளை வணங்குவோர் இருக்கின்றார்களா? அறம் செய்வோர் உண்டோ? திக்கற்றோரைக் காப்பாற்றுவோர் உளரோ? இப்படிப் பட்டவர் நின் நாட்டில் ஏது? இன்பக் கடலில் அழுந்தி உலகத்தை மறந்தவர்கள்தானே உனது நாட்டில் வாழ்கின்றார்கள்? என் ஓடு நிரம்ப உணவினைத் தருகின்றது. பசி எனத் துடித்து வருவோருக்குச் சோறு போடுகின்றேன். உண்ணும் அவர்கள் அயர்ச்சி நீங்கி மகிழ்கின்றார்கள். அவர்களுடைய முகமலர்ச்சி எனக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. நீ தரும் வரங்கள் இம்மகிழ்ச்சியினும் மிகுந்த மகிழ்ச்சியினைத் தருமோ? உண்டி உடுப்பன ஆகிய

இவற்றைத்தானே நீயும் தருவாய், வேறு எவற்றைக் கொடுக்க முடியும்?'' என்று சொன்னான்.

இந்திரனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவன் முகம் வாடிற்று. மனம் அழிந்தான். என்ன இவன் செருக்கு, சோறு தரும் ஓடு இவனிடத்திலிருக்கிறது. இதனாலல்லவா இவன் தருக்குடன் பேசுகின்றான். இவன் இறுமாப்பினை அடக்குகின்றேன். ஏழைகளுக்குத்தானே இவன் ஓடு பயன்படும். நாட்டில் ஏழைகளே இல்லாமல் செய்துவிடுகின்றேன். நாடுமுழுவதும் நல்ல மழையைப் பெய்யச் செய்கின்றேன்; வேண்டிய வளங்களையும் உண்டாக்குகின்றேன்; அப்பொழுது பிச்சை எடுப்போர் இல்லாமல் போவர். இவனைத் தேடிக்கொண்டு யாரும் வரமாட்டார்கள். இவன் செருக்குத் தானே தணிந்துவிடும்,'' என்று எண்ணினான். அவ்வாறே மழைபெய்யச் செய்தான்; நாட்டில் வளம் பெருகிற்று.

---

## 4. மணிபல்லவத்து மறைதல்

நாடெங்கும் மழைவளம் சிறந்தது; பச்சைப் பசேலென்று பசும் பயிர் எங்கும் காணப்பட்டது. நெல் பாக்குமரம்போல் வளர்ந்தது. நாடு எல்லா வளங்களும் பெற்றது. ஒவ்வொருவரும் செல்வராயினர். இன்மை என்பது தலைகாட்டா தொழிந்தது. பசியைப் போக்கும் நெல் முதலிய தானியங்களை ஒவ்வொருவரும் தம் வீட்டில் நிரப்பி வைத்திருந்தனர்; ஆதலின், பிச்சை எடுக்க வேண்டிய தன்மை யாருக்கும் இல்லாம லொழிந்தது. ஆமகனுக்கும் சோறு இடும் தொழில் இல்லாதொழிந்தது.

ஒவ்வோர் ஊராய்ச் சென்று அங்குள் ளோரை "உண்ணுகின்றீரா?" என்று அவன் கேட்டான். முன்னே பலர் "எமக்குத் தாய் இவரே! எம் தந்தையும் இவரே! எமக்கு உற வினர் இவரே! உணவிடும் கடவுள் இவரே!" என்று சொல்லிச் சூழ்ந்திருந்தார்கள். இப் போதோ "இவன் யார்? அறிவில்லாதவனாகக் காணப்படுகின்றானே! உண்ணுவோருண்டோ என்று கேட்கின்றானே! இவன் அறிவு ஒழுங் கான நிலையில் இல்லையோ!" என்று கூறிப் பரிகசித்தார்கள்.

ஆமகனைச் சுற்றிலும் கூனரும் குருடரும் ஏழைகளும் எப்போதும் இருப்பார்கள். அவர் களிடையில் சந்திரனைப்போல் அவன் மகிழும் முகத்தோடு நின்றுகொண்டிருப்பான். இப்

போதோ தனியாக இருந்தான். முகமோ வாடிய மலரைப்போல் வதங்கி இருந்தது. பெருஞ் செல்வன் ஒருவன் தன் செல்வத்தை எல்லாம் இழந்தால் எவ்வாறு இருப்பான்? அவனைப் போல நம் நல்ல சிறுவனும் வருந்தினான்.

ஒரு நாள் வேற்றுநாட்டிலிருந்து வந்த பலர் சாலிமகனைக் கண்டார்; வணங்கினர். "அன்பரே! சாவக நாட்டில் மழை இல்லாமல் போயிற்று. ஆதலினால் பஞ்சம் வந்தது. மக்கள் பசியால் துன்புற்று வாடுகின்றனர். நீவிர் அங்குச் செல்லின் நலமாக இருக்கும். உடனே எழுந்தருள வேண்டுகின்றோம்," என்று கூறினார்கள்.

இச்செய்தி அவனுக்குக் கட்டுக்கடங்கா மகிழ்வை உண்டாக்கிற்று. "நாள் நல்ல நாள் தானா? இன்று புறப்படலாமா?" என்றெல்லாம் அவன் கேட்கவில்லை. உடனே புறப்பட்டுப்போகலாம் என்றான். சாவகம் செல்லும் கப்பலில் ஏறினான்.

"பட்டகாலிலே படும்; கெட்ட குடியே கெடும்," என்பது பழமொழி அல்லவா? தீவினை தொடர்ந்து வரும் என்பர் பெரியோர். கப்பல் சென்றுகொண்டிருக்கும்போது பெரும் புயல் காற்று வீசிற்று. கப்பலிலிருந்தோர் மிகுதியும் துன்புற்றார்கள். இடையில், புயல்காற்றின் கொடுமை ஓயும் வரையில் ஒரு தீவில் தங்க வேண்டும் என்று கப்பல் தலைவன் நினைத்தான்.

ஆகவே மணிபல்லவம் என்ற தீவுக்கருகில் கப்பல் நிறுத்தப்பட்டது.

தீவைப் பார்க்கவேண்டும் என்று பலர் ஆசைகொண்டார்கள். ஆகவே பலர் கப்பலினின்றும் இழிந்து தீவினுள் சென்றனர். அவருடன் நம் இளைஞனும் சென்றனன். அங்குத் திக்குக் கொருவராகப் பல காட்சிகளைக் கண்டுகொண்டே சென்றனர்.

கப்பலோட்டி கப்பல் புறப்படப்போவதை அறிவித்தனன். எல்லோரும் கப்பலேறினர். பசுமகன் ஒரு மர நிழலில் தங்கி இயற்கைக் காட்சியில் ஈடுபட்டிருந்தான். அவனுக்குக் கப்பல் புறப்படுவது தெரியாது. கப்பல் தலைவனும் எல்லோரும் ஏறிவிட்டார்கள் என்று தவறாக நினைத்துப் புறப்பட்டுச் சென்றான். ஆமகன் தீவில் தனித்து விடப்பட்டான்! ஐயோ! தீவினையே!

மணிபல்லவம் என்ற அத்தீவு மனிதர் இல்லாதது. மக்கள் நடுவில், தமிழ்நாட்டில், தனியாக இருந்தவன்; இப்போது மனிதர் வாழாத தீவில் தனியாக ஆயினேன். இனிமேல் அவ்வோடு—கலைமகள் பிற உயிரின் பசியைப் போக்கத்தந்த ஓடு—அவன் ஒருவனுக்கே பயன் படும்! "என்ன துன்பம்! அறக் கடவுளே! யான் இப்படி வருந்த என்ன தீச்செயல் செய்தேன். யான் ஒருவன் தனித்துக் கொழுத்து வாழ இவ்வோட்டினைக் கொள்ளமாட்டேன்.

இஃது உலகத்து மக்கள் உயிரைக் காப்பதற்கே பயன்படவேண்டும். யான் இனி உயிர்வாழேன். சாதலே இனி இனிமையானது,'' என்று வருந்தினான்.

எங்கும் நிறைந்த இறைவனை வணங்கினான். அத்தீவில் இருந்த கோமுகி என்ற பொய்கையை அடைந்தான், ''என்னுயிரனைய ஓடே ! பசியை ஒழிக்கும் பண்பு சிறந்த பொருளே ! ஏழைகளின் கண்ணீரைப்போக்கிய என் உயிர்ப்பொருளே ! நாமகள் தந்த நன்கலமே ! நின்னை இந்தப்பொய்கையில் விடுகின்றேன். ஆண்டுக்கு ஒருமுறை நீ வெளியில் தோன்றுவாயாக. அருள் உருவத்துடன் அறச்செயலை மேற்கொண்டவர் எவரேனும் உன்னெதிர் வரின் அவர் கையில் புகுவாய். மீண்டும் உலகத்து ஏழைகளின் பசித்தீயை உன் உணவாகிய நீரால் ஒழிப்பாயாக ! நீ நீடு வாழ்க !'' என்று சொல்லி ஓட்டினைப் பொய்கையில் விடுத்தான்.

அன்று தொடங்கி ஒன்றும் உண்ணாது கடவுளை நினைந்துகொண்டிருந்தான். உணவு தானே உயிரை உடலில் வாழச் செய்கின்றது. உணவு இல்லையேல் இறக்கவேண்டியது தானே! சின்னாளில் ஆமகன் அறக்கடவுள் திருவடிகளை அடைந்தான்.

அன்பர்களே ! உங்களை ஒத்த சிறுவன் ஒருவனின் வரலாற்றினைக் கேட்டீர்கள். இவன்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் வாழ்ந்தவன். இவனுடைய வரலாறு மணிமேகலை என்ற அழகிய நூலிலே சொல்லப்பட்டிருக்கின்றது. நீங்களும் இவனைப் போல் அறச்செயலில் ஈடுபடுவீர்கள் அல்லவா?

---

## 5. முருகவேள் திருமணம்

பாண்டி நாட்டிற்குத் தலைநகரமாக மதுரை விளங்கிற்று. அந்த நகரத்தில் வாழ்ந்த மக்கள் சிலர் காலையில் நான்கு மணிக்கெல்லாம் வழக்கமாக எழுந்திருப்பார்; வேறு சிலர் சோம்பலுடன் படுக்கையில் படுத்துக்கொண்டிருக்க ஆசைப்படுவார்கள்; ஆனால் அவர்களை வேறு சில ஒலிகள் எப்படியேனும் எழுப்பி விடும். அந்த ஒலிகள் எவை? மாணவர்கள் பாடங்களைப் படிக்கும் ஒலி, புலவர்கள் நூல்களை ஆராயும் ஒலி, ஆகியவையே அவை. மதுரை நகரம் முழுவதும் காலை நேரத்தில் தமிழொலி நிறைந்திருக்கும். தமிழ்ச் சங்கங்கள் விளங்கிய இடம் அல்லவா அது!

ஒருநாள் காலை நேரம்; ஞாயிறு வானத்தை அடையவில்லை. அந்தக் காலத்தில் மதுரை மக்கள் மனக்கிளர்ச்சியுடன் இருக்கின்றார்கள்; எல்லோரும் காலையில் எழுந்ததும் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து விட்டனர்; நீராடி இருக்கின்றனர்; நல்ல அணிகளை அணிந்துகொண்டனர்; அழுக்கில்லாது வெள்ளை வெளேரென இருக்கும் ஆடைகளை உடுத்துக்கொண்டனர். அவரவர்களின் தகுதிக்கும் செல்வ நிலைமைக்கும் பொருந்த வாகனங்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். சிலர் குதிரைமேல் ஏறினர்; சிலர் தேர்மீது அமர்ந்தனர். சிலர் கொல்லாப்பண்டி என்ற ஒருவகை மூடுவண்டியில் ஏறிக்கொண்டனர்.

எல்லோரும் மேற்குத் திக்கு நோக்கிச் சென்றனர்; இவர்கள் உடையின் வெண்ணிறத்தால் இருள் ஒழிந்தது; அவர்கள் பேச்சாகிய ஒலி எங்கும் நிறைந்திருந்தது; ஆகவே ஞாயிறு தோன்றாதிருந்தும் நகரம் முழுவதும் ஒளியும் ஒலியும் பரவி இருந்தன.

இந்த மக்கள் மேற்குநோக்கிச் செல்லக் காரணம் என்ன? திருப்பரங்குன்றம் என்னும் அழகியமலை மதுரைக்கு மேற்கே ஐந்து கல் தொலைவில் இருக்கின்றது. அந்த மலையில் முருகக் கடவுள் கோயில் இருக்கின்றது. அந்தப் பெருமானுக்குத் திருவிழா நடக்கின்றது. அந்த விழாவைக் கண்டு களிப்பதற்காகவே மக்கள் செல்லுகின்றார்கள். இவர்கள் கடவுள் அன்பை என்ன என்று சொல்வது! வைகறையில் எழுந்தார்கள்; கடமைகளைச் செய்தார்கள்; தூய்மையான உள்ளத்தோடு இறைவன் திருக்கோவிலுக்குச் செல்கின்றனர். அன்பர்களே! நீங்களும் இவ்வாறு கடவுளன்பு உடையவர் தாமே!

இப்பொழுது எல்லோரும் திருப்பரங்குன்றத்தை அடைந்தனர். அவரவர்களும் ஏறி வந்த வாகனங்களாகிய தேர் குதிரை முதலியவற்றைப் பாதையின் இருபுறத்திலும் விட்டனர். யானைகள் கூட்டம் கூட்டமாக விளங்கின; குதிரைகள் பந்தி பந்தியாகக் காணப்பட்டன; தேர்கள் அணி அணியாக நின்றன. இந்தக் காட்சியைக் கண்டோர் அரசன் பகை

வர்மேல் போருக்குச் செல்வதற்குத் தன் சேனையை ஒழுங்குசெய்து வைக்கின்றானோ என்று நினைப்பார்கள். செல்வத்தால் பொலிந்த மதுரை மக்களின் பெருமைதான் என்ன !

மக்கள் மலைமேல் ஏறத் தொடங்கினர். மலைப்பக்கங்களில், பச்சை இலைகளுடன் ஆம்பல் மலர்ந்திருக்கின்றது. காந்தள் மலர் நல்ல மணத்துடன் குலை குலையாகப் பூத்திருக்கின்றது. எருவை என்னும் மலர் அருமையாகக் காணப் படுகின்றது. வேங்கைப் பூ சிவப்பாக விளங்கு கின்றது. தோன்றிப் பூ அழகாகக் கொத்துக் கொத்தாகப் பூத்திருக்கின்றது. நறவம், கோங்கு, இலவம், மற்ற மலர்கள் எல்லாம் சிறப்பாகப் பூத்துக் கமழ்கின்றன. பார்ப்போருக்கு இவை, தெளித்து வைத்தவற்றைப் போலவும், கட்டின மாலைகளைப் போலவும், தூக்கிக் கட்டப்பட்ட மாலைகளைப் போலவும் விளங்கிக்கொண்டிருக் கின்றன. இந்தக் காட்சி காலைப் பொழுதில் மலையின்மேல் பல நிறங்களையுடைய மேகக் கூட்டங்கள் தங்கியிருத்தலைப் போன்றிருந்தது. இதனைக் கண்ட மதுரை நகரத்தார், "இயற்கை அழகை எப்படிச் சொல்ல முடியும். கடவுளின் படைப்பு இந்த இயற்கையில் வெளியாவதைப் பாருங்கள்; எல்லாம் முருகன் செயல்," என்று சொல்லி மகிழ்ந்தார்கள்.

எல்லோரும் கோயிலுள் சென்றார்கள். அங்குக் கோயிலின் முன்புறத்தில் யானை ஒன்று கட்டப்பட்டிருக்கின்றது. அந்த யானை முருக

னின் ஊர்தி என்று உரைக்கப்படும். ஆதலின், அதன் மத்தகத்தில் குங்குமத்தை அப்பிப் பூக் களைச் சூடுகின்றனர்; அதன் செவியில் வெண் சாமரைகளை அணிகின்றனர்; குடையை அதன் மேல் பிடிக்கின்றனர்; கவளம் கவளமாக உண வைத் தருகின்றனர். இவ்வகையாக யானையை வழிபடுகின்றனர்.

மேளங்கள் அடிக்கப்படுகின்றன. முரசுகள் ஒலிக்கின்றன. சின்னம் ஊதப்படுகின்றது. 'ஓ' என்ற பேரிரைச்சல் உண்டாகின்றது. எல்லோர் கண்முன்னும் முருகன் வள்ளியம்மையுடன் காட்சி அளிக்கின்றான். அந்தக் கண்கொள்ளாக் காட்சியில் யாவரும் ஈடுபடுகின்றனர்; மனம் உருகுகின்றனர்; கைகள் தலைமேல் கூடுகின்றன; கண்ணீர் மலையருவிபோல் வழிந்தோடுகின்றது; உருக்கத்தால் உடல்கள் அசைகின்றன.

"முருகா! முருகா! எம் முயிரைக் கா. செவ்வேளே! எங்கள் உள்ளத்து உறையும் ஒப்பற்ற ஒருவனே! தங்கள் உடையும் தாங்கள் சூடிக்கொண்டிருக்கும் மாலையும் செந்நிறத் தோடு விளங்குகின்றன. தங்கள் கையிலுள்ள வேலும் செம்மையாக ஒளிவிடுகின்றது. தங்கள் திருவுடல் செந்தணல்போன் றிருக்கின்றது; தங்கள் திருமுகம் கருணை பொழிகின்றது; அலர்ந்த செந்தாமரைபோல் சிறக்கின்றது. பெருமானே! அறிவில் இழிந்த நாங்களும் உய்யவேண்டும் என்று நினைத்தீர்; இம்மலையில் இந்தக் கடப்ப மரநிழலில் எழுந்தருளி இருக்

கின்றீர். அன்று ஒருநாள் விண்ணுலகத்தி லுள்ள தேவர்கள் தங்களிடம் வந்தார்கள். வணங்கினார்கள். எங்களைத் துன்புறுத்தும்



முருகன் வள்ளியம்மையுடன் காட்சி தருகிறான்.

அசுரனை அழித்தருள்வாய் என்று வேண்டினர். அவர்கள் விண்ணப்பத்திற்கு மனம் இரங்கினீர். அசுரனை அழித்துத் தேவர்களைக் காப்பாற்றி

னீர். இன்றும் எங்களைத் துன்புறுத்தும் வீணாசை, பொய், சினம் முதலிய தீயகுணங்களை ஒழித்து எங்களைக் காப்பாற்றவேண்டும். செந்தமிழ்ப் புலவரே! தங்களை முத்தமிழால் ஏசினோர்க்கும் வரங்கொடுக்கும் தங்கள் உள்ளத்தை எவ்வாறு புகழ்வோம்! இறுதியாக எங்கள் வரத்திற்குச் செவிசாய்க்கவேண்டும். எங்களுக்குப் பொன்னும் பொருளும் போகமும் வேண்டா. எங்களுக்கு வேண்டுவன அருள், அன்பு, அறம் என்னும் மூன்றே. முருகா! அன்போடு இவற்றைத் தருக!" என்று நாத் தழுதழுக்க யாவரும் வேண்டுகின்றனர். இறைவனை வணங்கிய மக்கள் சிறு சிறு கூட்டங்களாகப் பிரிந்தனர். அங்குள்ள பல காட்சிகளைக் காணத் தொடங்கினர்.

மலையில் பல மண்டபங்கள் இருக்கின்றன. ஓவிய மண்டபத்துள் சில கூட்டஞ் சென்றன. அங்குத் தீட்டப் பெற்றிருக்கும் ஓவியங்களை அறிந்தவர்கள் அறியாதவர்களுக்கு அறிவிக்கின்றனர். நாண்மீன்கள், ஞாயிறு, மதி முதலியன விண்ணில் எவ்வாறு அமைந்திருக்கின்றன என்பதை ஓர் ஓவியம் காட்டுகின்றது; காமன், அவன் மனைவி ஆகிய இருவருடைய எழில் நிறைந்த ஓவியம் சிலர் கண்களுக்கு விருந்தாக இருக்கின்றது. 'ஓடுகின்ற அப்பூனை இந்திரன்; சினத்துடன் நிற்பவர் கௌதம முனிவர்; கல்லுருவம் அகலிகையினுடையது,' என்று சிலர் சுட்டிக்காட்டுகின்றனர். 'இதனை விளக்கமாகக் கூற வேண்டும்,' என்றொருவர் கேட்கின்றார்.

முன் கூறியவர், 'தேவர்களின் தலைவன் இந்திரன். அவன் பிறர் மனைவியைக் கண்ணெடுத்துப் பார்த்தாலும் இழிவு என்பதை மறந்தான். கௌதமர் என்பவர் சிறந்த முனிவர்; அவர் ஐம்பொறிகளையும் வென்று தவம் செய்துகொண்டிருந்தனர்; அவருக்கு அகலிகை என்று ஒரு மனைவி இருந்தாள்; அவள் அழகில் மிகுந்திருந்தாள். அவளை இந்திரன் களவுத்தனமாகக் கூடவேண்டும் என்று எண்ணினன்.

'ஒரு நாள் முனிவர் காலையில் நீராடச் சென்றிருந்தார். அக்காலத்தில் இந்திரன் முனிவரைப்போல் உருவம்கொண்டு அகலிகையைக் கலந்தான். அப்பொழுது முனிவரும் வந்தனர், வந்ததை அறிந்த இந்திரன் பூனை உருவம்கொண்டு ஓடினன். அவர், தம் மனைவி கல்லாகப் போகவேண்டும் என்று சபித்தார். அவள் உடனே கல்லாக மாறிவிட்டாள். இந்தக் கதையினைத் தான் இந்த ஓவியம் நமக்கு நினைவூட்டுகின்றது,' என்றுரைத்தார். எல்லோரும் அவ்வோவியத்தை மேலும் கூர்மையாக நோக்கினர்கள்.

பத்தாண்டுகளும் நிரம்பாத இளம்பெண் ஒருத்தி பெற்றோர்களை விட்டுப்பிரிந்தாள்; மலைக்காட்சிகளைக் கண்டுகொண்டே சென்றாள். மீண்டும் திரும்பி வந்தாள்; ஆனல் அவளுக்கு வழி தெரியவில்லை; ஆதலின் 'என்ன செய்வேன்' என்று ஏங்கித் திகைத்தாள்.

'அம்மா! அப்பா!' என்று வாய்விட்டுக் கத்தி அழைத்தாள். மலையில் ஒருவர் 'ஓ' என்றால் அவ்வொலியே மீண்டும் கேட்கும். அன்பர்களே! நீங்களும் இவ்வாறு கேட்டிருக்கின்றீர்களல்லவா? ஆகவே, அப்பெண்ணின் குரல் ஒலியே மீளவும் 'அம்மா அப்பா' என்றது. அந்தச் சிறுமி அறியாமையால் தன்னைத் தன் பெற்றோரே அழைக்கின்றார்கள் என்று நினைத்து ஒலி வந்த வழியே ஓடினாள். அங்கு யார் இருப்பார்கள்? கல்லும் முள்ளும் கரடுமுரடான கற்களுமே காணப்பட்டன. இவளைப்போலவே பலரும் வழியறியாது திகைத்துக்கொண்டிருந்தனர். இவ்வாறு திகைப்பு ஒருபுறம்!

மலையின் மேல் குரங்குகள் பல வாழ்கின்றன. திருவிழாவிற்குச் சென்ற மக்கள் இந்தக் குரங்குகளுக்குப் பழங்களையும் தின்பண்டங்களையும் தருகின்றனர். அவை சிறிது தொலைவிலிருந்து முதலில் தின்கின்றன. பிறகு கொடுப்போர் அருகே வந்ததும் அவர்கள் கைகளிலிருந்தும் தின்கின்றன. கிடைத்த உணவை அக்குரங்குகள் தின்பதையும், தம் தாடையில் அடக்கிக் கொண்டிருத்தலையும் கண்டு மகிழ்கிறார்கள். சிலர் யானைகளுக்குக் கரும்பைக் கொடுக்கின்றனர். பிற விலங்குகள் உண்டு மகிழ்வதைக் கண்டு மகிழ்வோர் ஒரு புறம்!

சிலர் குழல், யாழ் முதலிய இசைக் கருவிகளை மீட்டுகின்றனர். முருகன் புகழை அக்

கருவிகளில் அமைத்துப் பாடுகின்றனர். மனம் உருகுகின்றனர். இனிய இசையுடன் கூடிய வீணையில் இசைந்து நிற்பவன் இறைவன் முருகன். ஆதலின், அவனும் அந்த இசை வெள்ளத்தில் ஆழ்ந்து மகிழ்கின்றான். இங்ஙனம் இறைஇசையில் மகிழ்வோர் ஒரு புறம்!

சிறுமியர் சிலர் மலைச்சுனையை அடைகின்றனர். அச் சுனையின் அருகில் பல மரங்கள் நறுமலருடன் விளங்குகின்றன. மலர்க் கொம்புகள் சிலவற்றை அச்சிறுமியர் ஒடிக்கின்றனர்; சுனையில் எறிகின்றனர். கொம்புகளில் மலர் மொட்டுகள் இருக்கின்றன. அக் கிளைகள் தண்ணீரில் அமிழாது எடுத்த தலையுடன் மிதக்கின்றன. அவற்றைக் கண்ட அப்பெண்கள் "இது ஐந்து தலை நாகம்போலும்! அவை அதன் குட்டிகள் போலும்!" என்று கூறி அஞ்சினவர்களைப்போல் ஓடுகின்றனர். இதைப் போல் பொய்த்துன்பம் அடைவோர் ஒரு புறம்.

ஒருபுறத்தில் ஆண்டுகள் முதிர்ந்த கிழவி சிறு பையன் ஒருவனுடன் இருக்கின்றாள். பையன் கிழவியைப் பார்த்து, "இந்தத் திருவிழா யாருக்குப் பாட்டி?" என்று கேட்கின்றான்.

பாட்டி—"நம்மைக் காப்பாற்றும் முருகக் கடவுளுக்கு இந்தத் திருவிழா உரியது."

பையன்—"என்ன திருவிழா பாட்டி?"

பாட்டி—"முருகனுக்குத் திருமண விழா!"

பையன்—“அஃது எப்பொழுது நடந்தது ?”

பாட்டி—“அது பழங்காலத்தில் நடந்தது. அந்த நிகழ்ச்சியை இப்பொழுதும் கொண்டாடுகின்றூர்கள்.”

பையன்—“ஆமாம் பாட்டி ! நீ சொல்வதெல்லாம் எனக்கும் தெரிகின்றது. ஆனுல் முருகன் திருமணத்தை எப்படிச் செய்துகொண்டான். சொல்லு பாட்டி !”

பாட்டி—“நாம் இப்பொழுது எங்கே இருக்கின்ரேும் ? தெரியுமா ?”

பையன்—“தெரியும் பாட்டி. திருப்பரங்குன்றம் என்னும் மலையின் மேல் இருக்கின்ரேும்.”

பாட்டி—“இந்த மலைக்கு வடக்கே பல கல் தொலைவில் வள்ளிமலை என்று இன்றும் ஒரு மலை இருக்கின்றது. அதனை நம்பி என்ற வேடுவர் தலைவன் அரசாண்டான். அவனுக்குப் பிள்ளை இல்லாமலிருந்தது. நம் கடவுளாகிய முருகனை வேண்டினுன். வள்ளிக் கிழங்கு தோண்டி எடுக்கப்பட்ட குழியிலிருந்து ஒரு பெண்குழந்தை கிடைத்தது. அக்குழந்தையை நம்பி வள்ளி என்று பெயர் கொடுத்து வளர்த்து வந்தான்.

பையன் — “அந்த வள்ளியம்மையைத்தான் நம் முருகன் மணந்தானு ?”

பாட்டி—"ஆம், அந்த நாளைக் கொண்டாடுவதுதான் இன்றைய திருவிழா"

இவ்வாறு முருகன் மணந்ததைப் பேசும் கூட்டம் ஒருபுறம்.

மக்கள் மணத்தில் மகிழ்ந்து, இறைவனை வணங்கித் தத்தம் வீட்டிற்குச் செல்கின்றனர்.

**வாழ்த்து.**

ஆறிரு தடந்தோள் வாழ்க
 அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
 குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
 யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
 வாழ்கசீர் அடியா ரெல்லாம்

முருகன் திருவடி போற்றி

# மேற்கோள் விளக்கம்

## (எண் பக்கங்களைக் குறிக்கும்)

### 13

'குற்றமே.......பகை' அற்றம் - (தனக்கு) முடிவினை, தரூஉம் - தரத் தகுந்த, பகை - பகையானது, குற்றமே - குற்றமாகும். (ஆதலினால்) குற்றமே - அக் குற்றமானது, பொருளா - தன்னிடத்து வராதிருத்தலையே (பெறவேண்டிய) பயனாகக்கொண்டு, காக்க - காக்கவேண்டும்.

### 15

'எழு......பெறின்.' பழி பிறங்கா-பிறரால் இழிவாகப் பேசப்படும் பழித்தன்மை இல்லாத, பண்புடை-உயர்ந்த பண்புகளோடு கூடிய, மக்கள் - பிள்ளைகளை, பெறின் - பெற்றெடுத்தால், எழு பிறப்பும் - ஏழு பிறப்பிலும், தீயவை - (பெற்றோரைத்) தீய துன்பங்கள், தீண்டா - சென்று அடையமாட்டா.

### 20

'தெய்வம்......மழை.' தெய்வம் - கடவுளை, தொழாஅள் - வணங்காதவளாய், கொழுநன் - தன் கணவனை, தொழுது எழுவாள் - தொழுது துயிலெழுவாளாகிய கற்புடையவள், பெய் என - பெய்வாயாக என்று கட்டளையிட, மழை - மழையானது, பெய்யும் - பொழியும்.

### 22

'அடாது.......படுவர்.' அடாது - தகாத செயல்களை, செய்வோர் - செய்கின்றவர்கள், படாது - கொடுமையான துன்பங்களை, படுவர் - அடைவார்கள்.

### 25

'தேருந்தொறும்......தமிழ்.' தமிழ் - தமிழ் மொழியானது, தேருந்தொறும் - ஆராயுந்தோறும், இனிதாம் - மிக இனிமையாக இருக்கும்.

26

'கற்றாரை......காமுறுவர்.' கற்றாரை - படித்த அறிஞர்களை, கற்றாரே - கற்ற அறிவுடையவரே, காமுறுவர் - விரும்பிக் கொள்ளுவர்.

31

'செல்வத்து......பயனே.' செல்வத்து - செல்வத்தினுடைய, பயனே-பயனாவது, ஈதல்-பிறருக்குத் தருதலாம். துய்ப்பேம் எனினே - தனித்துப் பயன்படுத்திக் கொள்வோம் என்று கருதினால், பல - பல வழியில், தப்புந - தவறிப்போகும்.

செல்வத்தைப் பலருக்கும் கொடுத்துத் தானும் பயன் படுத்திக்கொள்ளல் வேண்டும்.

'ஈதல்.......உயிர்க்கு.' ஈதல் - ஏழைகளுக்குக் கொடுங்கள். இசைபட - புகழ் உண்டாகுமாறு, வாழ்தல் - வாழ்க. அது அல்லது-அப் புகழைத் தவிர்த்து, உயிர்க்கு - உயிருடன் கூடிய மக்களுக்கு, ஊதியம் இல்லை - பயன் வேறு கிடையாது.

'இரவலர்......இனியர்.' இரவலர் - யாசகர்கள், தமரினும் - உற்ற உறவினரினும், இனியர் - இனிமையைத் தரத் தகுந்தவர்கள்.

செல்வம் உள்ள காலத்து உடனிருந்து நீங்கும் உறவினரைவிட யாசித்துப் பொருள்பெறுதலால் பொருளைத் தந்தவனுக்கு உயர்கதியைத் தரும் யாசகர் உயர்ந்தவர் ஆவர்.

32

'எண்ணும்......தகும்.' எண்ணும் - எண் என்று சொல்லப்படுவனவும், எழுத்தும்-எழுத்து என்று கூறப்படுவனவும், கண் எனத் தகும் - உயிர்களுக்குக் கண்கள் போன்று தகுதி வாய்ந்தன ஆகும்.

38

'இளமை....செய்' இளமையும்-இளமைப் பருவமும், நில்லா-நிலைத்து நிற்காது; யாக்கையும்- உடலும், நில்லா - அழிந்தொழியும்; வளவிய - வளத்தோடு பொருந்திய, வான் - சிறந்த, பெரும் - பெரிய, செல்வமும் - பொருளும், நில்லா - அழியும்; புதல்வரும் - பெற்றெடுத்த மக்களும், புத்தேள் உலகம் - தேவ உலகத்தினை, தாரார் - கொடுக்க மாட்டார்கள்; மிக்க - சிறந்த, அறமே - தருமமே, விழுத் துணை ஆவது - தக்க துணையாக விளங்கும். (ஆதலின்) தானம் - அறத்தினை, செய் - செய்வாயாக.

47

'கற்றதனால்.........எனின்.' கற்றதனால் - நூல்களைப் படித்ததினால், ஆய - உண்டாகிய, பயன் - பயனாவது, என் கொல் - என்ன இருக்கின்றது? வாலறிவன் - தூய்மை யாகிய அறிவினையுடைய இறைவனுடைய, நல் தாள்-பிறவி யைக் கெடுக்கும் நல்ல திருவடிகளை, தொழா அர் எனின்- வணங்காமற் போனால்.

48

'எவ்வுயிரும்........இரு.' எவ்வுயிரும்-எத்தகைய உயி ரையும், நீங்காது - விட்டு நீங்காது, இறை சிவன் - இறைவ னாகிய சிவபெருமான், உறையும்-தங்கியிருப்பான், என்று- என்று கருதி, எவ்வுயிர்க்கும் - எல்லா உயிர்களிடத்திலும் அன்பாய் இரு - அன்புடனே இருப்பாயாக.

79

'ஆறிரு......எல்லாம்.' ஆறிரு - பன்னிரண்டு, தடம்- விசாலமான, தோள் - தோள்களெல்லாம், வாழ்க -, அறுமுகம் - ஆறு திருமுகங்களும், வாழ்க, வெற்பை - கிர வுஞ்சம் என்னும் மலையை, கூறுசெய் - பிளந்த, தனி - ஒப் பற்ற, வேல் - வேலாயுதம், வாழ்க-, குக்குடம் - சேவற் கொடி, வாழ்க-, செவ்வேள் - முருகன், ஏறிய-ஏறி அமர்ந் திருக்கும், மஞ்ஞை-மயில், வாழ்க-, யானை தன் அணங்கு- தெய்வயானை அம்மை, வாழ்க-, மாறு இலா-வேறுபாடில் லாத, வள்ளி - வள்ளியம்மை, வாழ்க-, சீர் - சிறப்பொடு கூடிய, அடியாரெல்லாம் - அடியார்கள், வாழ்க-.




# அருஞ்சொற் பொருள்

[எண் பக்கங்களைக் குறிக்கும்]

5

உரம் - பலம்.

6

குருதி - இரத்தம்

7

அலுப்பு - இளைப்பு

ஓய்வு - அசைவற்றிருத்தல்

8

நாடோடி-எங்கும் திரிபவன்

காய்ந்தது - உலர்ந்தது

விநாடிகாலம்-மிகக் குறைந்த நேரம்

9

நீண்ட தூக்கம் - விழிக்காமல் உறங்குதல், இறந்து போதல்

11

கொற்றவன் - அரசன்

சினத்தைக் கெடுத்தல் } கோபத்தை ஒழித்தல்

20

மாசு - குற்றம்

21

பொருளுரை - பயன் தரும் நல்லுரை

ஒப்பனை - அலங்காரம்

22

ஏவல் - கட்டளை

ஒற்றர்-மறைந்திருந்து அறிவோர்

25

உடல் பூரித்தல் - மகிழ்ச்சியால் மயிர்க்கூச்செறிதல்

28

அலர்மொழி - பழிமொழி

29

கன்னிமாடம் - மணம் ஆகாத பெண்கள் தங்கி இருக்கும் தனி இடம்

31

நைந்து - துன்புற்று

32

சுவடி - புத்தகம்

39

நம்பி - சிறந்த ஆண்மகன்; இங்கே தத்தனைக் குறிக்கும்

37

அருமருந்து-அமிழ்தம்

39

மடமை - அறிவின்மை

40

கமர் - நிலப் பிளப்பு

41

நஞ்சு - விடம்
அணி - ஆபரணம்
கழுவாய் - தவற்றினை நீக்கிக் கொள்ளும் வழி

42

ஞாயிறு - சூரியன்

44

வேதம் - கடவுளை அறிவிக்கும் நூல்

49

கூர்ந்து - பார்த்தல் } உற்றுநோக்குதல்
யமன் - உயிரை உடலிலிருந்து நீக்கும் தொழிலினை உடையவன்

52

கைம்மாறு - ஒருவர் செய்த உதவிக்கு மீளவும் உதவி செய்தல்

53

சீற்றம் - வெகுளி, கோபம்

54

குமரி - குமரி தீர்த்தம்: இது தென்கோடியில் உள்ளது

55

கசடன் - இழிந்தவன்

59

ஒளியே - ஒளி உருவமாக இருப்பவளே
முதல்வி - முற்பட்டவள்

74

முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூன்று கூறுபாடுகளை உடைய தமிழ்
ஓவிய மண்டபம் - சித்திரங்கள் எழுதப்பட்ட மண்டபம்
எழில் - அழகு

77

மொட்டுகள் - அரும்புகள்



